# புல்லரிக்கும் மக்ளீன்ஸ் சுவை மூலம் உங்கள் வாய்க்குப் புதுமலர்ச்சி புகட்டுவீர்!

**மக்ளீன்ஸ்**

**3 வகைகளில் செயலாற்றுகிறது**

1 சுத்தமாக்க — சொத்தை விழக் காரணமான உணவுத் துணுக்குகளை அகற்றுகிறது.

2 வெண்மையாக்க — மங்கல் படலத்தைப் போக்கிப் பற்களுக்கு மெருகிடுகிறது.

3 காக்க — திட வலுவுள்ள ஆரோக்கியமுடன் உங்கள் பற்களைப் பராமரிக்கிறது




அதிவெண்மையான பற்களுக்கு —

# மக்ளீன்ஸ்

MTP-I-P-I-65/66 TM



# ஸ்ரீமதி இந்திரா காந்தி

புதிய பாரதப் பிரதமருக்கு

நமது நல்வாழ்த்துக்கள்



# கல்கி

*

நீங்கள் கடவுளை நம்பினால், உங்கள் உள்ளத்தில் ஆழ்ந்து அங்கே உறைபவரிடம் உங்கள் கைகளைத் தீமையினின்றும் விலக்கி, நன்மையில் ஈடுபடச் செய்ய வேண்டிக் கொள்ளுங்கள் என உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். — காந்திஜி

*

## பொருளடக்கம்


விசுவாவசு தை 17 ● ஜனவரி 30





மலர் 25 ● இதழ் 27

# புதிய பிரதமர்

**பா**ரதத்தின் நாற்பத்தைந்து கோடி மக்களுடைய நல்வாழ்வுக்குப் பயனுள்ள வகையில் பணி புரியக் கூடிய சக்தி வாய்ந்தவர் இந்நாட்டின் பிரதமர். இம்மாபெரும் பொறுப்பை இளம் வயதிலேயே பெற்றுள்ள ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் விவேகத்துடன் செயலாற்றிப் பிரச்னைகளைத் தீர்க்க முயல வேண்டுமென ஆண்டவனைப் பிரார்த்திக்கிறோம்.

உள் விவகாரத்தில் பெர்மிட் — லைசென்ஸ் சலுகை ஆட்சியும், வெளி விவகாரத்தில் கூட்டுசேராக் கொள்கையும் அமுலில் உள்ளவரை எவர் பிரதமராக இருப்பினும் நாட்டுக்கு விசேஷ நலன் எதையும் செய்துவிட முடியாது. எனினும், காங்கிரஸ் கட்சி தரக் கூடிய தலைவர்களுக்குள் சிறந்த ஒருவரை ஸ்ரீ லால்பஹாதுர் அவர்களிடம் கண்டோம். தீவிரவாதம் புரியும் இடதுசாரியைச் சேராதவராக இருந்தார் அவர். பெரிய ஆலைத் தொழில்களை விட விவசாயத்துக்கே முக்கியமான இடம் தர வேண்டுமென்பதை உணர்ந்திருந்தார். அண்டை நாடாகிய பாகிஸ்தானுடன் சமாதானத் தீர்வு காண்பதில் மனப்பூர்வமாக முயன்றார்.

இந்தத் துறைகளில் ஸ்ரீமதி இந்திரா காந்தி எப்படி நடந்து கொள்ளப் போகிறார்? ஸ்ரீமதி இந்திரா அவர்கள் இடதுசாரி என்பதாகப் பொது அபிப்பிராயம் இருப்பினும் அவர் சமீபத்தில் 'தாம் இடதுசாரியும் அல்ல; வலதுசாரியும் அல்ல; மத்தியில் இருப்பவர்' என்று கூறியிருப்பது ஓரளவு ஆறுதலளிக்கிறது. தாஷ்கெண்ட் ஒப்பந்தத்தை மதிக்க வேண்டியதன் அவசியத்தை அவர் குறிப்பிட்டிருப்பதும் ஒரு நல்ல சூசகம்.

எடுத்த எடுப்பில் கூறப்படும் வாசகங்களை வைத்துக் கொண்டு முடிவாக எதுவும் சொல்வதற்கில்லை. ஏனெனில் ஸ்ரீமதி இந்திராகாந்தி எந்த அளவுக்குச் சுதந்திரமாகச் செயலாற்றப் போகிறார், எந்த அளவுக்குப் பொம்மலாட்டப் பாவையாக இருப்பார் என்பதை நாம் இப்போது அநுமானிப்பதற்கில்லை. எனினும், மேற்சொன்ன இரண்டு அம்சங்களில் அவரது போக்கு வரவேற்கத் தக்கதா யிருக்கிறது.

இதே சமயத்தில் வேறு இரண்டு அம்சங்களில் அவர் ஆட்சேபத்துக்குரிய கருத்துக்களைத் தெரிவித்துள்ளார். 'நாடு முழுவதற்கும் ஓர் இணைப்பு மொழி அவசியம்; அது ஹிந்தியாகத்தான் இருக்க முடியும்' என்று அவர் கூறியுள்ளார். பிரத்தியட்சமாக நூற்றைம்பது ஆண்டுகளாக ஆங்கிலம் ஓர் அற்புத இணைப்பு மொழியாகப் பணி புரிந்து வருகையில், புதிதாக இணைப்பு உருவாக வேண்டுமென அவர் கூறியிருப்பது விந்தை. ஆட்சி மொழி விஷயத்தில் அவர் இன்னும் விசால மனப்பான்மையைப் பெற வேண்டுமென்பதே நம் விருப்பம்; பெறுவார் என்பதே நம் நம்பிக்கை.

விவசாய அபிவிருத்திக்கு முதலிடம் தரப்படுமா எனக் கேட்டபோது விவசாயமும் ஆலைத் தொழிலும் சமமான முக்கியத்துவம் பெற்றவை என்று அவர் 'கோடி' காட்டியிருப்பதும் சரியான சிந்தனைப் போக்கைக் காட்டவில்லை.

மொத்தத்தில் ஸ்ரீ பிரகாசா விரும்புவது போல் நேருஜியின் கொள்கைகளையெல்லாம் மாற்ற வேண்டியது ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்களின் பொறுப்பு. ஆனால் இந்த விருப்பம் நிறைவேறும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஸ்ரீ லால் பஹாதுரின் வழியை அவர் பின்பற்றினாலே நாம் திருப்திப்பட வேண்டியது தான்.

புது பிரதமர் மெல்லியலாரான பெண்ணினத்தைச் சேர்ந்தவர். எனினும் 'சக்தி' என்பதையே பெண்மையாகக் கருதும் நாடு இது. மேலும் உள்ளத் திண்மை வாய்ந்த ஒரு மகத்தான பரம்பரையின் வாரிசு அவர். எனவே தம்மீது சார்ந்துள்ள பெரும் பொறுப்புக்கு அவரால் ஈடு கொடுக்க முடியும் என நம்பி வாழ்த்துகிறோம்.

# உதவிபுரிவதற்கோர் உயர் கழகம்

**நா**ளுக்கொரு சட்டமும், நிமிஷத்துக்கொரு கட்டுப்பாடுமாக உள்ள இன்று நம் யாவருக்கும் பற்பல இனங்களில் ஐயங்கள் எழுகின்றன. வரிகள் குறித்தும், முதலீடு செய்வது குறித்தும் பல விஷயங்கள் தெரிவதில்லை. சொத்து நிர்வாகம், கல்வி, நீதிமன்ற விஷயங்கள் இவற்றில் நுணுக்கமான யோசனைகள் பெறப் பல தனி மனிதர்களும் குடும்பத்தினரும் விரும்புவார்கள். வாலிபர்கள் பலர், 'பெர்ஸனலிடி டெஸ்ட்' பற்றிச் செம்மையான யோசனை கூறுவாருண்டா, பயிற்சி அளிப்பாருண்டா என ஆவலுடன் தேடுகிறார்கள். தொழில் நடத்துபவர்களும் நடத்த இருப்பவர்களும் ஸ்தாபனம் அமைப்பதிலும், நிர்வகிப்பதிலும், கணக்குகள் வைப்பதிலும், தொழிலாளர் சட்டங்களிலும், விளம்பரத்திலும், மற்றும் இன்று வர்த்தக உலகில் இடம் பெற்று விட்ட பல சிக்கலான அம்சங்களிலும் சீரிய யோசனைகளைப் பெற மிகவும் விரும்புவார்கள் என்பதில் ஐயமில்லை.

இவ்வாறாக வீட்டுப் பிரச்னையிலிருந்து அயல்நாட்டினருடன் கூட்டாகத் தொழில் நடத்துவது வரையில் பல அம்சங்களில் யோசனை கூறவும், அவசியமாயின் பயிற்சி அளிக்கவும், ஒரு ஸ்தாபனம் அமைக்கப்பட்டிருக்கிறது எனில் அது மிகவும் வரவேற்கத் தக்கதன்றோ? முன்னாள் போலீஸ் கமிஷனர் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி அய்யங்காரைத் தலைவராகக் கொண்டு அமைந்துள்ளது இந்த நிபுணர் சேவைக் குழு. பற்பல துறைகளில் நற்பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள நிபுணர்கள் இந்தக் குழுவில் அங்கம் வகிக்கிறார்கள். பம்பாயில் ஏற்கனவே நிபுணர் சேவைக் குழு உள்ளது. கல்கத்தா, டில்லியிலும் இனி அமைக்கவிருக்கிறார்கள். யாவுமாக இணைந்து இயங்கும். வெளிநாடுகளில் இதே ரீதியில் அமைந்துள்ள சங்கங்களோடும் தங்கள் தொடர்பை விஸ்தரித்துக் கொள்ளக் குழுவினர் உத்தேசித்திருக்கின்றனர்.

உங்களுக்கு ஏதேனும் பிரச்னையிருக்கிறதா? **Director, Expert Services Bureau 96, Mount Road, Madras - 18** என்ற விலாசத்துக்கு எழுதுங்கள். சட்ட விரோதமான பிரச்னை தவிர மற்ற எதிலும் யோசனை கோரலாம். உங்களுடைய பிரச்னை இரகசியமாகக் காக்கப்படும் என்ற உறுதியையும் குழு அளித்திருக்கிறது. இந்த உத்தமப் பணியாளரின் தொண்டு சிறப்புற வாழ்த்துகிறோம்.

# நெஞ்சைத் தொடும் கடிதம்

**பி**ரதமரின் அலுவலகத்திலிருந்து ஸ்ரீ எல். கே. ஜா அவர்கள் கையொப்பமிட்ட ஒரு கடிதம் ஜனவரி 18ந் தேதியன்று ராஜாஜி அவர்களுக்குக் கிடைத்தது. 'சோகக் கதை சொல்லும் கடிதம்' என்று இதை ராஜாஜி குறிப்பிட்டுள்ளார்.

சென்ற டிஸம்பர் 27ந் தேதியன்று ராஜாஜி, அதற்கடுத்த இதழ் ஸ்வராஜ்யா (1–1–1966)வுக்கான தமது கட்டுரையின் பிரதியையும் ஒரு கடிதத்தையும் ஸ்ரீ லால் பஹாதூர் சாஸ்திரி அவர்களுக்கு அனுப்பியிருந்தார். மேற்படி கட்டுரையில் இந்தியாவும் பாகிஸ்தானும் காச்மீரப் பிரச்னையை மறந்து விட்டு, கூட்டாகப் பொருளாதார முன்னேற்றத்துக்கு; முயல வேண்டும் என்று ராஜாஜி கூறியிருந்தார். ஸ்ரீ லால்பஹாதூர் அவர்கள் தாஷ்கண்டில் பாக் அதிபருடன் சமாதானப் பிரகடனம் வெளியிட்டவுடன் ராஜாஜியின் அறிவுரையை நினைந்து அவருக்கு ஒரு பதில் கடிதம் 'டிக்டேட்' செய்திருக்கிறார். ஆனால் விதி விளையாடி விட்டது! இதில் கையொப்பமிடு முன்பே அவரது ஆவி பிரிந்து விட்டது! இந்தத் தகவலுடன் பிரதமரின் அலுவலகத்திலிருந்து வந்துள்ள ஸ்ரீ லால்பஹாதூரின் கையொப்பமற்ற கடிதம் வருமாறு:

> ''தங்களது கட்டுரையை நான் படித்துப் பார்த்தேன். நாங்கள் தாஷ்கெண்டில் செய்துள்ள ஏற்பாட்டைத் தாங்கள் ஒப்புவீர்கள் என்றும் அதற்குத் தங்களது பூரண ஆதரவு கிடைக்கும் என்றும் நிச்சயமாக நம்புகிறேன். தாங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களென நம்புகிறேன்.''

இந்தியா — பாகிஸ்தான் ஒற்றுமையில் ராஜாஜிக்கு உள்ள ஈடுபாட்டை, மறைந்த பிரதமர் எவ்வளவு தூரம் மதித்திருக்கிறார் என்பது இதிலிருந்து விளங்கும். அவரும் இப்பிரச்னையில் இதயபூர்வமாக முயன்றதற்கும் இச்சிறு கடிதத்தில் சான்று காண்கிறோம். கட்சி மனப்பான்மையின்றிப் பல பிரச்னைகளைத் தீர்க்க முயன்று வந்த சமயத்தில் அவரை இழந்தோம். ஆண்டவன் திருவிளையாடலை யாரே அறியவல்லார்?

---

**ஆலயத் திருப்பணி**

சென்னை பெரம்பூர் பகுதியில் செம்பியத்திலுள்ள வரசித்தி விநாயகர் சிவ—விஷ்ணு ஆலயத்துக்குத் திருப்பணி நடத்த திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களின் தலைமையில் அன்பர்கள் முயன்று வருகிறார்கள். இவ்விறைபணிக்குக் கைங்கரியம் செய்பவர்கள் வரசித்தி விநாயகர் ஆலயப் பொருளாளர், திருப்பணிக் குழு, 182, திரு வி. க. நகர், சென்னை—11 என்ற விலாசத்துக்குப் பொருளனுப்பி வைக்க வேணும்.


காங்கிரஸ் அழுக்கு
பிரதமர் தேர்தல்
PK

# ராஜாஜியின் கருத்துக்கள்

காங்கிரஸின் பார்லிமெண்ட் கட்சித் தலைவரை — அதாவது எதிர்காலப் பிரதமரை— தேர்ந்தெடுப்பதில் அக்கட்சித் தலைவர்கள் நடந்து கொண்ட விதம் நாட்டுக்கு அருவருப்பானது. டில்லியிலும், அங்கிருந்து மற்ற ராஜ்யங்களுக்கும் பரவிய துர்நாற்ற நிகழ்ச்சிகளைப் பத்திரிகைகளும் மறைக்காமல் வெளியிட்டன. மறைந்த பிரதமர் ஸ்ரீ லால் பஹாதூர் அவர்களுக்காக நாடு பன்னிரண்டு நாட்கள் துக்கம் காக்க வேண்டுமென அரசாங்கபூர்வமாக அறிவிக்கப்பட்டது கூட இந்த அவலட்சணக் காட்சியைத் தடுக்கவோ தள்ளிப் போடவோ இல்லை. வாழ்வு—மரணம் இவற்றின் புதிர்த்தன்மையும், உயிர்த் தியாகத்தின் புனித கம்பீரமும், தேசத்தின் பயங்கரப் பிரச்னைகளும்கூடக் காங்கிரஸின் விகாரமான காட்சியைத் தடுத்து நிறுத்தவில்லை.

தாஷ்கெண்டிலிருந்து துயரச் செய்தி வந்தவுடனே நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில், 'பொதுத் தேர்தல் வரை இடைக்கால ஏற்பாட்டையே பின்பற்றலாம்' என நான் கூறினேன். காங்கிரஸ் கட்சியின் அபேட்சகர்கள் யார் என்றுகூடத் தெரியாத அப்போது, அக்கட்சியில் இன்னாரை ஆதரிக்கலாம் அல்லது ஆதரிக்கக் கூடாது என்ற கருத்து ஏதுமின்றி, தேசத்தின் பெரும் துக்க காலத்தில் பின்பற்ற வேண்டிய முறை இதுவே என்பதால் இவ்வாறு கூறினேன். தேசிய கௌரவம் தவிர இத்தலைவர் தேர்தலில் சுதந்திரக் கட்சிக்கு எவ்வித அக்கறையும் கிடையாது. எனினும் காங்கிரஸில் தேர்தல் பூசல் ஏற்பட்டு இப்போது ஒருவாறாக அந்த அத்தியாயம் முடிந்து விட்டது. இனி காங்கிரஸின் ஆட்சியினால் ஏற்படும் சர்க்கார் சர்வாதிபத்தியத்தின் மரணப் பிடியிலிருந்து நாட்டை எப்படிக் காப்பதென்பதிலேயே சுதந்திரக் கட்சி ஈடுபாடு கொண்டுள்ளது. மக்களின் ஒழுக்கத்தைக் குறைக்கும் ஆட்சியிலிருந்து தேச சக்தியை மீட்பது எப்படி என்பதே இப்போது பிரச்னை.

பிரதமருடைய பெரும்பாலான அதிகாரங்கள் இப்போது அவருக்கு இந்த ஸ்தானம் தந்த குழுவின் கைக்கு மாறியிருக்கின்றன; பொதுத் தேர்தலும் நெருங்கி விட்டது. எனவே, பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சியும், அது ஆளும் கட்சிக்கு அளிக்கும் லாபங்களும் முன்னைவிட முக்கியத்துவம் பெறும். நெப்போலியனின் பிரெஞ்சுப் படைகள் ருஷியாவில் வெற்றிமுகம் கண்டு வரும் போது, அப்படை வீரர்கள் ருஷிய மக்கள் விட்டுச் சென்ற செல்வத்தில் மனத்தைச் செலுத்திக் கொள்ளைக்காரர்களானதையும், இதன் விளைவாக ராணுவ ஒழுக்கங்களை இழந்ததையும், முடிவில் நெப்போலியன் படைகளைப் பின்வாங்கிக் கொள்ள நேர்ந்ததையும் சரித்திரம் கூறுகிறது; டால்ஸ்டாயும் இலக்கியமாகக் கூறுகிறார். நெப்போலியனின் மகத்தான படை சிலயிழந்து திரும்புகையிலேயே ருஷியாவின் கடும் குளிர் தாங்காது அழிந்து போயிற்று.

ஒரு காலத்தில் மகத்தான கட்சியாக விளங்கிய காங்கிரஸும், இன்று பேராசையுடன் கைப்பற்றியுள்ள அபரிமிதமான பண பலத்தினால் முன்பு நெப்போலியனின் படைகள் அடைந்த கதியையே நோக்கிச் செல்வதாகத் தோன்றுகிறது. வெற்றி அதிகமாகி விட்டால் அதிலேயே விஷ வித்துக்கள் தோன்றி விடுவது இயல்பு. சோஷலிஸம் தேச சுபிட்சத்துக்கு உதவும் என்ற பிரமையின் பேரில் நேருஜி எடுத்த துர்ப்பாக்கியமான முடிவுகள் கட்சியின் பெருமையை அழித்து விட்டன. சோஷலிஸத்தைத் தழுவியதிலிருந்து காங்கிரஸ் கட்சியானது இத்தேசம் முழுவதையும் அச்சுறுத்தும் ஒரு கூட்டமாகவும், நாட்டை ஆட்டி வைக்கும் பற்பல பிரதேசக் கூட்டங்களாகவும் ஆகிவிட்டது. உச்சியிலிருந்தபடி அடிமட்டத்திலுள்ள கூட்டங்களை ஒன்றாகப் பிடித்து வைத்துக்கொண்டிருந்த நேரு அவர்கள் இன்று இல்லை. எனவே இன்றைய இந்தியப் பிரதமர் பல பிரதேசங்களைச் சேர்ந்த குட்டிராஜாக்களின் சக்தியையே சார்ந்து இருக்க வேண்டும்.

பெர்மிட்—லைசென்ஸ் ராஜ்யம் தனக்குள்ளேயே தன்னை அழித்துக் கொள்ளும் விஷ விதைகளையும் கொண்டுள்ளது. சுயராஜ்யத்தின் இலட்சணப்படி ஒவ்வொருவரும் தான் வளர்ச்சியடைவதற்குச் சுதந்திரம் பெற்றால், மொத்தத்தில் தேச சுபிட்சமே ஓங்கும். தங்களது நலனுக்காக மட்டுமின்றி, மற்றவர்களின் தீமைக்காகவும் முயலும் அயோக்கியர்களை அரசாங்கம் கட்டுப்படுத்துமானால் அதற்கு அனைவரும் துணை நிற்பர். சர்க்கார் ஒன்றே கட்டுப்பாட்டு வலைப் பின்னல்களைக் கொண்டு தேச சுபிட்சம் ஏற்படுத்தத் திட்டமிட்டு, மறைமுகமாகவோ நேரடியாகவோ அதிகாரிகளின் மூலம் தொழில் நடத்த முயற்சி செய்வது படுதோல்வியடைந்த முறையாகும். இதன் விளைவாக, முன்பு ஓர் அருமையான அரசியல் ஸ்தாபனமாக இருந்த கட்சி இன்று ஒழுக்கம் குன்றியுள்ள விபரீதத்தைக் காண்கிறோம்.

தற்போது காங்கிரஸார் தமது ஆட்சித் தலைவரைத் தேர்ந்தெடுப்பதில் பூசலிட்டதற்கு உபாங்கமாக ராஜ்யங்களிடையே வேற்றுமை வித்து ஊன்றப்பட்டுள்ளது; ஆட்சித் தலைவரை உற்பத்தி செய்யும் கோஷ்டிகள் ஆங்காங்கு ஏற்படுவதற்கான சூழலும் உண்டாகியுள்ளது. இவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட ஆட்சித் தலைவர்கள் பின்னாலிருந்து சூத்திரத்தை இழுப்பவர்களின் விருப்பப்படி ஆடும் கைப் பாவைகளாக இருப்பதே இயற்கை. சூத்திரதாரிகள் மேன்மக்களாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அநீதியான முறையில் எளிதில் 'மகசூல்' பெற விரும்புகிறவர்களே கயிற்றை ஆட்டி வைப்பார்கள்.

இதெல்லாம் எதிர்க் கட்சிகளுக்குத் தேர்தலில் மிகவும் உபயோகமாக இருக்கும் அம்சங்கள். என்றாலும் முன்னொரு காலத்தில் சுயராஜ்யத்தை எதிர்பார்த்து மக்கள் ஆடலும் பாடலுமாக வாக்குச் சாவடிகளுக்குச் சென்று வோட்டுப் போட்ட காட்சியின் நினைவு எனக்கு ஏற்படுவதால் நான் துயரமே கொள்கிறேன்.

SHILPI-HP. 153

# ப்ளேடோ குடும்பத்தின் புதிய பேனா இதுதான் — ப்ளேடோ 222



இந்தப் புதிய ப்ளேடோ 222 பேனாவை கையில் பிடித்துப் பாருங்கள். கையில் எவ்வளவு சுகமாக உட்காருகிறது : தொப்பியைச் சற்றே மேல்நோக்கி அழுத்தவும்—எழுதத் தயாராகச் சடுதியில் முன்வருகிறது—எழுதத் தொடங்குங்கள் — மெல்லிய நிப்பு வழுவழுவென்று நழுவிக் கொண்டே ஓடுகிறது—மூடப்பட்ட உதட்டில் மை கசிந்து ஊறுகிறது. அதன் தங்கநிற மூடியைப் பாருங்கள்—ரசாயன பூச்சு பூசப்பட்டது—துரு ஏறாது — எப்போதும் தங்க நிறமாகவே இருக்கக்கூடியது ! பல வண்ணப் பேனாக்களிலிருந்து பிடித்த வண்ணத்தையும் மை ஊற்றும் வாகத்தையும் தேர்ந்தெடுங்கள். என்ன விலை என்கிறீர்களா ? வெறும் 5 ரூபாய் 50 காசுதான்.



## plato 222 a mhatre product




பூரண விநியோகஸ்தர்கள் :

**பெஸ்ட் பவுண்டன் பென் டெப்போ**

79, தேவ்கரன் மான்ஷன், பிரின்ஸஸ் தெரு, பம்பாய்-2



# குமாரி கலாவின் அரங்கேற்றம்

இப்போதெல்லாம் நாட்டியக் கலையில் ஈடுபட்டிருக்கும் இளம் கலைவாணிகள் தங்கள் நிகழ்ச்சியில் புது அம்சங்கள் சேர்ப்பதில் ஆர்வம் கொண்டவர்களாக இருக்கிறார்கள். அப்படிப் புதிதாகச் சில காலமாக அம்பலத்துக்கு வந்திருக்கும் பழங் கலைகளில் 'குச்சிப்புடி' நாட்டியமும் ஒன்று. சில நாட்டியக் கலைவாணிகள் பரத நாட்டியம், கதகளி, கதக் முதலிய நாட்டியங்களுடன் 'குச்சிப்புடி' உருப்படி ஒன்றையும் சேர்த்துத் தங்கள் நாட்டியக் கதம்ப நிகழ்ச்சியில் ஆடுகிறார்கள்.

ஆனால் குச்சிப்புடி நாட்டியம் மட்டும் தனியாக அரங்கில் வந்தது ஒருசில ஆண்டுகளுக்கு முன்தான். குச்சிப்புடியிலிருந்து இந்தப் பழம் ஆந்திர நாட்டியக் கலையைச் சென்னைக்கு முதன் முதலில் வேதாந்தம் குழுவினர் கொண்டு வந்தனர். அக்குழுவில் வேதாந்தம் சத்திய நாராயணா என்ற இளைஞர் பெண் வேடத்தில் தோன்றி, 'பாமா கலாபம்' முதலிய நடனங்களில் சபையோரை 'இவர் உண்மையில் பெண்மணிதானோ?' என்ற அளவுக்குப் பிரமிக்க வைத்துப் பரவசப் படுத்தினார். குமாரி யாமினி கிருஷ்ணமூர்த்தி போன்ற சில நாட்டியக் கலைஞர்களும் குச்சிப்புடி நடனத்தைப் பிரபலப்படுத்தியிருக்கிறார்கள்.

சென்னையில் குச்சிப்புடி நடன கலாசாலை ஒன்று நடத்தி வரும் ஸ்ரீவேம்பட்டி சின்ன சத்தியம் அவர்களிடம் பயிற்சி பெற்ற குமாரி சந்திரகலாவின் முழு குச்சிப்புடி நடன நிகழ்ச்சி அரங்கேற்றம் சமீபத்தில் நடைபெற்றது.

''குச்சிப்புடி நடனம்தானே! இரண்டு மணி நேரத்துக்கு அதில் என்ன இருக்கப்போகிறது'' என்று சந்தேகத்துடன் போனவர்கள் அதிசயப்பட்டுக் கொண்டு வீடு திரும்பினார்கள். குமாரி சந்திரகலாவின் நடனம் அப்பொழுதுதான் முதன் முதலாக அரங்கேற்றப்பட்டது என்ற போதிலும் நிறம்படவும், லாகவமாகவும் அந்தக் கலையை ஆடிக் காட்டினார்.

குச்சிப்புடியின் ஜீவநாடி, அந்த நடனத்தின் ஆதாரப் பொருள்;- இது முக்கியமாக நாட்டிய நாடகம் என்பதுதான். வெறும் நாட்டியம் மட்டுமல்ல. பரதநாட்டியத்தில் அபிநயத்துக்கெனச் சில தனிப் பதங்கள் ஒதுக்கப்படுகின்றன. குச்சிப்புடியில் நாடக அம்சம் இருப்பதால் அபிநயம் முக்கியமாக இருக்க வேண்டும்.

இந்த அபிநய அம்சத்தில் குமாரி சந்திரகலா மிகத் திறமையுடன் காணப்பட்டார். முக பாவங்களும் அவற்றை ஏற்றபடி மாற்றிக் கொள்வதும் இவருக்குச் சர்வ சுலபமாக ஓர் இயற்கை எழிலுடன் வருகிறது. குச்சிப்புடி ஜதிகள் மிகவும் சிரமமானவை; மிருதங்க தாளச் சொற்கட்டுக்களுக்குச் சரியாகக் கால் அடிகளும் பேச வேண்டும். வண்ணக் கோலம் ஒன்றோடு ஒன்று பின்னிவரும் தாளச் சொற்களுக்குச் சரியாகப் பாதங்கள் அசைந்து ஒலிக்க வேண்டும். சிக்கலான தாளத் தட்டுகளுக்கும், மிருதங்கச் சொற்களுக்கும் குமாரி சந்திர கலாவின் காலடிகள் சலங்கை ஒலியுடன் தாளம் தவறாமல் ஈடு கொடுத்தன.

இரு பாதங்களையும் பின்னி மாறிப்போட்டு ஆடுவதும் இரு கால் கட்டை விரல்களையும் பிணைத்துக் கோத்துக் கொண்டு ஆடுவதும் சிறு தாம்பாளத்தின் மீது இரு கால்களையும் வைத்துக் கொண்டு, நாட்டியமாடிக் கொண்டே சுற்றிச் சுற்றிவருவதும் நன்கு பழக்கப்பட்டிருக்கிறது இவருக்கு. ஆடிக் கொண்டே கால் தாம்பாளத்தை நகர்த்த, முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் சுற்றியும் இயக்கிவருகிறார்; தாம்பாளத்தின் விளிம்பில் கால்களை வைத்துக்கொண்டு அதிதுரிதமாக ஜதிகள் நிறம்படப் போட்டு ஆடுகிறார்.

அன்றைய நிகழ்ச்சியில் 'குச்சிப்புடி' நடனத்துக்கே தனிச் சிறப்பாக விளங்கும் 'பாமா கலாபம்' என்ற சத்தியபாமா ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் பாரிஜாத மரத்தைப் பெறும் புராணக் கதை - இரண்டு பாகங்களாக ஆடி நடிக்கப் பெற்றது. இதில் சங்கீதம், நாட்டியம், நடனம் எல்லா அம்சங்களும் இடம் பெறுகின்றன. நவரஸங்களும் அபிநயத்தில் கொண்டு வரப்படுகின்றன. முக்கியமாக, சிருங்காரம், கோபம், தாபம், இந்த பாவங்கள் மேலோங்கி நிற்கின்றன. இந்த உருப்படியைக் குமாரி சந்திரகலா லாகவமாக ஆடிப் பாராட்டுப் பெற்றார்.

அன்று குமாரி சந்திரகலாவின் அரங்கேற்றத்தில் தலைமை தாங்கி, இளம் கலைக் குமாரியைப் பாராட்டிய ஸ்ரீமதி ஜோதி வேங்கடாசலம், இளங்கலைஞருக்கு முதன் முதலாகக் குச்சிப்புடி கலைக் கழகத்தார் வழங்கிய தேர்ச்சிப் பட்டத்தையும் அளித்து ஆசி கூறினார். அவரது ஆசிகளுடன் ரசிகர்களின் ஆசியும் பரிபூரணமாகச் சந்திரகலாவுக்கு உரித்தாகியது. — நவரஸம்

## அத்தியாயம் இருபத்தேழு

# பதறினார் பாண்டியர்

நாகம நாயக்கரைப் படைகளுடன் தெற்கே அனுப்பி வைத்த சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர், நாடிழந்து தம்மிடம் உதவி கோரி வந்த சந்திரசேகர பாண்டியருக்கு உதவி செய்வதற்காகத் தான்! அவரை அனுப்பி வைத்தார். நாகமநாயகருக்கு முதலில் அது பிடிக்காத பணியாக இருந்தாலும் சக்கரவர்த்தியின் கட்டளையை அவரால் மறுக்க முடியவில்லை. அரை மனத்தோடுதான் அதற்கு அவர் ஒப்புக்கொண்டார்.

என்றாலும் அமைச்சர் சாளுவ நரசிம்மரின் ஆலோசனையைக் கேட்டபிறகு அவருடைய மனக்குறை நீங்கிவிட்டது. முழு மனத்தோடும் ஆர்வத்தோடுமே அவர் விஜயநகரத்திலிருந்து கிளம்பினார். சந்திரசேகர பாண்டியருக்கு உதவி செய்வதன் மூலம் நாகமநாயக்கர் தமக்கும் உதவி செய்து கொள்ள வழி இருக்கிறது என்பதை அப்போதே சுட்டிக் காட்டி விட்டார் அமைச்சர்.

விஜயநகரத்து மேலதிகாரி என்ற பதவி, அதிகாரம், வருமானம் இவ்வளவும் நாகமருக்குப் பாண்டிய நாட்டில் காத்திருந்தன என்பதை அமைச்சர் தாம் முதலில் வெளியிட்டார். அதன் பிறகே நாகம நாயக்கருக்கு அந்தப் படையெடுப்பில் மிகுந்த உற்சாகம் ஏற்பட்டது.



# வெற்றித் திருநகர்

## அகிலன்

உறையூரில் வீரசோழனைக் கொன்று அவனுடைய படைகளை முறியடித்தபின்னர் அவர் சந்திரசேகர பாண்டியரோடு மதுரைக்குச் சென்றார். அங்கு ஆட்சி செய்துகொண்டிருந்த வீரசோழனின் அதிகாரிகள், உறையூர்ச் செய்தியைக் கேள்வியுற்றவுடனேயே மதுரையை விட்டு ஓடி ஒளிந்தனர். சந்திரசேகர பாண்டியரின் பழைய அரண்மனை அவருக்காகவே காத்திருந்தது. அதற்குள் பாண்டியருக்கு முன்பாகவே நுழைந்து விட்டார் நாகம நாயக்கர். பிறகுதான் சந்திரசேகர பாண்டியரையும் திருவல்லபனையும் அங்கு அழைத்துக் கொண்டார்.

நாட்டை மீட்கும் வேலை முடிந்துவிட்டதால், அடுத்த நடவடிக்கைகளைப் பற்றி ஆலோசனைகள் செய்வதற்காக அவர்கள் மூவரும் ஒரு கூடத்தில் அமர்ந்தனர்.

''நான் வந்த வேலையின் ஒரு பகுதி நிறைவேறி விட்டது'' என்று கூறிக் கொண்டே சந்திரசேகர பாண்டியரின் விழிகளைக் கூர்ந்து நோக்கினார் நாகமநாயக்கர். அப்படிக் கூறிய போது அதற்காகத் தாம் செலவிட்ட பெரும் பொருளையும், போர்க்களத்தில் உயிர் நீத்த தம் வீரர்களையும் நாகம நாயக்கர் மறக்கவில்லை. 'அதற்கு நான் பெறப்போகும் கைம்மாறுதான் அந்த வேலையின் மறு பகுதி' என்று அவர் விழிகள் கூறின.

சந்திரசேகர பாண்டியர் அதை உணர்ந்துகொண்டவர் போல், ''தங்கள் கடமைதான் முடிந்திருக்கிறது; இனிமேல்தான் நான் என் கடமையைத் தொடங்கவேண்டும்'' என்று கூறினார்.

''தங்கள் கடமையா?''

''ஆம்; நான் நன்றிக் கடன் செலுத்த வேண்டுமல்லவா?'' என்றார் சந்திரசேகர பாண்டியர். ''தங்களுடைய கைப் பொருளையெல்லாம் இந்தப் போரில் எனக்காக இழந்திருக்கிறீர்கள்; தங்களுடைய வீரர்களையும் பறி கொடுத்திருக்கிறீர்கள். இவ்வளவும் செய்து என்னுடைய நாட்டை எனக்கு மீட்டுக் கொடுக்க வந்திருக்கிறீர்கள். இதற்கெல்லாம் நான் ஈடு செய்தாக வேண்டும்'' என்றார் பாண்டியர்.





''உங்க அப்ளிகேஷனுங்க அடியிலே என்னமோ கட்டம் கட்டி எழுதியிருக்கிங்களே! என்ன அது?''

''என்னுடைய ஜாதகம்தான் சார்!''

பாண்டியர் இறந்த மனத்தோடு பேசியது நாகமநாயக்கருக்கு மிகவும் பிடித்திருந்தது. ''போரில் உயிர் இழந்த வீரர்களை நாம் மீட்க முடியாது; அவர்களுடைய குடும்பங்களை நாம் வசதியாக வாழ வைக்க வேண்டும். விஜயநகரத்தில் போர்வீரர் குடும்பங்களுக்கு எப்படிச் செய்வார்களோ, அப்படி நாமும் செய்து விடுவோம்'' என்றார் நாகம நாயக்கர்.

பாண்டியர் நெடுநேரம் யோசனை செய்தார். பாண்டிய நாடு வைகையாற்றுப் பாசனத்தாலும் மலை படு பொருள்களாலும் கடல் முத்துக்களாலும் வளம் கொண்ட நாடாக இருந்தாலும், ஆட்சியின் சீர்குலைவால் அப்போது வளம் குன்றி யிருந்தது. மீண்டும் அது புது வாழ்வும் புது வளமும் பெற்றால்தான் அந்த நாட்டு மக்களிடமிருந்து இறைப் பொருள் பெறமுடியும். உடனடியாக நாகம நாயக்கருக்குச் சேர வேண்டிய பெரும் பொருளைத் திரட்டுவது என்பது அவ்வளவு எளிதான வேலையல்ல.

''நாயக்கரே! நாடு சீர்ப்படும்வரையிலும், அதற்குப் பிறகும்கூடத் தாங்கள் இங்கேயே தங்கலாம். தங்களுடைய ஆலோசனைகளும் உதவியும் இனிமேல்தான் எனக்கு மிகுதியாகத் தேவைப்படுகின்றன. நாட்டின் வளத்தைப் பெருக்கி, வருவாயைப் பெருக்கி, தங்களுக்குச் சேர வேண்டியதையும் அவ்வப்போது கொடுத்து விடுகிறேன். விஜயநகரத்தின் அதிகாரியான தாங்கள் உடன் இருப்பதால் இங்குள்ள உட் பகையும் அடங்கிவிடும். ஆகவே இன்னும் சில மாதங்களாவது தாங்கள் தங்கள் படைவீரர்களுடன் இங்கு தங்கியிருக்க வேண்டும்.''

''தங்களுக்கு இங்கு உட்பகை வேறு இருக்கிறதா?'' என்று கேட்டார் நாகம நாயக்கர்.

''தூரத்து உறவினர்களான பாண்டியச் சகோதரர்கள் ஐந்து பேர்கள் கயத்தாற்றில் வாழ்கிறார்கள். பரமக்குடியில் தும்பிச்சி நாயக்கர் என்று ஒருவர் இருக்கிறார். இவர்களுடைய தூண்டுதலால்தான் வீரசோழன் படையெடுத்து வந்து முதலில் மதுரையைக் கைப்பற்றிக் கொண்டான்.''

நாகம நாயக்கருடைய நெற்றி சுருங்கியது. சாளுவ நரசிம்மர் கூறியதை அவர் அப்போது நினைவுபடுத்திக் கொண்டார். பாண்டிய நாட்டின் ஆட்சித் துறையில் சிறிது கவனம் செலுத்தினால், அது பன்மடங்கு பலன் தரக் கூடிய நாடு என்பது அவருக்கு விளங்கி விட்டது. பாண்டியருக்கும் அவருடைய துணை தேவையாக இருப்பதால், அவர் இங்கு சிறப்போடு வாழ முடியும்.

''சக்கரவர்த்திகளுக்குச் செய்தி அனுப்பியிருக்கிறேன். அவர்களுடைய மறுமொழி கிடைத்தவுடன், தங்களுக்கு நாடறிய மீண்டும் முடிசூட்டிவிட்டு ஆட்சிப் பொறுப்பைக் கொடுக்க வேண்டும். பிறகு மற்ற விஷயங்களைக் கவனித்துக் கொள்ளலாம்'' என்றார் நாகம நாயக்கர்.

நாகம நாயக்கர் எவற்றையெல்லாம் எதிர்பார்த்து வந்தாரோ, அவற்றுக்கும் மேல் அதிகமாக அங்கு கிடைக்கும் என்பது தெரிந்தது. ஆட்சியைப் பாண்டியரிடம் கொடுப்பதற்கு முன்பாக நிர்வாக முறையில் அவர் பல நல்ல மாறுதல்களைச் செய்ய விரும்பினார். அதற்காகத் தாமே முதலில் பொறுப்பேற்றுக் கொண்டு ஆட்சியைக் கவனித்தால் நலம் என்று அவருக்குத் தோன்றியது. சந்திர சேகர பாண்டியரும் நாகமரின் யோசனையை மகிழ்ச்சியோடு வரவேற்றார்.

''அப்படியே செய்யுங்கள். தாங்களே அங்கு தங்கள் நாட்டின் சிற்றரசராகவும் சாம்ராஜ்யத்தின் தளதிகாரியாகவும் இருந்து அநுபவம் பெற்றவர்கள். முதலில் ஒழுங்குபடுத்திவிட்டுப் பிறகு என்னிடம் ஆட்சியை விடுவதும் நல்லதுதான்'' என்றார் பாண்டியர்.

நாகம நாயக்கரும் அப்போது தாம் எதைக் கூறினாரோ, அதையேதான் செயலிலும் காட்ட விரும்பினார். சாம்ராஜ்யத்து மேலதிகாரி என்ற பதவியும் அதனால் கிடைக்கும் பலன்களுமே அவருக்குப் போதுமெனத் தோன்றியது. பாண்டிய நாட்டின் வளம் நிறைந்த பகுதி ஒன்றைத் தமக்கெனக் கேட்டுப் பாண்டியரிடம் பெற்றுக்கொண்டால், பிறகு விசுவநாதனுக்குத் தமிழ் நாட்டிலும் ஒரு நிலப் பகுதி நிலைக்குமென நம்பினார்.

உடனடியாக அங்கே காரியங்கள் நடைபெறத் தொடங்கின. பாண்டியரிடம் உழைத்த பழைய அதிகாரிகளைக் கொண்டும் தம்மோடு வந்தவர்களைக் கொண்டும் ஆட்சியை நிலை நாட்டுவதில் தீவிரமாக முனைந்து விட்டார் நாகம நாயக்கர். சந்திர சேகர பாண்டியரும் அவருடைய உழைப்புத் திறமையைக் கண்டு பெருமையுற்றார்.

திருவல்லப பாண்டியன் தென்காசிக்குத் திரும்பினாலும் அங்கிருந்து அடிக்கடி மதுரைக்கு வந்து போய்க் கொண்டிருந்தான்.

# B·I

# M. S. "சர்தாணா"

**சென்னையிலிருந்து**

**1966 பிப்ரவரி 10**

*சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.*

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம்
பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

| | |
|---|---|
| C. M. குட்டி<br>புரொப்ரைட்டர்: குட்டி டிராவல் சர்வீஸ்<br>38, அங்கப்ப நாயக்கன் தெரு<br>சென்னை-1 | மெஸர்ஸ் கோஸா டிராவல்ஸ்<br>மாஸ்காட் ஹோட்டல்<br>திருவனந்தபுரம் |

**நாகப்பட்டினத்திலிருந்து**

**1966 பிப்ரவரி 11**

**நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்**

மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

*பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.*

**பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விபரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:**

| | |
|---|---|
| **பின்னி & கம்பெனி லிமிடெட்**<br>7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | **மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**<br>முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

**ஏஜெண்டுகள்: பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்**

சந்திர சேகர பாண்டியரது குடும்பத்தாரும் மதுரைக்கு வந்து சேர்ந்தார்கள்.

நாட்டில் நிலையான நல்லாட்சி நிலவும் என்ற நம்பிக்கை வந்து விட்டதால், குடி மக்களும் அரசுக்கு வாரி வழங்கத் தொடங்கினார்கள். இயல்பாகவே பொருளைச் சேமிப்பதில் நாட்டம் கொண்ட நாகம நாயக்கருக்குப் பாண்டிய நாட்டுத் தன பண்டாரம் உற்சாகத்தை வழங்கியது.

''அரசே! விரைவில் ஒரு நாள் பார்த்து, மிகச் சிறப்பாகத் தங்களுக்கு இங்கே முடிசூட்டு விழா நடத்திவிட வேண்டும். அதற்குப் பிறகுதான் எனக்கும் கொஞ்சம் சுமை குறையும்'' என்று ஒரு நாள் பாண்டியரிடம் குறிப்பிட்டார் நாகம நாயக்கர். அதற்கேற்றாற் போல் விஜயநகரத்துக்குச் சென்றிருந்த ராமபத்திர நாயக்கரும் சக்கரவர்த்தியின் ஓலையோடு திரும்பி விட்டார். ஆகவே வெகு விரைவில் தமக்கு நிகழவிருக்கும் முடிசூட்டு விழாவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் சந்திர சேகர பாண்டியர்.

ஆனால் நிலைமை என்னவோ திடீரென்று மாறிவிட்டது. விஜயநகரத்திலிருந்து ராமபத்திரர் திரும்பி வந்த பிறகு நாகம நாயக்கர் பழைய நாகம நாயக்கராக இல்லை. சுந்தர பாண்டியரிடம் ஆட்சியை ஒப்புவிக்கவேண்டிய கடமை ஒன்று இருப்பதையே அவர் மறந்து விட்டார் போலும்! 'நாட்டை மீட்டுக் கொடுப்பதற்காக வந்தவரா இந்த நாகம நாயக்கர்? அல்லது அதை வீர சோழனிடமிருந்து தட்டிப் பறித்துத் தாமே ஆளத் திட்டமிட்டவரா?' — பாண்டியர் பதறினார்.

## அத்தியாயம் இருபத்தெட்டு

# பாசத்தின் கொடுமை

ராமபத்திர நாயக்கர் விஜயநகரத்திலிருந்து கொண்டு வந்திருந்த செய்திகளை நம்புவதற்கு நாகம நாயக்கருக்குச் சிறிது நேரம் ஆகியது. சக்கரவர்த்தி அனுப்பிய ஓலையை முதலில் படித்துப் பார்த்தார். அவர் அப்போது எந்த ஏற்பாட்டின்படி நடந்து கொண்டிருந்தாரோ அதையேதான் அந்த ஓலையும் வற்புறுத்தியது.

''உங்களுடைய நிர்வாக முறைகளைப் பாண்டியருக்கும் அங்குள்ள அதிகாரிகளுக்கும் கற்றுக் கொடுத்து, அந்த நாட்டின் வளர்ச்சிக்கான வழி வகைகளைச் சுட்டிக் காட்டுங்கள். செல்வச் செழிப்பிலும், படை பலத்திலும் அது நம்மைப் போலவே சிறந்து விளங்க வேண்டும். அதற்கான அடிப்படைகளை அமைத்து விட்டுத் திரும்பி வாருங்கள்'' என்று கட்டளையிட்டிருந்தார் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர்.

ஓலையின் கையெழுத்தை நாகமர் ஊன்றிக் கவனித்தார். அது அவருடைய குமாரன் விசுவநாதனின் கையெழுத்தில் இருந்தது. அடுத்தாற்போல் விசுவநாதன் அவருக்குத் தனிப்பட்ட முறையில் எழுதியிருந்த ஓலையையும் படித்துப் பார்த்தார். அவருடைய விழிகளில் ஆனந்தக் கண்ணீர் பொங்கியது. அவரைப் பிரிந்திருப்பதால் தானும் தன் தாயாரும் வருந்தினாலும், கடமையின் காரணத்தால் அதைப் பொறுத்துக் கொள்வதாகக் குறிப்பிட்டிருந்தான் விசுவநாதன். அவருடைய உடல் நலனைப் பேணிக் காக்கும்படி அதில் பன்முறை வேண்டிக் கொண்டிருந்தான்.

''நான் எத்தனையோ வகைகளில் பாக்கியம் செய்திருக்கிறேன். மற்றெல்லாப் பாக்கியங்களையும் விட எனக்குக் கிடைத்த புத்திர பாக்கியம்தான் எனக்கு மிகச் சிறந்ததாகத் தோன்றுகிறது. இறைவன் அவனுக்கு நீண்ட ஆயுளை அருள வேண்டும்'' என்று நாத் தழுதழுக்க ராமபத்திர நாயக்கரிடம் கூறினார் நாகமர்.

ராமபத்திர நாயக்கர் சக்கரவர்த்திக்கு நேர்ந்த விபத்தைப் பற்றிக் கூறியபோது நாகமரின் நெஞ்சு நடுங்கத்தான் செய்தது. என்றாலும் அந்த அதிர்ச்சி அவர் மனத்தில் சிறிது நேரம் கூட நிலைக்கவில்லை. அந்த விபத்தின் காரணமாகத் தமது குமாரன் முன்னிலும் பன்மடங்கு பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறான் என்பதும், சக்கரவர்த்தியைத் தினந்தோறும் சந்திக்கும் வாய்ப்புப் பெற்ற இருவருள் அவன் ஒருவனாக இருக்கிறான் என்பதுமே அவருக்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தந்தன.

அடுத்தாற்போல் ராமபத்திர நாயக்கர் அமைச்சர் சாளுவ நரசிம்மரின் மாளிகையில் நடைபெற்ற மற்றொரு நிகழ்ச்சியையும் அவரிடம் தெரிவித்தார். விசுவநாதனின் கரத்தைப் பார்த்து ஒரு முதியவர் அவன் எதிர்காலத்தைக் கூறினாரல்லவா? அதைக் கேள்வியுற்றபோது நாகமரின் விழிகளில் புத்தொளி பொங்கியது. ''உண்மையாகவா? உண்மையாகவா?'' என்று திரும்பத் திரும்பக் கேட்டுச் செய்திகளை உறுதிப்படுத்திக் கொண்டார்.

''நானே முன்பு அவன் பிறந்த நாள் குறிப்பை வைத்துக் கொண்டு பார்த்திருக்கிறேன். நீங்கள் கூறும் செய்தியைப் பார்த்தால் நான் அதை நம்பத்தான் வேண்டியிருக்கிறது. — தெற்கில் ஒரு பெரும் சாம்ராஜ்யத்தையே ஏற்படுத்தி அதன் சக்கரவர்த்தியாக விளங்கப் போகிறான் என்றா சொல்கிறீர்கள்?''

''ஆமாம், அமைச்சர் சாளுவ நரசிம்மருமே அந்தப் பெரியவர் பேச்சை அப்படியே நம்புகிறார். அதற்கான அதிர்ஷ்டம் இப்போதே வந்து கொண்டிருக்கிறது என்று கூறினார்.''

அமைச்சர் வாய்மொழியாகத் தெரிவித்த செய்திகள் அனைத்தையும் முதலில் கூறிவிட்டுப் பிறகு அவர் கொடுத்த பேழையை நாகமரிடம் நீட்டினார் ராமபத்திரர். பேழைக்குள் வந்த ஓலையை அவர் உடனடியாகப் படிக்கவில்லை. ராமபத்திர நாயக்கரிடம்



ஹோட்டல் முதலாளி: ஆச்சர்யமா இருக்கே! நீங்க ரெண்டு பேரும் அண்ணன் தம்பிகளா? அண்ணன் காப்பி டம்ளர்மாதிரியும் தம்பி மீல்ஸ் லெக்ஷன் தண்ணீர் டம்ளர் மாதிரியும் இருக்கேளே?

பல விவரங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அவரை அனுப்பி விட்டு, பின்னர் தனிமையில் அதைத் திறந்து பார்த்தார். பரபரப்படைந்த மனத்தோடு அதில் அமைச்சர் எழுதியிருந்த வரிகளைப் படித்தார்.

''பாண்டிய சாம்ராஜ்யத்தின் வாரிசு தங்கள் குமாரன் விசுவநாதன். அவனே மதுரையிலிருந்து தமிழ் நாடு முழுவதையும் எதிர்காலத்தில் ஆளப் போகிறவன். அவனுக்கு உரிமையாகப் போகும் அந்த நாட்டை எக்காரணம் கொண்டும் நீங்கள் பாண்டியரிடம் கொடுத்துவிட வேண்டாம். அவன் வந்து ஏற்றுக் கொள்ளும் வரையிலும் தாங்களே அரசராக இருந்து அதை ஆளவேண்டும். எதற்காகவும் அவசரப்பட்டு நீங்கள் அங்கிருந்து திரும்பி வரக் கூடாது. நம்பிக்கையுள்ள ராமபத்திரர் போன்றவர்கள் மூலம் நாம் தனிப்பட்ட முறையில் தொடர்பு கொள்ளலாம். வெற்றி கிடைக்கும் வரையில் விசுவநாதனுக்குக்கூட இந்தச் செய்தி தெரிய வேண்டாம்.''

நாகம நாயக்கர் பதறிப் போய்விட்டார். மீண்டும் மீண்டும் அதைப் படித்து மனப்பாடம் செய்து கொண்டார். பிறகு அதைக் கட்டுப் பொசுக்கிச் சாம்பலாக்கினார். சாம்பலாகிக் கருகி உதிர்ந்து போனது வெறும் பனை ஓலைதானே தவிர, அதில் இருந்த எழுத்துக்களல்ல. அவை அவர் நெஞ்சத்தில் பசுமரத்தாணிகள் போல் பதிந்து விட்டன.

தலை சுழன்றது நாகம நாயக்கருக்கு. விசுவநாதன் அவர் மனக் கண் முன்பாக விசுவரூபமெடுத்து நின்றான். மாபெரும் சக்கரவர்த்தி ஒருவருக்குரிய உடை அலங்காரங்களோடும் மிடுக்கோடும் அவன் அந்தப் பாண்டிய நாட்டுச் சிம்மாசனத்தில் வீற்றிருந்தான். தெற்கே மற்றொரு கிருஷ்ண தேவராயர் முளைத்தெழுந்தது போல் அவன் திடீரென்று அவர் முன்னால் முளைத்தெழுந்து விட்டான்.

''எக்காரணம் கொண்டும் நீங்கள் திரும்பி வரக் கூடாது'' என்று நாகமரின் நண்பரான அமைச்சர் அவருக்கு ஒருபுறமிருந்து முழங்குவது போலவும், ''அங்கே நல்லாட்சிக்கான அடிப்படைகளை அமைத்து விட்டுத் திரும்பி வாருங்கள்'' என்று மற்றொரு புறமிருந்து சக்கரவர்த்தி கிருஷ்ண தேவராயர் ஆணையிடுவது போலவும், அவருக்கு நேருக்கு மாறான இரு எதிரொலிகள் கேட்டன.

சக்கரவர்த்தியின் ஆணையை மீறி அறியாதவர் நாகம நாயக்கர். யாருக்குமே விஜயநகர சாம்ராஜ்யத்தில் அதுவரை அந்தத் துணிவு பிறந்ததில்லை. ஆணை மீறியோரின் வாழ்வு அங்கே யானை புகுந்த கரும்புத் தோட்டம்தான். ஏற்கனவே அவர்களிடம் உள்ள நாடும் அதிகாரமும் பறிக்கப்படும்; அவர்களுடைய தலைகளும் சக்கரவர்த்தியின் கரத்தாலேயே உருட்டப்படலாம்; ஆணை மீறிய அதிகாரிகள் அங்கு உயிருடன் உலவியதில்லை.

'ஆனால் இவ்வளவும் அமைச்சருக்குத் தெரியாத செய்திகள் அல்லவே! தெரிந்திருந்தும் அவர் இப்படி எழுதுகிறாரென்றால்? அமைச்சரின் நட்பு அப்பழுக்கற்றது. அவர் விசுவநாதனிடம் வைத்திருக்கும் பாசம் எல்லையற்றது; ஒருபோதும் அவர் தவறான ஆலோசனைகளைக் கூற மாட்டார். — சக்கரவர்த்திகளின் இப்போதைய நிலையை அறிந்து தான் அவர் இதற்குத் துணிந்திருப்பார்' என்றெல்லாம் பலவாறு நினைத்துக் குழம்பினார் நாகம நாயக்கர்.

வாழ்நாளில் என்றுமே எதற்காகவும் அவர் இவ்வளவு தூரம் குழம்பியதில்லை; கலங்கியதில்லை; தயங்கியதில்லை. ஆனால் ஒரு முடிவு செய்ய வேண்டிய கட்டம் அவருக்கு வந்து விட்டது. 'அமைச்சரின் ஆலோசனைப்படி நடப்பதா? சக்கரவர்த்திகளின் ஆணைக்குக் கட்டுப்படுவதா?'

மனம் சற்றுத் தெளிவடைந்தவுடன் அவர் சக்கரவர்த்தியையும் மறந்து விட்டார்; அமைச்சரையும் மறந்து விட்டார். அவருடைய குமாரனின் எதிர்காலத்துக்காக எவ்விதத் துன்பத்தையும் ஏற்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்குள் வேரூன்றத் தொடங்கி விட்டது. நீண்ட நாட்கள் கழித்துப் பல நோன்புகளும், பிரார்த்தனைகளும் செய்த பிறகு, காசி விசுவநாதரின் அருளால் பிறந்த தவப் புதல்வன் அவன். அவனுக்காக எவ்விதத் தியாகத்தையும் அவர் ஏற்றுக்கொள்ளலாம். சக்கரவர்த்தியே தம் கைவாளால் நாகமரின் சிரத்தைத் துண்டித்து வீழ்த்துவதாக இருந்தாலும் சரியே. அவனுக்காக ஆயிரம் அரச ஆணைகளை மீறினாலும் அது தவறாகாது. அவருடைய புதல்வன் அவன்; அவரையும் விடச் சிறந்தவன். தகுதியுள்ளவன்; திறமை கொண்டவன்.— 'விசுவநாதனுக்கு வரும் அதிர்ஷ்டம் எனக்குத்

துரதிர்ஷ்டத்தைத் தருமானால் அதை நான் சிறிதும் பொருட்படுத்தப் போவதில்லை' என்று முடிவுக்கு வந்தார் நாகம நாயக்கர்.

அப்படி முடிவு செய்த கணத்திலிருந்து அவரே தம்மைப் பாண்டிய நாட்டின் அரசராக மாற்றிக் கொண்டு விட்டார். சந்திர சேகர பாண்டியரின் சொந்த வாழ்வுக்கு வேண்டிய வசதிகளில் மட்டும் அவர் எவ்விதக் குறையும் வைக்கவில்லை. அரசியல் பேச்சுக்களிலிருந்து பாண்டியரை அடியோடு ஒதுக்கி விட்டார்.

இந்த மாறுதலைக் கண்டு பேரதிர்ச்சியுற்ற சந்திரசேகர பாண்டியர் தென்காசிக்கு ஆள் அனுப்பித் திருவல்லப பாண்டியனையும், அப்துலையும் வரவழைத்தார். தனியே அவர்கள் மூவரும் கூடிப் பேசினார்கள். விஜயநகரத்திலிருந்து வந்த செய்தி பற்றித் தம்மிடம் நாகமர் எதுவுமே கூறவில்லை என்றும், அதிலிருந்து அவர் போக்கே தலைகீழாக மாறி விட்டதென்றும், சந்திரசேகர பாண்டியர் தெரிவித்தார்.

“தங்களுக்கு விரைவில் நாடறிய முடிசூட்டுவிழா நடத்த வேண்டும் என்று என்னிடம்கூடக் கூறினாரே?” என்றான் திருவல்லப பாண்டியன்.

“அப்படிக் கூறியதையே அவர் இப்போது மறந்து விட்டார். தாமே இங்கு முடிசூடா மன்னராக இருந்துவிடலாம் என்று நினைக்கிறார் போலும்.”

“வீரசோழனுடைய துரோகத்தை விட இது பயங்கரமான துரோகமாக இருக்கிறதே!” என்றான் தென்காசிப் பாண்டியன். “ஒருபோதும் இப்படித் துரோகம் செய்யச் சொல்லி ஓலை அனுப்பியிருக்க மாட்டார் சக்கரவர்த்தி.”

“நாமே நாகம நாயக்கரிடம் நேரில் கேட்டு விடுவோம். இனியும் தயங்க வேண்டாம்” என்றான் அப்துல்.

அவர்கள் நாகம நாயக்கரைக் காணச் சென்றபோது அப்படி ஒரு நிலையை எதிர்பார்த்தவர் போல் அவரும் அவர்களை அலட்சியமாக வரவேற்றார். அவர்களிடம் எதுவுமே முகம் கொடுத்துப் பேசவில்லை நாகம நாயக்கர். திருவல்லப பாண்டியனே பேசத் தொடங்கினான்.

“பெரிய பாண்டியருக்கு எப்போது முடிசூட்டு விழா நடத்தலாம் என்பதை அறிந்து கொள்ள வந்திருக்கிறேன்!”

“முடிசூட்டு விழா என்று ஒன்று எதற்கு?” என்று திருப்பிக் கேட்டார் நாகம நாயக்கர்; “இப்பொழுது அவர்களுக்கு இங்கு நான் ஒரு குறையும் வைக்கவில்லை; எப்போதுமே இப்படி இருந்து விட்டுப் போகட்டுமே!”

“நாயக்கர் அவர்களே!” என்று துடித்தெழுந்தான் திருவல்லபன்.

“நான் முடிவு செய்து விட்டேன். பாண்டிய நாடு இப்போதுள்ள நிலையில் அவரிடம் ஆட்சிப் பொறுப்பை என்னால் கொடுக்க முடியாது!” என்று அமைதியோடு கூறினார் நாகம நாயக்கர்.

சந்திரசேகர பாண்டியரின் தலையில் அந்த அரண்மனையே இடிந்து விழுவது போலிருந்தது.

(தொடரும்)

## போர்முனைத் துணுக்குகள்!

போரில் காயம்பட்டு ராணுவ ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்தார் அந்தப் போர் வீரர். சாப்பாட்டு வேளைக்குச் சரியாக ஒரு நர்ஸ் வருவாள். ஒரு புட்டியிலிருந்து ஒரு கரண்டி மருந்தை எடுத்து அவர் வாயில் ஊற்றிவிட்டுப் போய்விடுவாள். அந்தமருந்தில் ஆகாரச் சத்து முழுதும் இருக்கிறதாம்!

நன்றாகச் சாப்பிட்டுப் பழக்கப்பட்ட போர்வீரருக்கு இந்த 'மருந்துச் சாப்பாடு' பிடிக்கவில்லை. “எனக்கு வேறு ஏதேனும் ஆகாரம் கொடுங்களேன், சாப்பிட!”

“நோ...நோ...இதைத்தான் உங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று டாக்டர் சொல்லியிருக்கிறார்.”

“சரி; போகட்டும்....பொழுது போக்குக்காக என்னை ஏதேனும் படிக்கச் சொல்லியிருக்கிறார் டாக்டர். அதற்கு...”

“என்ன பத்திரிகை வேண்டும், சொல்லுங்கள்: கொண்டு வந்து தருகிறேன்...”

“அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்; ஒரு தபால் தலை கொண்டு வந்து தாருங்கள். அதிலுள்ள எழுத்துக்களைப் படித்துக்கொண்டிருக்கிறேன்.... பத்திரிகை, கித்திரிகை என்றால் சிரமமாக இருக்கும்!...” என்றார் அந்த ராணுவ வீரர் வயிற்றெரிச்சல் தீர!

இரண்டாம் உலகப் போரின்போது ஜெர்மானியப் படைகள் பெல்ஜியத்தில் ஒரு நகரத்தைத் தாக்கிக் கைப்பற்றின. எதிர்த்துப் போரிட்ட பெல்ஜிய வீரர்கள் பலரும் கைதானார்கள். அவர்களில் ஒரே ஒருவன் மட்டும், “பெல்ஜியப் படையின் வீரத்துக்கு முன்னால் ஜெர்மானியர்களின் வீரம் கால் தூசு பெறாது!” என்று ஜெர்மன் அதிகாரிக்குக் கேட்கும்படியாகச் சொன்னான். அதிகாரிக்குக் கோபம் வந்துவிட்டது. அந்த ஆசாமியைத் தனியே அழைத்து, “ஜெர்மானியர்களைத் தாழ்த்தும்படியாக நீ பேசக் கூடாது...ஜெர்மனிக்கு விசுவாசமுள்ளவனாக இருப்பதாக நீ இப்போது பிரதிக்ஞை எடுக்க வேண்டும்...இல்லாவிட்டால் உன்னைச் சுட்டுத் தள்ளிவிடுவேன்!” என்று மிரட்டினார்.

அந்தப் பெல்ஜிய வீரனும் அவர் சொன்னபடியே பிரதிக்ஞை எடுத்துக்கொண்டான். அதைக் கண்டு மனமகிழ்ந்த அந்த அதிகாரி, “இனி நீயும் ஒரு ஜெர்மன் வீரன்தான்... எங்கே, இப்போது பெல்ஜிய வீரர்களைப் பற்றிச் சொல், பார்ப்போம்!” என்றார்.

“நாம் அடி அடியென்று அடித்து நொறுக்கியும் கொஞ்சம் கூடச் சளைக்கவில்லையே இந்தப் பெல்ஜியப் போர்வழிகள்! ...சுத்த எமகாதகப் போர்வழிகள்தான் போலிருக்கிறது!..” என்றான் கட்சி மாறியும் பற்று மாறாத அந்தப் பெல்ஜிய வீரன்!



— எஸ். வி. ஆர்.



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன் – அருந்தமா

## 5

திருவல்லிக்கேணி, அரசினர் செகண்டரி ஆசிரியப் பயிற்சிப் பள்ளி எடுத்த எடுப்பிலேயே வெற்றி கண்டு விட்டது. இந்த அமோகமான வெற்றி நிர்வாகிகளுக்குச் சங்கடமாகக் கூட இருந்தது. பள்ளிக்கூடம் இப்போது அமைந்திருந்த கட்டடத்தில் தேவைப்பட்ட அளவுக்கு மாணவிகள் அனைவருக்கும் இடம் தேடுவது கஷ்டமாக இருக்கவே 'மகாராஜா பள்ளிக்கூட'த்து நிர்வாகஸ்தரில் ஒருவரான திவான்பகதூர் ராமசுவாமி நாயுடு பெரிய தெருவில் தமக்காகக் கட்டப்பட்ட ஒரு வீட்டைத் தாராள மனத்தோடு இவர்களுக்குத் தந்தார். பள்ளி நடத்துவதற்கு ஏற்ற ஓர் இலட்சியக் கட்டடம் என்று இதனைக் கருத இயலாவிட்டாலும் ஒன்றுமே இல்லாமல் இருப்பதை விட இது எவ்வளவோ மேல் என்று மிஸ் லின்ச் அந்த உதவியை ஏற்றாள். தங்கள் தேவைக்கு இந்தக் கட்டடம் போதுமானதாக மட்டுமல்ல, தாராளமாகவே இருக்கும் என்று எதிர்பார்த்தாள்.

உண்மையில் அநேக பெற்றோர்கள் தங்கள் சிறு பெண்களைப் பள்ளிக்கூடத்தில்சேருவதற்காக அனுப்பிக் கொண்டேயிருந்தபடியால் சில மாதங்களுக்கெல்லாம் அக்கட்டடத்தில் எக்கச் சக்கமாகக் கூட்டம் நிறைந்து விட்டது. மனுப் போட்டவர்களில் பலரைத் திருப்பி அனுப்பி, இன்னும் பெரிய கட்டடம் கிடைக்கும் வரை அவர்கள் காத்திருக்க வேண்டியது என்று கூறும் படியாயிற்று. நல்லவேளையாக இந்த முறை மிஸ் லின்ச் நீண்டகாலம் பள்ளிக்கு ஓர் இருப்பிடத்தைத் தேடி அலையும்படி நேரவில்லை. ஸிஸ்டர், சித்தி, மற்றப் பெண்கள் யாவரும் எழும்பூரிலிருந்து கிளம்ப ஆயத்தமாவதற்குள் அரசாங்கம் அப்பொழுதுதான் காலியாகியிருந்த ஒரு பழைய கட்டடத்தைப்பள்ளிக்கென்று எடுத்துக் கொள்ளத் தீர்மானித்து ஒப்பந்த ஷரத்துக்களையும் ஒப்புக் கொண்டு விட்டிருந்தது.

டி. பி. கோவில் தெரு என்று பழக்கத்தில் அழைக்கப்படும் துளசிங்கப் பெருமாள் கோவில் தெருவிலிருந்த ஒரு பெரிய மாளிகை அது. அதிர்ஷ்டவசமாக அது பிராமண விதவைகள் இல்லத்துக்கென்று மிஸ் லின்ச் வாடகைக்கு எடுத்துக் கொண்டிருந்த வீட்டுக்கு எதிரேயே, எதிர் வாடையிலிருந்தது. பள்ளிக்கூடம் எவ்வளவுதான் வேகமாக முன்னேறிக் கொண்டு போனாலும், இன்னும் சில வருஷங்களுக்காவது அக்கட்டடம் அதற்குப் போதுமானதாக இருக்கும் என்று எல்லோரும் நம்பினார்கள்.

அதற்கு எதிர்த்தாற்போல் மாதம் அறுபது ரூபாய் வாடகைக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட

வீடும் மிகவும் பெரிதாகவே இருந்தது. முதன் முதலாக அங்கு வந்து சேர்ந்த இளம் விதவைகள் ரொம்பவும் விஸ்தார மான அதன் நீளஅகலங்களைப் பார்த்துத் தங்களால் அங்கு, வீட்டில் வசிப்பது போல் பாந்தமாக வாழ முடியுமா என்று யோசிக்கலாயினர்.

இப்போது அங்கு பன்னிரண்டு வித வைகள் இருந்தனர். பெரிய பெண்க ளுள் மிகவும் கெட்டிக்காரிகளானவர்கள் படித்துக் கொண்டிருந்த வகுப்பிலேயே தானும் படித்துக் கொண்டிருந்தாள் பார்வதி. எனினும் அக்குடும்பத்தின் கடைக்குட்டி அவள்தான்! அம்முக் குட்டிதான் எல்லோரையும்விட மூத்த வள். அவள் தகப்பனார் அவளைக் கோயமுத்தூரில் விசாலாட்சியிடம் ஒப் படைத்த அன்று இருந்த அம்முக் குட்டிக்கும் இன்று இருப்பவளுக்கும் மிக மிக வித்தியாசம். அடையாளம் தெரியாத வகையில் அவள் மாறி விட்டிருந்தாள். இப்போது சகோதரி யையும் மிஸ் பிரேகரையும் பின்பற்றி அந்தப் பெண்கள் இருண்ட கூடத் தைத் தாண்டி மாடிக்கு ஏறிச் சென்று படுக்கை அறைகளைப் பார்வையிடப் போனபோது அம்முக்குட்டி மற்ற பெண்களுடன் வேடிக்கையாகச் சிரித் துப் பேசினாள். எந்த விஷயத்திலும் நகைச்சுவை மிகுந்த அம்சத்தை அவ ளால் காண முடிந்தது. ஏதோ பெரிய தான்யக் கிடங்கு மாதிரி தோற்ற மளித்து அழுது வடிகிற இந்தப் பழைய வீட்டில் குடியிருக்கப் போவது கூட அதுவரை அவர்கள் உணர்ந்தறியாத வேடிக்கையும் குதூகலமும் நிறைந்த ஓர் அனுபவமாக விளங்கப் போவது போல் அவள் பேசினாள்.

மற்றப் பெண்களில் அநேகர் அவள் கூறியதை ஒத்துக் கொள்ளவில்லை. வாசற் படியை விட்டு இறங்கியவுட னேயே தெரு. பின்புறத்தில் ஒரு சிறு முற்றம் தவிர வேறு திறந்த வெளியே இல்லாத அந்த வீடு அவர்களுக்குப் பிடிக் கவேயில்லை. வீட்டில் ஜன்னல்களே இல்லை. ஆங்காங்கு பேய் பிசாசுகள்கூட இருக்கலாம் என்று பயப்படக் கூடிய அளவுக்கு இருண்ட மூலைகளும் இண்டு இடுக்குகளும் இருந்தன. ஆதி காட் டேஜில் இருந்தது போலவே இங்கே யும் அத்தனை சந்தோஷமாக இருக்கப் போகிறோம் என்று அவர்களை நம்பவைப் பதற்குச் சித்தி அரும் பாடுபட்டுத் தன் அகட விகட சாமர்த்தியம் எல்லாவற் றையும் உபயோகிக்க வேண்டியிருந்தது.

தெருவைத் தாண்டிப் பள்ளிக்கூடம் சென்ற போதும் தோற்றத்தைப் பொறுத்தவரை பி. டி. ஸ்கூலைப் போல வேறு எதுவும் இருக்க முடியாது என்று அவர்களுக்குத் தோன்றியது. இந் தப் பள்ளிக்கூடத்தின் வாசல் நிலைப் படி மிகவும் நன்றாகக் கலை அழகுடன் செதுக்கப்பட்டிருந்தது. உள்ளே நுழைந் ததும் மேல் கூரை வரை உயர்ந்து நின்ற பெரிய கல்யாணக் கூடம். மாடியறைகள் யாவும் அந்தக் கல் யாணக் கூடத்தைச் சுற்றிலும் அதனைப் பார்த்த வண்ணம் அமைந்திருந்தன. கீழே அந்தக் கூடத்தை நாலாபுறமும் சூழ்ந்து இருந்த வகுப்பறைகள் சிறியன வாய் இருண்டு கிடந்தன. கம்பியிட்ட ஜன்னல்கள் உயரத்தில் இருந்ததால் அறைகள் சிறைக்கூடம் போல் காணப் பட்டன. அந்தக் கட்டிடத்தில் எங் குமே மின்சார விளக்குகள் இருக்க வில்லை. வெயில் காலத்தில் இந்த அறைகளில் வெந்து புழுங்க வேண்டி யதுதான்! விளையாடுவதற்கோ கொஞ் சமும் இடம் இல்லை. சகோதரி சுப்பு லக்ஷ்மியின் தாவர சாஸ்திர வகுப்புக் குத் தேவைப்பட்ட செடிகளை வளர்ப் பதற்குக் கூடச் சிறு தோட்டம் போட முடியாது! தாங்கள் எழும்பூரை விட்டு வந்திருக்கவே கூடாது என்று அப் பெண்கள் தங்களுக்குள் பேசிக்கொண் டது சகோதரியின் காதில் விழுந்த போது, வெளிப்படையாக அதனைச் சொல்லாவிட்டாலும், அவளுக்கு அவர் களிடம் அனுதாபமே மிகுந்தது.

இருந்தாலும் அவர்கள் அங்கு சீக் கிரமே குதிர்ந்து விட்டார்கள். சித்தி தன் இயற்கையான சாமர்த்தியத்தால் அந்த விரிச்சோடிக் கிடந்த பெரிய வீட் டைச் சீக்கிரமே அழகாக அமைத்து விட் டாள். சகோதரியும், சித்தியும் தினமும் காலை ஐந்து மணிக்கு எழுந்து விடு வார்கள். மற்றவர்கள் வேண்டுமானால் ஆறு மணிக்குப் பிரார்த்தனை மணி அடிக்கும் வரை தூங்கலாம். எப் பொழுதும் புது மலர்கள் நிரம்பியதாய்ச் சகோதரியால் அழகாக அலங்கரிக்கப் பட்ட பூஜை அறைக்குள் அவர்கள் செல்வார்கள். பிரார்த்தனைக்குப் பிறகு கீழே ஓடிச் சென்று காப்பி சாப்பிட்டு விட்டு வருவார்கள். தங்கள் அறைகளை ஒழுங்குபடுத்திவிட்டுப் படிக்க உட்காரு வார்கள். எல்லோரும் குளித்து முடிக்க வும் சமையல் ஆகவும் சரியாக இருக் கும். சாப்பிட்டவுடன் பள்ளிக்கூடம் செல்லும் நேரமாகி விடும்.

டி. பி. கோயில் தெரு கருகருப்பான நடமாட்டம் மிகுந்த ஒரு சாலை. அதைக் குறுக்கே கடந்து செல்வது ஒரு சாதனைதான். வண்டிகள் போக்கு வரத்து அதிகம் இருக்கவில்லை. ஆயின், அங்கு சாலையிலும், நடை பாதையிலும்

சென்ற ஏராளமான மக்கள் அனைவரும் இளம் விதவைகளை முறைத்துப் பார்ப்பதற்கு என்றே ஆங்காங்கு நின்று விடுவார்கள். அடிக்கடி நல்ல, கண்ணியம் வாய்ந்த ஆண்களும் பெண்களும் கூடக் கடினமான குத்தலான சொற்களை அவர்கள் மீது வீசுவார்கள். இவர்களில் பெரும்பான்மையானவர்கள் பிராமணர்கள். அவர்களுக்கு விதவைகளான உறவினப் பெண்கள் யாரேனும் இருக்கலாம். அவர்களுடைய பெண்களிலேயே சிலர் கணவனை இழந்தவர்களாகவும் இருக்கலாம். பளபளவென்று வாரிப் பின்னி விடப்பட்ட கேசத்துடன் நடந்து செல்லும் இந்த விதவைகளைப் பார்த்து அவர்கள் திடுக்கிடுவார்கள். புனிதமான சம்பிரதாயத்தையும், ஆண்டவனுடைய கட்டளையையும் எதிர்ப்பவர்களுக்குக் கொடுமையான தண்டனை காத்திருக்கிறதென்று அவர்கள் ஜோசியம் கூறுவார்கள்.

தெருவைக் கடக்க ஒரு நிமிடம் கூட ஆகாது. அதற்குப் பிறகு பள்ளிக் கூடத்துக்குள் புகுந்துவிட்டால் அப் பெண்கள் மீண்டும் சந்தோஷமாக இருக்க முடியும். முதல் சில வாரங்கள் கழிந்த பின் மிகவும் சந்தோஷம் எய்தியதன் காரணமாக அவர்கள் தங்கள் சூழ்நிலையின் அழகற்ற தன்மையையும் இடைஞ்சல்களையும் மறந்து விட்டார்கள். அப்போது சகோதரி சுப்புலக்ஷ்மியைத் தவிர பி. ஏ. பட்டம் பெற்று அவர்களுக்குப் பாடம் போதிக்கக்கூடிய ஹிந்துப் பெண் வேறு யாரும் இருக்கவில்லை. ஆனால் நாளாவட்டத்தில் இந்த நிலைமை மாறலாம்; ஆரம்ப சூரத்தனத்துடன் நில்லாமல் தொடர்ந்து நன்றாகப் படித்து, பார்வதி, லக்ஷ்மி, செல்லம் ஆகியோரும், மற்றுமுள்ள விதவைகளும் பட்டம் பெற்றுவிட்டார்களேயானால். இதற்கிடையில் இப்போது மிஸ் பிரேக்கின் கீழ் வேலை பார்த்த ஆசிரியைமார்கள், அவர்கள் ஆங்கிலேயர்களோ, ஆங்கிலோ இந்தியரோ, அல்லது இந்திய கிறிஸ்துவரோ எப்படி இருப்பினும் சரி, இந்தப் புது முயற்சியில் முழு மனத்தோடு உற்சாகமாக ஈடுபட்டார்கள். பள்ளி மாணவிகளிடையே ஜாதி மத பேதம் ஏதும் இருக்கவில்லை. எதிர் வாடை விடுதியிலிருந்து வந்து படிப்பவர்களுக்கும் அன்றாடம் வீட்டிலிருந்து வந்து படிப்பவர்களுக்கு மிடையே வித்தியாசம் ஒன்றும் பாராட்டப்படவில்லை. அவர்கள் எல்லோரும் ஒன்றிப் பழகி விளையாடி நெருங்கிய தோழிகளாகி விட்டனர்.



"இவேட்டரில் எனக்கும் உங்கம்மாவுக்கும் ரெண்டாம் நம்பர் மூணும் நம்பர் சீட் ரிசர்வ் பண்ணிவிட்டு உங்களுக்கு மட்டும் இருபத்தெட்டாவது சீட் ரிசர்வ் பண்ணிக் கொண்டிருக்கிங்களே, நியாயமா இது?"

வைதீகமான திருவல்லிக்கேணிக்கு மாற்றிக் கொண்டால் நிறைய விதவைகள் வந்து சேருவார்கள் என்ற மிஸ் லின்ச்சின் நம்பிக்கை தவறோ என்று கொஞ்ச காலம் தோன்றியது. திருவல்லிக்கேணி வாழ்மக்களில் அவர்களை வெறித்துப் பார்க்கவென்று வெளியே வராதவர்கள்கூடத் தங்களிடையே அந்த விதவைகள் குடியிருப்பதைச் சிறிதும் விரும்பவில்லை. அவர்களில் அநேகம் பேர் அந்த விடுதி அங்கே இருப்பதைத் தங்கள் ஆசாரத்துக்கு இழிவு என்று கருதினார்கள். சுப்புலக்ஷ்மியையும் அவளுடைய சித்தியையும் எழும்பூரைவிட இங்கு இன்னும் பரவலாகவும் கூரிய சொற்களாலும் நிந்தித்தார்கள். இச் சுடு சொற்களைப் பொறுப்பதே கடினமாக இருந்தது.

மிஸ் லின்ச்சின் சுற்றுப் பிரயாணங்கள் இப்போது அநேகமாக விடுதிக்கு ஆள் சேர்ப்பதற்கென்றே வெளிப்படையாக அமைந்தன. ஆனால் இப்போதும் அவள் வெற்றியை விடத் தோல்வியையே அதிகம் கண்டாள். ஆயின், சில நண்பர்களும் ஏற்பட்டார்கள். நெல்லூர் ஜில்லாக் கலெக்டர் ஓர் இந்தியர். அந்நாட்களில் இந்தியர்களுக்கு அபூர்வமாகத்தானே இப்பதவி கிட்டும்! ஸ்ரீ ஆர். ராமச்சந்திர ராவ் இவர்கள் காரியத்தில் மிகவும் ஈடுபட்டுப் பணத்தையும் பொழுதையும் பொருட்படுத்தாமல் பாடுபட்டு, பழைமையான



''ஒரு அழகான பெண்ணுக்கு உதவி செய்ததால் ஆபீஸ் வரக் கொஞ்சம் லேட்டாகிவிட்டது என்கிறீரே, வாட் ஹெல்ப்?''

''என் மனைவிக்கு ஒத்தாசையாக அப்பளத்து மாவைப் பிசைந்து, இடித்து, உருட்டி இட்டுக் கொடுத்த பிறகு, அதை உலர்த்தி, அடுக்கி, சம்புடத்துக்குள்ளே, எண்ணி வைத்துவிட்டு ஓடி வருகிறேன் சார்!''

கொள்கைகளில் பற்றுடைய பெற்றோர்களிடம் மனமாற்றத்தை உண்டாக்கினார். அவர்கள் தம்முடைய விதவையான பெண்களை இந்த விடுதிக்கு அனுப்பி வைக்கும்படி செய்தார். இதை மிஸ் லின்ச் வெகு நாட்கள் கழித்து எழுதும்போது குறிப்பிட்டிருக்கிறாள். மிஸ் லின்ச் தொடர்ந்து எழுதுகிறாள்: ''ஒரு தகப்பனாருடைய ஆட்சேபணைகள் எல்லாம் சீக்கிரமே வெல்லப்பட்டன; அவருடைய பன்னிரண்டு வயது விதவைப் பெண்ணை விதவைகள் இல்லத்துக்கு அனுப்பிவைத்தால் மாதம் ஐந்து ரூபாய் தருவதாக ராமச்சந்திர ராவ் வாக்களித்தவுடன்! ராமச்சந்திர ராவ் உத்தியோக உயர்வு பெற்றுச் சென்னைக்கு மாற்றலாகிச் செல்லும் வரை இரண்டு ஆண்டுகளுக்கு அவ்வாறு பணம் கொடுத்து வந்தார். இதற்குள் அந்தப் பெற்றோர்களும், தங்கள் பெண்ணுக்குக் கிடைக்கும் கல்வியின் மதிப்பில் நம்பிக்கை கொண்டவர்களாகி விட்டனர். இனி அப்பெண் தொடர்ந்து படிக்க அவள் தகப்பனுக்கு லஞ்சம் கொடுக்கத் தேவை இல்லைதான். ''இதே விதவையை இல்லத்தில் சேர்க்க நான் எடுத்துக் கொண்ட முயற்சி பலன் தரவில்லை. எனக்குக் கிடைத்ததெல்லாம் கடுமையான பேச்சும் உறுதியான மறுப்பும் தான்'' என்று மிஸ் லின்ச் ஒப்புக் கொண்டிருக்கிறாள்.

திருவல்லிக்கேணி விடுதி ஆரம்பித்துச் சில வாரங்களே ஆகியிருந்தபோது தெற்கே சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்த மிஸ் லின்ச், தன்னைக் கும்பகோணத்தில் சந்திக்கும்படி சுப்புலக்ஷ்மிக்குத் தெரிவித்தாள். அங்கே பிராமணப் பிரமுகரான ஸ்ரீ வி. கே. ராமானுஜாச்சாரியார் அவர்கள் பிரும்ம ஞான சபையின் (Theosophical Society) ஒரு கூட்டத்தில் பேசும்படி அவ்விரு பெண்களையும் அழைத்திருந்தார். சகோதரி சுப்புலக்ஷ்மி ஆடவர் கூட்டத்தின் முன் பேசுவது இதுவே முதல் தடவை. அவள் சிறிதும் அச்சமின்றித் தாங்கள் மேற்கொண்டிருக்கும் காரியத்தைப் பற்றித் தன்னம்பிக்கையோடு பேசி முடித்தாள். அக் கூட்டம் முடிந்ததும் ஒரு பெருந் தொகை நன்கொடையாக மிஸ் லின்ச்சினிடமும், சகோதரியினிடமும் கொடுக்கப்பட்டது. அவர்கள் அதனைத் தாங்கள் மேற்கொண்டிருக்கும் நன்முயற்சிக்கு உசிதமான முறையில் செலவு செய்துகொள்ளலாம் என்று சொன்னார்கள்.

சில மாதங்களுக்குப் பிறகு சென்னை கவர்னர் லார்டு பென்ட்லாண்ட் (Lord Pentland) உத்தியோக முறையில் திருவல்லிக்கேணிப் பள்ளிக்கூடத்துக்கு விஜயம் செய்தார். இதற்குள் சுப்புலக்ஷ்மியும் லேடி பென்ட்லாண்டும் ஒருவருக்கொருவர் அறிமுகம் ஆகியிருந்தனர். பின்னால் இதுவே ஆயுட்கால நட்பாக நீடித்து வளர்ந்து வந்திருக்கிறது.

ஒரு நாள் நான் சகோதரியின் வீட்டுக்குச் சென்றிருந்தபோது லேடி பென்ட்லாண்டின் ஸர்ரே (Surrey) தோட்டத்திலிருந்து அப்போதுதான் வந்திருந்த சில உலர்த்தப்பட்ட பூக்களைப் பார்த்துக்கொண்டிருந்தார். ''எல்லாவற்றுக்கும் ஆரம்பம் அந்தப் புழுக்கள்தான்'' என்றார் சகோதரி என்னிடம்.

நான் ஒன்றும் புரியாமல் அவர் கையிலிருந்த அந்த உலர்ந்துபோன புஷ்பங்களை வெறித்துப் பார்த்தேன். அவைகளின் நிறம் சிறிது மங்கியிருந்தாலும் அப்பூக்கள் மிகவும் நன்றாகவே பாதுகாக்கப்பட்டிருந்தன.

''எந்தப் புழுக்கள்?'' என்று நான் கேட்டேன்.

சகோதரி கலகலவென்று சிரித்தார். ''பட்டுப் புழுக்கள்.'' அந்த உலர்ந்த மலர்களை அவை எந்த உறையில் அனுப்பப்பட்டு வந்தனவோ அதிலேயே மீண்டும் வைத்துவிட்டு அவர் மேலே கூறத் தொடங்கினார்.

**(தொடரும்)**


ஏ.எஸ்.ராகவன்
எழுதும்
புதிய
தொடர்கதை
யாத்திரை
கல்கி
பிப்ரவரி
13ம் விசேஷ மலரில்
ஆரம்பமாகிறது

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

## 65. சிவனை மணந்தது சிவம்

மோகமுற்ற முதியவரிடம் வள்ளியம்மை சீற்றத்துடன் கூறினாள்:

''பெரியவரே! தவவேடம் கொண்ட உமக்கு இவ்வெண்ணம் தகுதியோ? புனங் காக்கும் சிறுமியாகிய என்னை இரந்து நிற்றல் உமது பெருமைக்கு அழகோ? உம் செய்கையை எனது குலத்தார் அறிந்தால் உமக்குப் பெருங் கேடு விளையும். உமக்கு நரை வந்தும் நல்லுணர்வு வரவில்லையே! பித்தரைப் போல் பிதற்றி உமது குலத்துக்கும் இவ்வேட்டுவர் குலத்துக்கும் பெரும் பழியைச் செய்து விட்டீர்'' என்று வெறுத்துப் பேசினாள் பிராட்டி. இதன் பின்னும் கிழவருக்குத் துணை யிருத்தலாகாதெனக் கருதி, புனங் காக்கப் புறப்பட்டுச் சென்றாள்.

வள்ளிப்பிராட்டியார் செல்லுவதைக் கண்ட தமக்குவமை இல்லாத் தலைவர் விக்கினங்களை யெல்லாம் நீக்கும் தந்தி முகத்து எந்தையை, ''முன்னே வருவாய் முதல்வா!'' என்று துதித்தார். விநாயகரை மறந்ததால் முதலில் பரமேசுவரர் திரிபுர தகனத்துக்கு முயன்ற போதும், தேவியார் பண்டாசுர வதத்துக்கு முயன்ற போதும் பலனில்லை. விவாகமாயினும் அந்தப் பிரம்மசாரியை நினைந்தாலே முடியும் போலும்! முருகன் தமக்கு மூத்த வேழமுகப் பெருமானை வேண்டினார். அருள் மயமான விநாயகப் பெருமான் தம்பிக்கு உதவி புரிவதற்காக அக்கணமே மத யானை வடிவு கொண்டு மலையும் மண்ணும் நடுங்க அங்கு குலுங்க ஓடி வந்தருளினார்.

வள்ளியம்மையார் மத யானை நெருங்குவது கண்டு அஞ்சினாள். திசை புரியாமல் ஓடித் தான் வெறுத்தொதுக்கிய விருத்த முனிவரையே தழுவிக் கொண்டாள். ''யானையிடமிருந்து என்னைக் காப்பாற்றும்'' என்று அலறினாள்.

ஓங்காரமாகிய விநாயக யானை தோன்றியவுடன் ஆங்காரம் தானே நசித்துப் பூரண சரணாகதி யடைய வேண்டியதுதானே?

ஜீவான்மா பரமான்மாவை அடைக்கலம் புகுந்து விட்டது. இனி அநுக்கிரகம் நடக்க வேண்டியதுதானே!

முருகப் பெருமான் யானையாக வந்த விநாயகப் பெருமானை வழிபட்டுத் துதித்து, ''எம்பெருமானே! நீர் தோன்றியதால் நான் கருதியது நிறைவு பெற்றது. ஆதலால், தாங்கள் மீண்டெழுந்தருள்க'' என்று விண்ணப்பம் செய்தார்.

விநாயகரும் மறைந்தருளினார்.

**அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்**
**அப்புன மதனிடை யிபமாகி**
**அக்குற மகளுட னச்சிறு முருகனை**
**அக்கண மணமருள் பெருமாளே**

என்று இதனாலேயே விநாயகரைத் துதிக்கிறார் அருணகிரியார்.

விநாயக உருவாக வந்த பிரணவம் இப்போது ஆறுமுகப் பெருமானின் நாவில் ஒலியாகப் பொதிந்தது. அண்டிய வள்ளியின் சிரத்தைத் தம் திருக்கரத்தால் தீண்டி திவ்விய தீட்சை தந்து அக்கணமே அவளது செவியில் பிரணவ உபதேசம் செய்தார் பிராண நாயகன். இதுவே உண்மையான வள்ளித் திருமணம். அன்று தாதைக்குச் செய்த மகத்தான உபதேசத்தை இன்று பிரிய பத்தினிக்குப் புரிந்து விட்டார் ஞான பண்டித சுவாமி. தெய்விக விவாகங்களில் இது போன்ற ஒப்பற்ற புனிதமுள்ள இன்னொன்று உண்டா?

**ஓது குறமான் வனத்தில் மேவியவள் கால் பிடித்துள்**
**ஓமெனுபதேச வித்தொடணைவோனே''**

என்று இந்தப் பெருநிகழ்ச்சியை அருணகிரியார் பாடுகிறார். 'கால்'



என்றால் பிராண வாயு; வள்ளியின் 'கால் பிடித்து' என்பது அவளுக்கு பிராணாயாமம் அருளியதைக் குறிக்கும்.

குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா

என்று திருப்புகழில் முதலில் உபதேசத்தையும் அடுத்து வள்ளித் திருமணத்தையும் சேர்த்துக் கூறுவதாலும் இரண்டும் ஞானமயமானது என்று தெளியலாம். உபதேசத்தால் சிவம் சிவனை மணந்ததே வள்ளியம்மை விவாகம்.

பிரணவத்தின் உபதேசத்துடனேயே அப்பிரணவத்தின் திவ்விய வடிவான சொரூபத் தோற்றமும் உண்டாயிற்று. மாறு வேடத்திலிருந்த ஆறுமுகப் பெருமான் தமது இயல்பான ஆறுமுகத் திருவுருவை அக்கணமே வள்ளியம்மைக்குக் காட்டியருளினார். பன்னிரண்டு திருப் புயங்களும், வேற்படையும், குலிசமும், மற்றைய ஆயுதங்களும் தாங்கி மயில் வாகனத்தில் காட்சியளித்த ஐயனைக் கண்ட வள்ளிப் பிராட்டியார் எத்தகைய உணர்ச்சிகள் எய்தியிருப்பாள் என்பதை நாம் எப்படி வருணிக்க முடியும்? முதலில் உணர்ச்சியே ஒழிந்த அநுபவ ஆனந்தப் பெருநிலை. அப்புறம் பரமன்—பக்தன் என்ற இரட்டை உறவில் கொண்ட பக்தி ஆனந்தம். இவரையா வெறுத்து ஒதுக்கினோம் என்ற அச்சமும்





"நூறு நாட்களுக்கும் மேலாக வெள்ளி விழா வாரத்தை நோக்கித் தொடர்ந்து நடைபெறுகிறதுசார்!"
"எந்த சினிமா?"
"இல்லே! என் மனைவிக்கும் பக்கத்து வீட்டுக் காரிக்கும் நடக்கும் சண்டைதான்!"

தோன்றிற்று. வள்ளியம்மை பெருமானடி பணிந்தும் துதித்தும் ஆராத ஆன்மக் காதலில் கசிந்தாள். முருகவேளின் அருட் கண் பார்வை வள்ளிப் பிராட்டியாருக்கு ஞான தீட்சையாகியது.

மெல்ல மெல்ல வள்ளியும் தெளிந்து பேசலானாள்: "எம்பெருமானே! இத் திருவுருவத்தை முன்னரே காட்டாமையினால் அடியேன் செய்த பிழைகளைப் பொறுத்தருள வேண்டும்" என்று அன்புடன் வேண்டிக் கொண்டாள். கந்தவேள் பிராட்டியாரை நோக்கி அருள்மழை பொழிந்தார். "பெண்ணே! நீ முற்பிறப்பில் திருமாலின் புதல்வி. நம்மை நோக்கி மணக்குமாறு நற்றவம் செய்தாய்; ஆதலால் இப்பிறப்பில் நாம் உம்மிடம் வலிதில் வந்து அருள் புரிந்தோம்; எம்மையன்றி உன் மனத்தில் வேறெவர்க்கும் இடமில்லை என்று உலகுக்கு உணர்த்தவே வேறு வடிவங்களில் வந்தோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். பின்னர் கந்தப் பெருமான், "வள்ளி! நீ தினைப்புனம் செல்; யாமும் அங்கே வருவோம்" என்று கூறி அனுப்பினார்.

ஆன்மாவின் பக்குவத்துக்கு மீண்டும் மீண்டும் பரீட்சை பார்ப்பான் இறைவன். புலன்களிலிருந்து ஆன்ம விடுதலை பெறுவது எவ்வளவு கடினம் என்பதையே இனி வரும் கதைப் பகுதி உணர்த்துகிறது. தினைப்புனம் திரும்பிய வள்ளியம்மையார் மீண்டும் பரண்மீது நின்று, "ஆலோலம்" என்று ஆயலோட்டினாள். அப்போது புனங் காக்கும் பாங்கி வந்து அம்மையாரை வணங்கினாள். வள்ளியம்மையார் சூடிய பூக்களின் மணம், அவயவங்களின் தோற்றம் முதலியவற்றின் மாற்றத்தைக் கண்டு ஐயங் கொண்டாள். "அம்மா! தினைப்புனத்தைப் பறவைகள் பாழ்படுத்த இவ்வளவு காலம் எங்கு சென்றாய்?" என்று வினவினாள். அதனைக் கேட்டு வெட்கிய நாயகியார், "நான் மலை மீதுள்ள சுனையில் நீராடச் சென்றேன்" என்று நாணத்துடன் கூறினாள்.

**மைவிழி சிவப்பவும் வாய் வெளுப்பவும்**
**மெய்வியர் வடையவும் நகிலம் விம்மவும்**
**கைவளை நெகிழவும் காட்டுந் தன்களை**
**எவ்விடை யிருந்துள நியம்புவா யென்றாள்**

வள்ளியம்மையார் மீண்டும் பாங்கியைப் பார்த்து, "நான் உன்னையே உற்ற தோழியாக எண்ணியிருந்தேன். நீ என் மீது குறையாக எண்ணாதே!" என்றாள். அச்சமயத்தில் ஆறுமுகக் கடவுள் முன்போல் வேட வடிவு தாங்கி வேட்டையாடி இளைத்தவர் போல் அங்கு வந்தார். வள்ளிநாயகியாரையும் பாங்கியையும் நோக்கி, "பெண்மணிகளே! என் கணையால் தாக்குண்டு பிளந்த வாயும், புண்பட்ட மேனியும் கொண்ட பெண் யானை ஒன்று இங்கு வந்ததோ? அதனை நீங்கள் கண்டதுண்டோ?" என்று வினவியருளினார். வந்தவர் கண்களும் இருந்தவள் கண்களும் உரையாடுவதிலிருந்தே இருவரின் கருத்துக்களைக் கண்டு கொண்ட பாங்கி, "அம்மையாடியகளை இதுதான் போலும்" என்று எண்ணித் தனது புனத்துக்குச் சென்று பரணில் இருந்தாள்.

வேழம் வினவி வந்த வேலவர் பாங்கியிடம் சென்றார். இன்னும் அவர் லீலைகள் மீதம் வைத்திருந்தார். எல்லாம் முடிந்த பின்பே சீவனும் சிவமும் ஐக்கியமாக வேண்டும்! "பெண்ணே! எனக்கு உற்ற உறவினள் நீயே; விரும்பிய பொருள் எல்லாவற்றையும் நான் தருவேன்; நின் தலைவியை எனக்குத் தருவாய்" என்று பாங்கியிடம் வேலவர் அருளினார். பாங்கி, "ஐயா! மறவரின் பேதைப் பெண்ணைப் பெரியோர் விரும்புவரோ?" என்றாள்.

"பெண்ணே! திருமால் தந்த அமுதமும், வேட்டுவர் செய்த மாதவப் பயனும், பெண்களுக்கு அரசியும், எனக்கு ஆசையைத் தந்து பேரருள்

செய்த பேரழகியுமாகிய தலைவியைப் பார்த்துப் பேதை என்று கூறியதே பேதைமை'' என்று கூறினார் ஐயன்.

''ஐயா! இங்கே வேடவர் வருவர். மிகக் கொடியவர்களான அவர்கள் இதனைக் கண்டால் பேராபத்தாக முடியும். விரைவில் இங்கிருந்துபோம்'' என்றாள் பாங்கி. பெருமானோ,

தோட்டின் மீதுசெல் விழியினும்
தோகையோ டென்னைக்
கூட்டிடா யெனில் கிழிதனி
லாங்கவள் கோலந்
தீட்டி மாமட லேறிநும்
மூர்த்தெரு வதனி
லோட்டு வேனிது நாளையான்
செய்வ தென்றுரைத்தான்

தலைவியை அடையவொண்ணாத தலைவன் பனைமடலாலான குதிரையை ஏறி ஊர்தல் பண்டைய பழக்கம். இதனைச் செய்வதாக முருகன் கூறியதும், ''ஐயா! நீங்கள் மடலேற வேண்டாம். அதோ தெரிகின்ற மாதவிப் பொதும்பரில் மறைந்திரும். நான் என் தலைவியை அங்கே அழைத்து வருவேன்'' என்றாள் பாங்கி. அதன்படி, மயிலேறும் ஐயன் மாதவிப் பொதும்பரில் மறைந்திருந்தார்.

பாங்கி, வள்ளிநாயகியைப் பொதும்பரிடம் அழைத்தேகினாள். பிராட்டியாரை அங்கேயே விட்டு விட்டு, ''நான் உனக்கு மலர் பறித்துக் கொண்டு வருவேன்'' என்று கூறி மெல்ல அங்கிருந்து நீங்கினாள். பாங்கி நீங்கியதும் பரமன் வெளிப்பட்டுப் பாவை வேந்துக்குப் பேரின்பம் நல்கினார். பிறகு, ''நாளை வருவேன்; நின் இருக்கை செல்'' என நீங்கினார்.

பாங்கி மலர் பறித்து வந்து சூட்டி மனம் நொய்ந்த தலைவியுடன் புனம் போந்தாள்.

முருகவேளைப் பிரிந்து வந்த வள்ளி நாயகியார் தினைப்புனத்தைக் காவல் காக்கும் போது மனம் மிக வாடி இருந்தாள். இவ்வாறாகச் சில பகல் கழிந்தன. தினைப்புனத்தில் கதிர்கள் முற்றி விளைந்தன. குன்றவாணர்கள் அதனைக் கண்டு மகிழ்ந்தனர். அவர்கள் வள்ளிப் பிராட்டியாரை நோக்கி, ''அம்மா! தினைகள் விளைந்துவிட்டன. மிகவும் வருந்தி இதனைக் காத்தனை! இனி உன் சிறு குடிலுக்குச் செல்வாயாக!'' என்றார்கள். அம்மை அதனைக் கேட்டு மிகவும் மனம் வருந்தினாள். 'ஆகா! பிராணேசர் சிற்றூருக்கு வழி அறிவாரோ! அவர் இங்கு வந்து தேடுவாரே!' என்றெல்லாம் கலங்கினாள். இறைவன் எளியவனாக வந்து



''அநாவசியமாக நான் எச்சில் இலே நாய் மாதிரி அடிக்கடி கத்தி அலட்டிக்கிறதில்லே! இரவில் மாத்திரம் பன்னிரண்டு மணிக்கும் ரெண்டு மணிக்கும் ரெண்டே ரெண்டு தடவை குரைப்பேன்!''

''அப்படியா? நான் அது கூடச் செய்யறதில்லே. எனக்காக நாய் குரைக்கிற மாதிரி டேப் ரிக்கார்ட் எடுத்து வெச்சிருக்காங்க!''

அருள் புரிந்தால் அவனை எளிய மானுடனாகவேதான் எண்ணி அன்பு செலுத்தத் தோன்றும் போலும்!

'மான் இனங்காள்! குயில் இனங்காள்! என் பெருமானுக்கு நான் புனம் விட்டுச் சென்ற செய்தியைச் சொல்லுங்கள்' என்று தூது விடுத்துக் கொண்டே பாங்கியோடு புனத்தை விட்டுச் சென்றாள் வள்ளி.

மானி னங்களை மயில்களைக்
கிளியைமாண் புறவை
ஏனை யுள்ளவை தங்களை
நோக்கியே யாங்கள்
போன செய்கையைப் புகலுதிர்
புங்கவர்க் கென்னாத்
தானி ரங்கியே போயினள்
ஒருதனித் தலைவி

வீடு திரும்பிய வள்ளிப் பிராட்டியாருக்குப் பிரிவுத் துன்பம் மிகுந்தது. அத் துன்பத்தைப் பொறுக்காது அவசமுற்று விழ்ந்தனள். பாவையர்கள் வந்து எடுத்து அணைத்து, மேனி மெலிந்தும் வளை கழன்றும் உள்ள தன்மைகளை நோக்கி, ''ஏதோ தெய்வம் பிடித்துள்ளது'' என்று கூறினார்கள். முருகப் பெருமானை வழிபட்டுத் தெய்வக் குறி



டைரக்டர்: நாங்க 'பேய் வீடு' என்ற சினிமாப் படம் எடுக்கப்போறோம். அதுக்காக உங்க 'மாடர்ன் ஆர்ட்'படங்கள் எல்லாம் விலைக்கு வாங்க வந்திருக்கேன்!

கேட்டு வெறியாட்டயர்ந்தனர். வெறியாட்டாளன் மேல் முருகவேள் ஆவேசமாகி, ''எமது மனம் மகிழும்படி சிறப்புச் செய்தால் இக்குறை நீங்கும்'' என்று குறிப்பில் கூறியருளினார். ஆயினும் தமது மகளைத் தேவநாயகனுக்கு மணமுடிக்க இயலும் எனக் குறவர் எண்ணிப் பார்க்கவும் முடியுமோ ?

ஊர் எல்லாம் உறங்கியும், பிரிவுத் துன்பத்தால் வாடிய வள்ளிக்கு உறக்கம் பிடிக்கவில்லை. பொறி புலன்கள் எல்லாம் உறங்கினாலும் ஆன்மா விழித்திருக்கும் என்பது இதன் கருத்து. பக்திக்கும் காதலுக்கும் உணர்வு நிலை ஒன்றுதான்.

''விண்ணுறங்கும் மண்ணுறங்கும்
மற்றுளஎல் லாம்உறங்கும்
கண்ணுறங்கேன் என்தலைவர்
காதலாற் பைங்கிளியே''

என்றார் தாயுமானவர்.

வள்ளிப் பிராட்டியார் தினைப் புனத்தை விட்டுத் தம் சிற்றூர்க்குச் சென்றபின் வேடர்கள் தினையை அறுத்துக் கொண்டு திரும்பினார்கள். முருகவேள் தினைப்புனம் சென்று திருவிளையாடல் செய்வார்போல் வள்ளியம்மையாரைத் தேடினார். அங்கு அவளைக் காணாது நள்ளிரவில் சிற்றூர் வந்து குடிலுக்குப் புறம்பே நின்றார். அதனை உணர்ந்த பாங்கி முருகவேளிடம் வந்து, ''ஐயா! நீர் இப்படி இரவில் இங்கு வருவது தகாது. இது நீவிர் அவளை அடைந்திருக்க ஏற்ற இடமில்லை. ஆதலால் அவளை அழைத்துக் கொண்டு தங்கள் தலைநகருக்குச் செல்லுங்கள்'' என்று கூறினாள். அவரை அவ்விடத்திலேயே நிற்கச் செய்து விட்டு, யாரும் அறியாவண்ணம் வள்ளிப் பிராட்டியாரை அழைத்து வந்து கந்தவேளிடம் ஒப்புவித்தாள். வள்ளிநாயகியார் முருகவேளின் பாதங்களைப் பணிந்து, ''வேதங்கள் காணாத உமது மலர்த்தாள் நோவ என் பொருட்டு இவ் வேடச் சேரிக்கு நள்ளிரவில் எழுந்தருளினீரே'' என்று தொழுது நின்றாள். பாங்கி, முருகப் பெருமானின் திருக்கரத்தில் வள்ளிப் பிராட்டியாரை அளித்து, ''ஐயா! இங்கு நீண்டநேரம் நின்றால் வேடர்கள் கண்டு விடுவார்கள். அவர்கள் கண்டுவிட்டால் பெருந் தீமையாய் முடியும். இம் மாதரசியை அழைத்துக் கொண்டு உங்கள் பதிக்குச் சென்று காத்தருள வேண்டும்'' என்று கூறி வணங்கி நின்றாள். எம்பிரான் பாங்கிக்குத் தண்ணருள் புரிந்தனர். பாங்கி வள்ளி நாயகியாரைத் தொழுது அணைத்தாள். குமாரக்கடவுள் வள்ளிநாயகியாருடன் சிற்றூரைத் தாண்டிச் சென்று ஓர் இளம் பூங்காவில் தங்கினார்.

புலன்களாகிய வேட்டுவர்கள் அவ்வளவு எளிதில் ஆன்மா விடுதலையடைய விடுவரோ? விடியற்காலம் நம்பிராசனின் மனைவி கொடிச்சி துயில் நீங்கி எழுந்தாள். வள்ளிநாயகியாரைக் காணாது திடுக்கிட்டு வருந்தினாள். நம்பிராசனும் இதனைக் கேள்வியுற்றான். வெகுண்டு, ''எமது காவலைக் கடந்து எம் குல விளக்கைக் கொண்டு போனவன் யார்?'' என்று போர்க் கோலம் கொண்டு புறப்பட்டான். அவனுடன் வேடர்கள் கொம்பு முதலியவற்றை ஊதிக் கொண்டு சென்றார்கள்.

புலிகள் மான் குட்டிகளைத் தேடுவது போல வேடர் பலர் தம்மைத் தொடருவதை யறிந்த வள்ளிப்பிராட்டி குமாரக் கடவுளைப் பணிந்து, ''எம் பெருமானே! ஈட்டி, பிண்டி, பாலம், வில், வாள் முதலிய ஆயுதங்களுடன் வேடர் பலர் சோலைக்கு அருகில் வருகிறார்கள். இனி என் செய்வது? என் உள்ளம் சுழல்கிறது'' என்று கூறினாள். ''பெண்ணரசியே! வருந்தாதே. சூராதி யவுணரை மாய்த்த வேற்படை நம்மிடம் இருக்கிறது; வேடர் வெகுண்டு போர் புரிந்தால் அவர்களைக் கணப்பொழுதில் மாய்ப்போம். நீ பின்புறத்தில் இருப்பாயாக'' என்று கந்தவேள் அருளிச் செய்தார். (தொடரும்)



# அன்பே வா

கண்ணைப் பறிக்கும் வண்ண ஜாலங்கள்; கருத்தைக் கவரும் கவர்ச்சி உடைகள்; சிலிர்க்க வைக்கும் சிம்லாக் காட்சிகள்; ஆவலைத்தூண்டும் அரிய காட்சி ஜோடனைகள்; நெஞ்சை ஈர்க்கும் மேல் நாட்டு நடனங்கள்; ஆங்கிலப் படம் பார்க்கிறோமோ என்று அதிசயப்பட வைக்கும் அற்புத ஒளிப்பதிவு. பிறகு காதல், கண்ணீர், சிரிப்பு, திகைப்பு, வியப்பு எல்லாம் இருக்கின்றன. இவ்வளவும் நிறைந்த ஒரு படத்தில் திரைக் கதையைப் பற்றி நினைக்கவா தோன்றும்?

குன்றாத இளமையும், குறையாத சுறுசுறுப்பும் கொண்டு எம். ஜி. ஆர். வரும் காட்சிகளெல்லாம் கண்ணுக்கு விருந்தாயிருக்கின்றன. பனிச் சறுக்கு விளையாட்டிலிருந்து 'பால் ரூம் டான்ஸ்' வரையில் அவர் சக்கைப் போடு போட்டிருக்கிறார்; சண்டைக் காட்சிகளிலும் விட்டுக் கொடுத்து விடவில்லை; சாகஸத்தோடு சாமர்த்தியமாய்ச் சமாளிக்கிறார்.

வண்ணப் படத்தின் வண்ணக்கிளியாய் விளங்குகிறார் சரோஜாதேவி; எம். ஜி. ஆருக்கு ஈடு கொடுத்து நன்றாய் நடித்திருக்கிறார்; புதுப் புது உடைகளில் புது மலராய்ப் பொலிகிறார். சிரிக்கவும், சீறவும், கலங்கவும், கண்ணீர்



விடவும் காதலிக்கவும் கிடைக்கும் சந்தர்ப்பங்களை நழுவ விட்டு விடவில்லை.

ஹாஸ்ய நடிகர் நாகேஷின் தமாஷ்கள் கதையோடு சேர்ந்தே வருகின்றன. அவருடைய பணத்தாசையும், பணம் சம்பாதிக்க அவர் கையாளும் சமத்காரங்களும் அபாரம்! டி. ஆர். ராமச்சந்திரன் சரோஜாதேவியின் தந்தையாக வந்து சிம்லாக் குளிரில் நடுங்குகிறார். அசோகன் சிறிது நேரமே வந்தாலும் உருக்கமாக நடிக்கிறார்.

'அன்பே வா' படத்தின் கதை இதுதான்:

பணக்கார வாலிபன் ஜே. பி.க்கு வாழ்க்கையில் எத்தனையோ வசதிகள் இருந்தும் மன நிம்மதி என்னும் செல்வம் மட்டும் கிட்டவில்லை. அதைத் தேடிக் கொண்டு 'சிம்லா'வுக்குச் செல்கிறான். தன் சொந்த மாளிகையிலேயே, அவன் வாடகைக்குக் குடியிருப்பவனாக நடிக்கும் நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அங்கு கீதா என்ற காதலி கிடைக்கிறாள் ஜே. பி.க்கு. காதல் பிறந்தாலும் கீதா தன் அத்தானையே மணக்க முடிவு செய்கிறாள். காரணம், அவள் தன் தந்தைக்கு வாக்குக் கொடுத்திருந்தது தான். ஆனால் அந்த அத்தான் கதாநாயகனின் வில்லனாக வராமல் ஒதுங்கி வழிவிட எல்லாம் சுபமாகவே முடிந்து விடுகிறது.

சிறிதும் குழப்பம் இல்லாமல், விறுவிறுப்பாகப் படத்தை இயக்கியிருக்கிறார் டைரக்டர் திருலோகசந்தர். ஜெமினியின் ஈஸ்ட்மென் கலர் படத்துக்குத் தனிக் கவர்ச்சியூட்டுகிறது.

ஏவி. எம். புரொடக்ஷன்ஸாரின் ''அன்பே வா'' பல்சுவைகளும் நிறைந்த ஒரு பொழுது போக்குப் படம். திரைக் கதை, பாத்திரப் படைப்பு, உணர்ச்சி பாவங்கள், அது இது என்று பல்வேறு அம்சங்களை இந்தப் படத்தில் துருவிப் பார்ப்பதில் பயன் இல்லை. அனைவரும் பார்த்து அதிசயிக்கக் கூடிய படம் ''அன்பே வா!''

# ஜீவகீதம்

ஜெகசிற்பியன்

### அத்தியாயம் ஐம்பத்தேழு

## கண்ணுக்கு அப்பால்!

திடுக்குற்றுத் திரும்பிய சபேசன், அப்போதுதான் சாயபு கடையில் கடனோ, ரொக்கம் கொடுத்தோ வாங்கிய அரிசி, பருப்பு, காய்கறிகளை மடியில் கட்டிக் கொண்டு கையில் ஒரு வாளைக் கருவாட்டையும் பிடித்துக் கொண்டு வெகு உற்சாகமாகவும், முகமெல்லாம் சிரிப்பாகவும் வந்த கன்னியம்மாளைப் பார்த்து உள்ளார்ந்த திகிலுடனும், வெட்கக் குழைவுடனும் புன்முறுவல் பூத்தான்.

''வா நைனா, வா! ஊட்லே வந்து உக்காரு!''

வேலிப் படலைத் திறந்து கொண்டு உள்ளே முன்னால் சென்றாள் கன்னியம்மாள். சபேசன் தயங்கித் தயங்கிப் பின் சென்றான்.



''அடி, ராசாத்தி! இந்தப் புள்ளாண்டான் வந்திருக்குதே, பார்த்தியா?'' என்று ஓசையாகக் குரல் கொடுத்துக் கொண்டே வீட்டினுள் சென்றாள் கன்னியம்மாள். அப்போதுதான் விளக்கு ஏற்றிக் கொண்டிருந்த வேதா அவசரமாக வாசலுக்கு வந்து எட்டிப் பார்த்தாள். சபேசனைக் கண்டதும் அவளுக்கு என்ன ஆயிற்றோ, தெரியவில்லை; சரேலெனத் துள்ளி ஓடிப் போய்க் கட்டைச் சுவருக்குப் பின்னால் ஒளிந்து உட்கார்ந்து கொண்டாள்.

''இன்னாடி பொண்ணே இது, வெக்கம்? அசலா, அந்நியமா? நம்ப ஊட்டுப் புள்ளைதானே?'' என்று பொய்க் கோபப்பட்டுக் கொண்ட கன்னியம்மாள், ''நீ வா, நைனா! இப்படி உக்காரு... ஊரு நாட்டுக்குப் போயி புள்ளே ரொம்ப 'ஜர்க்' வாங்கிட்டுத்தான் இருக்குது!'' என்றாள் அன்பும் அனுதாபமுமாக.



சபேசனுக்கு இப்போதுதான் கொஞ்சம் தைரியம் ஏற்பட்டது. அசட்டுச் சிரிப்புடன் வந்து உட்கார்ந்தான்.

''எதனாச்சும் வவுத்துக்குத் துன்னியா நைனா? போய் மயாச்சும் வாங்கியாறட்டுமா...?''

''வேண்டாம் அம்மா! நான் வரும் போது ஹோட்டல்லே சாப்பிட்டு விட்டுத்தான் வந்தேன்.''

''ஓட்லு, ஓட்லு! ஓட்டல்லே இன்னாத்தைத்தான் துன்றீங்களோ!'' என்று அலுத்துக் கொண்ட கன்னியம்மாள் தன் மடியிலிருந்த அரிசி, பருப்பு, காய்கறிகளை ஒரு முறத்தில் எடுத்து வைத்து விட்டுப் புறக்கடை வாசலண்டை போய் இரண்டு கால்களையும் நீட்டிப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து அள்ளிச் செருகியிருந்த தன் கூந்தலை அவிழ்த்து விட்டுக் கொண்டாள். அடுத்த கணம், ''அ....... நெல்லு குத்திச் சோறாக்க நெருப்பெடுத்து வரப் போனேன்; நெருப்பூ குடுத்த பாவி என் நெஞ்சிலே கொட்டிப் பிட்டா!........ஆ.... ஆ.......ஆவ்!'' என்று பெருங்குரலில் ஒப்பாரி வைத்து அழ ஆரம்பித்து விட்டாள்.

திடீரென்று அவள் இப்படி ஒப்பாரிப் பாட்டுடன் அழுவதைக் கண்டு ஒன்றும் புரியாமல் திகைத்துப் போன சபேசன் அங்கு

மிங்குமாக விழித்துப் பார்த்தான். அப்போதுதான் கட்டைச் சுவருக்குப் பின்னுலிருந்து மெல்ல எழுந்து நின்ற வேதா அவனைக் கடைக் கண்ணுல் நோக்கிப் புன்னகை பூத்தாள்.

'என்ன சமாசாரம்? என்ன நடந்தது?' என்று கேட்பது போல் கைச் சாடையால் அவளிடம் வினவினுன் சபேசன். விளக்குச் சிட்டத்தைத் தட்டிவிடும் சாக்கில் அவனருகில் வந்த வேதா, ''ஒன்றுமில்லே. உங்கள் அம்மா இறந்து போன விஷயத்தை இங்கு நான் வந்ததும் சொன்னேன்; அதற்காக இப்போது உங்களைப் பார்த்ததும் அழுது காட்டுகிறது. அவ்வளவுதான்'' என்றுள் இரகசியக் குரலில்.

சபேசன் இதைக் கேட்டு இளநகை புரிந்தான். என்றாலும், கன்னியம்மாளின் அந்தத் துக்க விசாரிப்பு முறையிலிருந்த ஒரு பழமையான பண்பாட்டுச் சிறப்பை என்ணி உள்ளூற வியந்து கொண்டான். உடனே அவனுடைய தாயைப் பற்றிய நினைவு தோன்றி அவனை நிஜமாகவே துயரத்தில் ஆழ்த்தியது.

கவையான பாடல்களுடன் தன் ஒப்பாரியை முடித்துக் கொண்ட கன்னியம்மாள், அவிழ்த்துவிட்ட கூந்தலை வாரி முடித்துக் கொண்டு எழுந்தாள். அவள் கண்களில் ஒரு சொட்டுக் கண்ணீரும் தென்படவில்லை. ஆனுல் குடம் குடமாகக் கொட்டி அழுது விட்டவள் போல் முந்தானையால் மூக்கைச் சிந்தி முகத்தைத் துடைத்துக் கொண்டு, ''ஊம்! அவன் குடுத்து வைச்ச மவராசி! சீக்கிரமாப் போய்ச் சேர்ந்தாள்; பாவி, நான் கெடக்கிறேனே இந்தப் பாயாய்ப் போன பூலோகத்திலே பதங்குலேஞ்சுக்கினு!'' என்று சலிப்புடன் முணுமுணுத்துக் கொண்டே சபேசனின் எதிரில் வந்து உட்கார்ந்து, ''ஏன் நைனு, அந்தப் பையனே எங்கனாச்சும் பார்த்தியா? ஊட்டுக்கு வந்து ஒரு வாரத்துக்கு மேலே ஆய்ப் போச்சு! அது இன்னைக்குத் துன்னுதோ, எங்கே படுக்குதோ!'' என்றுள் கவலையுடன்.

அவள் சொல்வது நிஜம்தான். அன்றொரு நாள் இரவு மருதமுத்துவைப் பழி வாங்க வேண்டுமென்ற கடுங்கோபத்துடன் அவரது வீட்டுக்குப் போன நச்சி, அங்கு எதிர்பாராத விதமாக அந்த ஊர் பேர் தெரியாத பெண்ணின் படத்தைப் பார்த்ததும் தான் வந்தநோக்கத்தை மறந்தவனுய்



அதைக் கழற்றி எடுத்துக் கொண்டு கிளம்பினான் அல்லவா? அங்கிருந்து நேரே தன் வீட்டுக்கு வந்து யாரிடமும் எதுவும் பேசாமல் படுத்துத் தூங்கி விட்டு விடியற்காலை பொழுது புலரா முன்பே எழுந்து போனவன்தான், இன்று வரையில் வரவேயில்லை.

"நச்சிதானேம்மா? இங்கே வரும் போது அவனை மூர்மார்க்கெட்டண்டைப் பார்த்து விட்டுத்தான் வந்தேன். இன்றிரவு வீட்டுக்கு வருவதாகச் சொன்னான்; வருவான்" என்றான் சபேசன் தணிந்த குரலில்.

"அவன் பேச்சையா நம்பறே? அவனுக்குத்தான் நிமிசத்துக்கு ஒரு புத்தியாச்சே ? ஊர் சுத்திக் கேப்மாறி!" என்று கோபமாகச் சொன்ன கன்னியம்மாள், "அவரு இன்னு, இப்பப் பெரிய துரையாகிப்பிட்டாரு! மேசை மேலே டின்னரு, மினிகூட டான்சு, கார் மேலே சவாரி ! இனிமே இந்தப் பக்கம் ஏன் திரும்பிப் பார்க்கப் போறாரு!" என்றாள் பெருமை கலந்த ஒரு கேலிச் சிரிப்புடன்.

இதைப் புரிந்து கொண்ட சபேசனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. சிரித்துக் கொண்டே மெல்ல எழுந்து, "அப்ப நான் போய் வரட்டுமாம்மா?" என்றான்.

"இன்னு நைனு, வந்தாப்பலே வந்து உடனே போறேன்னு கிளம்பறே? கொஞ்சம் இரு; ஒரு டீயாச்சும் வாங்கியாறேன், குடிச்சுட்டுப் போவ!" என்றவாறு திரும்பி, "அடி பொன்னே, அந்தப் பையன் வருவானாம். சிக்கிரமா அடுப்பைப் பத்த வைச்சு உலை வைப் போடு!" என்று சொல்லிக் கொண்டே அலுமினியக்குவளையுடன் வெளியேசென்றாள்.

வேதா தன்னோடு தனிமையில் இருக்கிறாள் என்ற எண்ணம் சபேசனின் மனத்தில்



## வெள்ளைக் குல்லா

ஒரு நாள் ஒரு சிறுவன் காந்தித் தாத்தாவைப் பார்க்கப் போனான். அவன் பெயர் கமல். பெரிய கோமகவரர் ஒருவர் மகன். அவன் பட்டுச் சொக்காய் போட்டிருந்தான். தலையில் தங்கச்சரிகைபோட்டகுல்லாவைத்திருந்தான்.

காந்தித் தாத்தா குளித்துவிட்டு அப்போதுதான் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அவர் அந்தப் பையனைத் தம் அருகில் அழைத்தார். அவன் கன்னத்தில் இரண்டு தட்டுத் தட்டினார்; சிரித்தார். அவன் சட்டையையும் குல்லாவையும் பார்த்தார். உடனே கேட்டார்: "என்னுடைய உடை நன்றாயிருக்கிறதா, உன் சொக்காயும் குல்லாவும் நன்றாயிருக்கிறதா?"

கமல் எதுவும் பேசவில்லை. ஆனால் காந்தித் தாத்தா விடவில்லை. "சொல்லு!" என்று மறுபடியும் கேட்டார். அருகில் அவன் அப்பா இருந்தார். "பயப்படாதே, நம் தாத்தாதானே, சொல்லு!" என்றார் அவரும்.

பையனுக்குத் தைரியம் வந்தது. தாத்தா உடுத்தியிருந்த நாலு முழ வேட்டியை ஒரு தடவை நன்றாய்ப் பார்த்தான். பின்பு, தலை குனிந்தபடி, "என் சொக்காயும் குல்லாவும் தான் நன்றாக இருக்கின்றன!" என்றான்.

இதைக் கேட்டு காந்தி சிரித்தார். "அப்படியா?" என்றார். அவன் தலையிலிருந்த குல்லாவை எடுத்துக் கீழே வைத்தார். அருகில் ஒரு கதர்க் குல்லா இருந்தது. அதை எடுத்து அவன் தலையில் வைத்தார். "பார், இந்தக் குல்லா எவ்வளவு அழகாக இருக்கிறது! அழுக்காய்ப்போனால் எத்தனை தடவை வேண்டுமானாலும் துவைத்துச் சுத்தமாய் வைத்துக் கொள்ளலாம். நாற்றம் எடுக்காது. உன் சரிகைக் குல்லாவை இவ்வளவு சுத்தமாய் வைத்திருக்க முடியுமா?" என்றார்.

பையன் யோசித்தான். காந்தித் தாத்தா சொன்னதில் உண்மை இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டான். "ஆமாம், என் குல்லாவை இவ்வளவு சுத்தமாய் வைத்திருக்க முடியாது" என்றான்.

"அப்படியானால் இந்த இரண்டிலும் எது மேலானது?"

"வெள்ளைக்குல்லாதான்" என்றான் அவன்.

தந்திரக்கார காந்தித் தாத்தா அவனைத் தம் வழிக்குத் திருப்ப ஒரு சூழ்ச்சி செய்தார்.

"ம், — பார்த்தாயா? வெள்ளைக் குல்லா தான் மேலானது என்று நீயே சொல்லிவிட்டாய். அப்படியானால், நல்ல குல்லாவைத் தானே நீ வைத்துக் கொள்ள வேணும்? சரிகைக் குல்லாவை எனக்குக் கொடுத்துவிட்டு வெள்ளைக் குல்லாவை நீ வைத்துக் கொள்!"

கமல் திகைத்தான். தாத்தாவின் தந்திரம் அவனுக்கு இப்போதுதான் தெரிந்தது. ஆனால் என்ன செய்வது? 'ஆகட்டும்' என்றான்.

இதைக் கேட்டு காந்தித் தாத்தா மகிழ்ச்சி அடைந்தார். அவனை மறுபடியும் தட்டிக் கொடுத்தார். "நீ நல்ல பையன்" என்றார்.

கமல் வெகுநேரம் வரை அங்கு விளையாடிக் கொண்டிருந்தான். காந்தித் தாத்தா ஏதோ வேலையாயிருந்தார். பொழுது சாய்ந்தபோது கமல் தன் அப்பாவுடன் வீட்டுக்குப் புறப்பட்டான். அப்போது காந்தித் தாத்தா அவனை அழைத்து அருகில் உட்கார வைத்து அவன் தோள் மேலே ஒரு கையை வைத்துக் கொண்டு சொன்னார்: "கண்ணா, இந்தக் கதர்க் குல்லாவை ஏன் போட்டுக்கொள்ளச் சொன்னேன் தெரியுமா? இது சுத்தமானது, வெள்ளையானது என்பதற்காக மாத்திரமல்ல. இது ஏழைகள் போட்டுக் கொள்ளும் குல்லா. இந்நாட்டில் எத்தனை லட்சம் ஏழைக் குழந்தைகள் இருக்கிறார்கள் தெரியுமா? சரிகைக் குல்லா வாங்க அவர்களால் முடியாது. அவர்கள் வாங்க முடியாததை நீ மாத்திரம் வாங்கிப் போட்டுக் கொள்வது நியாயமா?"

இதைக் கேட்டதும் அந்தப் பையனுக்கு மெத்த வருத்தமாப் போச்சு. "சரி, தாத்தா, இனிமேல் வெள்ளைக் குல்லாவே போட்டுக் கொள்ளுகிறேன்" என்றான்.



ஏதோ ஒருவித குறுகுறுப்பை ஏற்படுத்தியது. பெங்களூரில் அந்த லிங்ஸ்பார்க்கிலே அன்றிரவு அவள் அவனுடன் தனியாக இருந்த போதுகூட ஏற்படாத குறுகுறுப்பு அது. தனக்கே புரியாத இந்த உணர்ச்சியைத் தவிர்த்துக் கொள்வதற்காக, சுவரோரம் கிடந்த பழைய புத்தகம் ஒன்றை எடுத்து வெறுமனே புரட்டிப் பார்க்கலானான்.

வேதாவின் நிலையும் இப்போது அவ்வாறே இருந்தது போல் தோன்றியது. ஏனென்றால் அவள் வெகு சுறுசுறுப்பாகப் புறக்கடைக்கும் அடுப்படிக்குமாக நடந்து கொண்டிருந்தாள். ஆனால் காரியம் ஒன்றும் நடக்கவில்லை. எல்லாம் போட்டது போட்டபடியேதான் இருந்தன.

இப்படி முடுக்கிவிட்ட பதுமை போல் உள்ளுக்கும் வெளிக்குமாக அழகு நடைபயின்று கொண்டிருந்த வேதா, எதற்கோ துணிந்து விட்டவள் மாதிரி சட்டென்று அவன் எதிரே போய் நின்று, ''இப்போது எங்கே இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

மெல்ல அவளை நிமிர்ந்து பார்த்த சபேசன், வெட்கப் புன்னகையுடன், ''தங்கசாலையிலே ஒரு சிறிய அறையை வாடகைக்கு எடுத்திருக்கிறேன்'' என்றான் உள்ளார்ந்த பெருமைக் குரலில்.

அவனை ஆச்சரியத்துடன் கூர்ந்து நோக்கிய வேதா, ''அப்படியா? மிக நல்ல காரியம் !'' என்றாள் அளவுக்கு மீறிய மகிழ்ச்சியுடன்.

'இதற்கு ஏன் இவ்வளவு சந்தோஷப்பட வேண்டும்?' என்று சிந்தித்தவனாகப் புத்தகத்தைப் புரட்டிப் பார்க்க ஆரம்பித்து விட்டான் சபேசன்.

காந்தித் தாத்தா கதைகள்

## "தொபுகடீர் !"

உங்களுக்கு நீந்தத் தெரியுமா, நீந்த? பயப்படுவீர்களா? — அது கூடாது. வெள்ளைக்காரச் சீமையிலே சின்னச் சின்னக் குழந்தைகள்கூட வெகு வெகு நன்றாய் நீந்துவார்கள் — கடலிலே! ஆமாம், தண்ணீரைக் கண்டால் அவர்களுக்குக் கொள்ளை ஆசை. காந்தித் தாத்தாவுடன் இருந்த குழந்தைகள், யாருக்கும் பயப்படமாட்டார்கள். எதற்கும் அஞ்ச மாட்டார்கள். அவர் அந்தப் பையன்களை அப்படிப் பழக்கி யிருந்தார்.

ஒரு நாள் காந்தித் தாத்தா சபர்மதி ஆசிரமத்தில் தாழ்வாரத்தில் உட்கார்ந்து என்னவோ எழுதிக் கொண்டிருந்தார். அருகில் ஓர் ஆறு இருந்தது. மழை பெய்து அதில் வெள்ளம் வந்தது. ஆகவே, அது குதித்துக் கும்மாளம் போட்டுக் கொண்டு போயிற்று. அவருடன் ஆசிரமத்திலே இருந்த பையன்களுக்கு அதைப் பார்த்து ஒரே கொண்டாட்டம். இடுப்பில் ஒரு சிறு துணியைக் கட்டிக் கொண்டார்கள். ஆற்றில் குதித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

காந்தித் தாத்தா உட்கார்ந்திருந்த இடத்துக்கு நேர் எதிரில் ஒரு படித் துறை இருந்தது. 'படித்துறை' என்றால் என்ன தெரியுமா? ஆற்றிலே இறங்கவும் ஏறவும் வரிசையாய்ப் படிகள் கட்டியிருப்பார்கள். அதற்குத்தான் படித்துறை என்று பெயர். பையன்கள் அந்தப் படித்துறைக்குப் பக்கத்தில் போய் நின்று கொண்டு 'தொபுகடீ'ரென்று ஆற்றில் குதிப்பார்கள். வெள்ளம் அவர்களை இழுத்துக் கொண்டு போகும். கொஞ்ச தூரத்துக்கு அப்பால் போனதும் அவர்கள் கரை ஏறுவார்கள். தலையிலே இருந்தும், உடம்பிலே இருந்தும் தண்ணீர் 'சொட்'டுச் 'சொட்'டென்று சொட்டி வடியும். அந்த ஈரத்தோடு ஒருத்தருக்குப் பின் ஒருத்தராக — முன்பு குதித்தார்களே அந்தப் படித்துறைக்கு ஓடுவார்கள். அங்கு போனதும் மறுபடியும் 'தொபுகடீ'ரென்று குதிப்பார்கள். — இப்படிப் போவதும் வருவதுமாக இருந்தார்கள். ஆ, என்ன உற்சாகம் என்று நினைக்கிறீர்கள், அவர்களுக்கு!

அடேயப்பா! 'காச்சு' 'மூச்'சென்று அவர்கள் போட்ட சத்தம் ஆற்று வெள்ளம் போட்ட சத்தத்தையும் மிஞ்சிவிட்டது.

இப்படி வெகு நேரம் விளையாடிக்கொண்டிருந்தார்கள். திடீரென்று ஒரு பையன் என்ன நினைத்தானோ என்னவோ, படித்துறைக்குப் பக்கத்தில் நின்று கொண்டு காந்தித் தாத்தாவை அழைத்தான்.

''பாபு! பாபு!''

''என்ன?'' என்றார் காந்தித் தாத்தா.

''நீங்களும் வாருங்கள். ஆற்றில் குதித்து விளையாடுங்கள். எவ்வளவு சுகமாய் இருக்கிறது தெரியுமா?'' என்றான் பையன்.

காந்தித் தாத்தா சிரித்தார். சிரித்து விட்டுச் சும்மா இருந்து விட்டார் என்று நினைக்கிறீர்களா? நம் தாத்தாக்களைப் போல் இருந்தால் அப்படி யிருந்திருப்பார். ஆனால் அவர் காந்தித் தாத்தா அல்லவா? ஆகவே எழுந்தார். ''ஓகோ! அப்படியா? எனக்கு நீந்தத் தெரியாது, வயசாகிப் போச்சு என்று நினைத்தீர்களா? — யார் நன்றாக நீந்துகிறார்கள் என்பதைப் பார்த்து விடுவோமா?'' என்றார்.

தாத்தா வேடிக்கைபண்ணுகிறார் போலிருக்கிறது என்று எல்லாப் பையன்களும் நினைத்தார்கள். ஆனால் அது வேடிக்கை அல்ல.

காந்தித் தாத்தா வந்தார்.

'தொபுகடீர்!'

ஆற்றிலே குதித்து விட்டார். வெள்ளத்தில் நீந்திக் கொண்டே போனார். ஆகாகா!

அக்கம் பக்கத்தில் பல ஆண்களும் பெண்களும் வேலை செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்கள் வேலை வெட்டிகளை யெல்லாம் அப்படி அப்படியே போட்டு விட்டு ஓடினார்கள். ஓட்டோட்டமாக அங்கு ஓடினார்கள். காணக் கிடைக்காத அந்தக் காட்சியைக் கண்டார்கள்; அதைக் கண்டு கொண்டே நின்றார்கள்.

—தேனீ



அவள் அங்கிருந்து அடுப்படிக்குப் போய் அவசர அவசரமாகக் கொஞ்சம் வேலைகளைச் செய்துவிட்டு மறுபடியும் வந்து, "இப்போது என்னைப் பார்ப்பதற்காகத்தானே இங்கே வந்தீர்கள்?" என்று கேட்டாள் சற்றே கோபத்துடன்.

திடுக்குற்றுப் போன சபேசன் சிறிதே தயங்கி, "ஆமாம்; ஏன்?......" என்று இழுத்தான்.

கலகலவெனச் சிரித்த வேதா, "அடேயப்பா! இதைச் சொல்ல எப்படித்தான் துணிந்தீர்களோ!" என்றாள் குறும்பாக. "பின்னே, என்னைப் பார்க்காமல் இந்தப் புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே?" — சபேசனின் கையிலிருந்த புத்தகத்தை வெடுக்கெனப் பிடுங்கித் தூர எறிந்தாள் அவள்.

சபேசன் அவளை நன்றாக நிமிர்ந்து நோக்கினான். பிறகு மெல்லச் சிரித்துக் கொண்டே, "உன்னை நான் கண்ணால் பார்த்தால் மட்டும் போதுமா?" என்று கேட்டான்.

வேதாவுக்கு ஒரே வியப்பாகி விட்டது. ஆவல் பொங்க அவனை இமைக்காமல் பார்த்த அவள், "ஓ,...... என்னை உங்கள் மனத்தாலும் பார்க்க வேண்டுமா? அதை உங்கள் அறைக்குப் போனபின் செய்து கொள்ளலாம்!" என்று வெட்கம் செறிந்த குரலில் - கூறிக் கொண்டே அங்கிருந்து வெள்ளாட்டுக் குட்டி போல் துள்ளி ஓடி விட்டாள் புறக்கடைப் பக்கம்.

'நான் சொன்னதற்கு இதுவா அர்த்தம்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொள்கிறவன் மாதிரித் திருதிரு வென விழித்தான் சபேசன்.

"இன்று, தைறு, ரொம்ப நேரம் ஆய்ப் போச்சா? நான் இன்று பண்றது, போ! அங்கே அந்தப் பயில்வான் மறுபடி உடம்புக் காயலா படுத்துக்கிட்டுக் கெடக்கிறாரு. அதான் அவரைப் போய்க் கொஞ்சம் எட்டிப் பார்த்துட்டு ஓடியாந்தேன்" என்று கவலையுடன் சொல்லிக் கொண்டே உள்ளே வந்த கன்னியம்மாள் டீ தம்ளரைச் சபேசனின் எதிரில் வைத்து விட்டு, "இந்தத் திம்மாக்குப் பொண்ணு எங்கே போச்சு? அதது போட்டது போட்டபடியே கெடக்குதே!" என்றவாறு உட்கார்ந்து முறத்திலிருந்த அரிசியை எடுத்துப் புடைக்க ஆரம்பித்தாள்.

தேநீரைப் பருகிவிட்டு எழுந்த சபேசன், "அப்ப, நான் வரட்டுமாம்மா?" என்றான்.

"ஒம்பிட்டியா தைறு? சரி; இங்கே பாரு: இது உன் ஊடு! நீ எப்பவும் வரலாம், எதையும் கேட்டுத் துன்னலாம், போவலாம், இன்று?"

"ஆகட்டும்மா! இனிமேல் உங்களைத் தவிர வேறு யாரை நான் அம்மா என்று கூப்பிட முடியும்? அதற்காகவாவது இங்கு அடிக்கடி வருவேன்!" என்று கரகரத்த குரலில் கூறிக் கொண்டே சற்றுத் தயங்கிப் புறக்கடைப் பக்கம் பார்த்துவிட்டு வெளியே போய் விட்டான் சபேசன்.

"பாவம், தாயில்லாத புள்ளே!" என்று தனக்குள் முனகிக் கொண்டாள் கன்னியம்மாள்.

சபேசன் சென்ற சிறிது நேரம் கழித்து, ஏதோ பாத்திரங்களைக் கழுவி எடுத்துக் கொண்டு வருகிறவள் போல் அவசரமாக உள்ளே வந்த வேதா, சுறுசுறுப்புடன் சமையல் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினாள்.

அரிவாள்மணையில் கத்திரிக்காய் நறுக்கிக் கொண்டே அவளை மிகக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த கன்னியம்மாள் - எதையோ இலேசாகப் புரிந்து கொண்டவள் மாதிரி தனக்குள் மெல்லச் சிரித்தாள்.

சட்டென்று பின்னால் திரும்பிய வேதா, "என்னம்மா, சிரிக்கிறே?" என்று கேட்டாள் சிரித்துக் கொண்டே.

"ஒண்ணுமில்லே; உன் வேலையைப் பாரு!" என்றவாறு எழுந்து மாடுகளுக்கு வைக்கோல் பிடுங்கிப் போடப் புறக்கடைப் பக்கமாகப் போய் விட்டாள்.

இரவு ஒன்பது மணிக்கெல்லாம் தங்கள் உணவை முடித்துக் கொண்ட கன்னியம்மாளும் வேதாவும் கதவைச் சாத்தி விட்டுப் படுக்க ஆயத்தமானார்கள்.

"வேதா! அந்தப் பொறுக்கிப் பையன் இன்னைக்கு வந்தாலும் வருவான்; சோத்துப் பானையிலே தண்ணி ஊத்தாம மூடி வை. பூனை கீனை வந்து உருட்டப் போவுது" என்று சொல்லிவிட்டு மணையை எடுத்துத் தலைக்கு வைத்துக் கொண்டு முந்தானையை விரித்துப் போட்டுப் படுத்தாள் கன்னியம்மாள். படுத்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம் குறட்டையும் விட ஆரம்பித்து விட்டாள்.

ஆனால் வேதாவுக்கு அவ்வளவு சீக்கிரம் தூக்கம் வரவில்லை. கட்டைச் சுவர் மேல் விளக்கை வைத்து விட்டுக் குத்துக்காலிட்டு உட்கார்ந்தவாறு கையில் கிடைத்த புத்தகம் ஒன்றைப் படிக்கத் தொடங்கினாள். ஏழெட்டுப் பக்கங்கள் படித்த பிறகு அவளுக்கு ஒரு விஷயம் புரிந்தது — இது வரையில் தான் எதையும் படிக்க வில்லை, வெறும் பக்கங்களை மட்டும் புரட்டிக் கொண்டிருந்தோம் என்பதே அது!

தனக்குள் மெல்லச் சிரித்தவாறு புத்தகத்தைப் போட்டுப் படுக்கையில் சாய்ந்தாள். அளவுக்கு மீறிய துயரம் மாத்திரமல்ல, அளவுக்கு அதிகமான மகிழ்ச்சியும் தூக்கத்துக்கு ஓர் எதிரிதான். அவள் மனம் இந்த இரண்டாவது நிலையில் திளைத்துக் கிடந்ததால் இப்போது அவளின் தூக்கத்துக்கு அது எதிரியாக நின்றது.

'உன்னை நான் கண்ணால் பார்த்தால் மட்டும் போதுமா?' — சபேசன் கேட்ட இந்தக் கேள்வியைத் தன் வாய்க்குள்ளாகவே திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்த்துக் கொண்டாள் வேதா. அதைச் சொல்லச் சொல்ல அவள் வாயெல்லாம் இனித்தது. நெஞ்செல்லாம் சிலிர்த்துச் சில்லிட்டது. அவளால் படுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. திடுமென்று எழுந்து உட்கார்ந்து கொண்டாள். அப்புறம் உட்கார்ந்திருக்கவும் பிடிக்கவில்லை. நடமாட வேண்டும் போன்ற ஒரு பரபரப்பு. அவ்வீட்டைச் சுற்றிச் சுற்றி ஓடி வரவேண்டும் போன்ற ஒரு துறுதுறுப்பு. என்ன விந்தையான உணர்ச்சி இது!

(தொடரும்)



# மகாபுருஷர்

நந்திகேசுவரன்

“இருபது வருடங்கள் லண்டனில் வசித்தும் உங்கள் தமிழையும் கலைகளையும் மறக்காமல் இருக்கிறீர்களே!'' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டார் அட்வகேட் சீனு.

''டாக்டர் தொழில் பார்த்துக் கொண்டு கலைகளைப் பற்றி இவ்வளவு நுட்பமான ஆராய்ச்சிகள் செய்து வைத்திருக்கிறீர்கள் என்று இத்தனை நாட்களாக நான் தெரிந்து கொள்ளவில்லையே!'' என்று வியப்புற்றார் ஐ. ஏ. எஸ். நண்பர் ராமச்சந்திரன்.

''எந்தப் புற்றுக்குள் எந்தப் பாம்பு இருக்கிறதோ என்று சும்மாவா சொல்லி வைத்தார்கள்?'' இப்படிச் சொன்னது மூன்றாவது நண்பர் உளநூற்பேராசிரியை மரகதம்.

டாக்டர் சிவராமன் அடக்கமாகப் புன்னகை செய்தார். ''சீமைக்குப் போய் வந்தவர்களெல்லாம் ஜி. பி. போர்டு மாட்டிக் கொண்டு வெள்ளைக்காரராக மாறிவிட வேண்டுமா என்ன? என்னைப் பொறுத்தமட்டில் சீமைக்குப் போனதால்தான் ஓரளவு நமது கலைகளைப் பற்றிப் பூரணமாக அறியவும் உணரவும் வாய்ப்புக் கிடைத்தது என்று சொல்ல வேண்டும். அங்கே நான் சந்தித்த அறிஞர்கள் பலர் இந்திய தத்துவ சாஸ்திரங்கள், கலைகள் பற்றிய அறிவில் நிபுணர்களாக இருக்கிறார்கள். நமக்கு வேண்டிய சில புராதன நூல்களும் ஏட்டுச் சுவடிகளும் லண்டனிலே சுலபமாகக் கிடைக்கின்றன. அதனால், நம்முடைய கலைகள் சம்பந்தமான அரிய செய்திகளையெல்லாம் நான் மேல்நாட்டிலேதான் கற்றுத் தெரிந்து கொண்டேன்'' என்றார் டாக்டர் சிவராமன்.

ஐ. ஏ. எஸ். நண்பருக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. ''சின்ன வயதிலேயே லண்டனுக்குப் போய் விட்டீர்களா? உங்களுக்கு இப்போது என்ன, முப்பது வயதுதான் இருக்குமென்று எண்ணிக் கொண்டிருக்கிறேன்....''

''ஆமாம், பச்சைக் குழந்தை!'' என்று பரிகாசமாய்ச் சொல்லிச் சிரித்தாள் மரகதம். டாக்டர் சிவராமன் அவளைப் பார்த்த பார்வை சுட்டுவிடும் போலிருந்தது. கவனிக்காதவள் போல் மரகதம் வேறெங்கோ பார்வையைச் செலுத்தினாள்.

''சென்னையில் டாக்டர் படிப்பை முடித்துப் பட்டம் பெற்ற பின்னர்தான் லண்டனுக்குப் போனேன்'' என்று குறிப்பாகப் பதிலளித்தார் டாக்டர் சிவராமன்.

சென்னையிலிருந்து திருச்சிக்கு வந்து கொண்டிருந்த தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் ரயிலில் முதல் வகுப்புப் பிரயாணிகள் மேலே சொல்லப்பட்ட நண்பர்கள் நால்வரும் — அட்வகேட் சீனு, ஐ. ஏ. எஸ். ராமச்சந்திரன், உளநூற் பேராசிரியை மரகதவல்லி, டாக்டர் சிவராமன். சென்னையில் ஒரு முக்கியமான கலை ஆராய்ச்சி மகாநாட்டில் கலந்து விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்த மூன்று பிரதிநிதிகளுடன் டாக்டர் சிவராமன் தற்செயலாக ரயிலில் சந்தித்துச் சேர்ந்து கொண்டார். அவர் சென்னைக்குச் சென்றது ஒரு கேஸ் விஷயமாக.

அட்வகேட் சீனு என்ற ஸ்ரீநிவாஸன் தான் இவர்களில் பெரியவர். தொழிலில் அட்வகேட்டாயிருந்த போதிலும் சாஸ்திரோக்தமாகச் சங்கீதம் கற்று வைத்திருக்கிறார். இவர் சம்பந்தப்பட்டுள்ள சபாக்கள் பல. அதனால், பெரிய இடத்துச் செல்வாக்கின் காரணமாக, அரசாங்க அந்தஸ்தில் அழைப்புக்கள் பல வரும். ஸெமினார்கள், மகாநாடுகள், அரங்கேற்றத்துக்குத் தலைமை தாங்குதல் எல்லாம் அவருக்கு ஓய்வில்லாமல் இருந்து கொண்டிருக்கும்.

ஐ. ஏ. எஸ். ராமச்சந்திரன் அரசாங்கத்தில் ஒரு முக்கிய பதவி வகிப்பவர். இலக்கியத்திலும் கலைகளிலும் நாட்டம் கொண்டவர். எழுத்தாளர் கூட்டங்களிலும் நாடக சங்கீத சபைகளிலும் அவருக்கு நிறைந்த செல்வாக்குண்டு. அதன் காரணமாக, கலை சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளில் அரசாங்கப் பிரதிநிதியாக அடிக்கடி ராமச்சந்திரன்தான் பங்கு கொள்ள நேரும்.

பேராசிரியை மரகதவல்லி ஒரு கல்லூரியில் உளநூல் கற்பித்து வந்தாலும் பல வருட காலமாக இசை உலகத்திலும் நாட்டிய உலகத்திலும் பெற்றிருந்த கீர்த்தி காரணமாகக் கலை அரங்குகளிலெல்லாம் மரகதத்துக்கு ஒரு தனி மதிப்பும் செல்வாக்கும் உண்டு. கல்லூரி வாத்தியாரம்மா தொழிலிலேயே பல வருடங்கள் கழிந்து விட்டதால் கல்யாண விஷயத்தை அவளாகவே சிந்திக்கவில்லையோ அல்லது உலகமே மறந்து விட்டதோ, தெரியவில்லை. கலைகள் நிறைந்த பெண்ணாயிருந்தும் மரகதம் ஒரு சுயாதீனவாதி. தன்னம்பிக்கையும் கௌரவமும் உருவாகி, பெரியவர் சிறியவர் எல்லாருமே மதிப்புக் கொடுக்கும் ஓர் அந்தஸ்தை அவள் தனக்கென வளர்த்து வைத்திருந்தாள்.

டாக்டர் சிவராமனை மரகதத்தின் குடும்பத்தாருக்கு நன்கு தெரியும். சென்னையில் மிகச் சிறப்போடு டாக்டர் பட்டம் பெற்று, லண்டனில் போய் மேல் படிப்பு முடித்துக் கொண்டு அங்கேயே பல வருட காலம் வைத்தியத் தொழில் பார்த்தவர். ஊருக்குத் திரும்பிய பின்னர் சொந்தத்தில் தொழில் பார்க்கிறார். அவர் திறமைக்கும் சிறந்த குணத்துக்கும் ஊரிலே நல்ல செல்வாக்கு. தனிக் கட்டை. உறவினர் யாரும் இல்லை. அதனால்தானோ என்னவோ தம் தொழிலைக் கவனிப்பது போக மீதியுள்ள நேரமெல்லாம் கலையாராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்.

ரயிலில் நண்பர்களிடையே நடந்த சம்பாஷணையில் டாக்டர் சிவராமனின் கலையறிவு மற்றவர்களைத் திகைக்க வைத்தது. ஆரம்பத்திலே சோதிட விஷயமாகப் பேச்சு எழுந்தது. டாக்டருக்குக் கைரேகை சாஸ்திரம்கூடத் தெரியும் என்று கண்ட நண்பர்கள் ஒவ்வொருவராகத் தமது கைகளை நீட்டிப் பலன் சொல்லுமாறு வற்புறுத்தினார்கள். மரகதம் மாத்திரம் தன் கையை நீட்ட மறுத்து விட்டாள். உள்ளூற ஆசையிருந்தும் நாலு பேர்கள் மத்தியில் அதைக் காட்டிக் கொள்ளாமல், கைரேகை சாஸ்திரம் வெறும் போலி என்று சொல்லித் தட்டிக் கழித்து விட்டாள்.

சோதிடத்திலிருந்து சம்பாஷணை சங்கீதத்துக்குச் சென்றது. கர்நாடக சங்கீதத்தில் தாள விகற்பங்கள் பற்றியும், பரத நாட்டிய முத்திரைகளின் பல்வேறு அம்சங்களைப் பற்றியும் அபிநய வேறுபாடுகள் பற்றியும் டாக்டர் சிவராமன் நிறைந்த தகுதியோடு அநாயாசமாக வியாக்கியானம் செய்ததைப் பார்த்து நண்பர்கள் திகைத்துப் போனார்கள். இவ்வளவு கலைப் பொக்கிஷத்தை இந்த மனுஷர் தமக்குள்ளேயே மூடி வைத்துக் கொண்டிருக்கிறாரே என்று ஆச்சரியப்பட்டனர். சிவராமனை நன்கு தெரிந்த மரகதத்துக்கோ பெருமிதம் தாங்க முடியவில்லை. நண்பர்கள் மத்தியில் தாம் அறிமுகப்படுத்தியவர் கதாநாயகனைத் தலை நிமிர்ந்து நிற்பதைப் பார்த்து அவள் உள்ளம் துள்ளியது. ஆனால், அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், தனது சொந்த கௌரவத்தையும் விட்டுக் கொடுக்காமல், சாதாரணமாகவே நடந்து கொள்ளப் பிரயத்தனப் பட்டாள். இருந்த போதிலும் அவளையும் அறியாமலே, ''பொல்லாத மனுஷரப்பா இவர்!'' என்று வாய் புலம்பி விட்டது. பேச்சு சுவாரசியத்தில் இருந்த நண்பர்கள் அதைக் கவனிக்கவில்லை.

ஐ. ஏ. எஸ். நண்பரைப் பார்த்துச் சீனு சொன்னார்: ''ராமச்சந்திரன் ஸார்! டாக்டர் சிவராமன் இத்தனை மேதை என்பது முன்னமே நமக்குத் தெரியாமல் போய் விட்டது. தெரிந்திருந்தால் சென்னை மகாநாட்டில் கலந்து கொள்ளச் செய்திருக்கலாம்.''

''ஆமாம், ஸார்! மகாநாட்டில் ஆங்கிக அபிநயத்துக்கும் ஸாத்விக அபிநயத்துக்கும் பேதமில்லை என்று புரொபஸர் மூர்த்தி ஏதோ பிரமாதப்படுத்தினார். மரகதத்தம்மா கூட அந்த அபிப்பிராயத்தை மறுத்துப் பேசினார் என்று நினைக்கிறேன். இதோ நம்ம டாக்டர் ஸார் என்ன அற்புதமாக அலசிப் பிரித்து வித்தியாசங்களைக் காண்பித்தார் பார்த்தீர்களா?''

மரகதம் சொன்னாள்: ''அடுத்த மாதம் மதுரையில் ஏதோ சம்மேளனம் நடக்கப் போகிறதாகச் சொல்லிக் கொண்டார்களே.''

''நல்ல சமயத்தில் ஞாபகப்படுத்தினீர்கள்'' என்றார் ராமச்சந்திரன். ''மதுரையில் ஒரு பெரிய நாட்டிய சம்மேளனம்

நடக்கப் போகிறது. பாரதத்தின் எல்லா ராஜ்யங்களிலிருந்தும் நாட்டிய விற்பன்னர்களும் ரஸிகர்களும் வருவார்கள். டாக்டர் ஸார் அவசியம் அதில் கலந்துகொள்ளத்தான் வேண்டும்.''

''ரொம்ப நல்ல ஏற்பாடு'' என்று ஆமோதித்தார் சீனு. ''பரதநாட்டிய செக்ஷனுக்குத் தலைமை தாங்கச் சொல்லலாமே?''

''அதெல்லாம் வேண்டாம் ஸார்! பெரிய இடத்துக் காரியங்களில் ஒரு தரம் ஈடுபட்டால் அப்புறம் நமக்குக் கஷ்டம்தான் அதிகரிக்கும். சம்மேளனத்துக்கு நாமெல்லாம் சும்மா போய் விட்டு வேணுமானால் வரலாம்'' என்று சொன்னார் சிவராமன்.

''நீங்க ஒண்ணு. அற்புதமான ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. தமிழ் நாட்டில் உள்ளவர்களுடைய சிறப்பை மற்றவர்களுக்குக் காண்பிக்காமல் விடக் கூடாது. நான் ஒரு நல்ல ஏற்பாடு செய்யப் போகிறேன், நீங்கள் மறுக்கக் கூடாது, டாக்டர். நாளைக்கே டெலிபோனில் சில யோசனைகள் சொல்கிறேன்'' என்று ராமச்சந்திரன் சொல்லி முடித்தார்.

அதிகாலையில் திருச்சி ஜங்ஷன் வந்ததும் நண்பர்கள் ஒருவருக்கொருவர் விடைபெற்றுக் கொண்டனர். மரகதம் தனியாகச் சிவராமனிடம் போய், ''சாயங்காலம் வீட்டுக்கு வருவீர்கள் அல்லவா?'' என்று கேட்டாள்.

''கிளினிக்கில் கொஞ்சம் வேலை அதிகமாயிருக்கும். எட்டு மணி சுமாருக்கு வருகிறேன். ஏன், விசேஷமுண்டா ?''

'' விசேஷம் இருந்தால்தான் வருவீர்களாக்கும்!''

'' அடேயப்பா ! அதற்குள் அத்தனை கோபமா? சரி, உன்னைப் பார்க்கத்தானே வரச் சொல்கிறாய்? அவசியம் வருகிறேன்.''

''என்னைப் பார்க்க யாரும் வரத் தேவையில்லை. அம்மா எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள் என்றுதான் சொன்னேன்.''

''மறந்து போனேன், மரகதம். அம்மா உடம்பு எப்படியிருக்கிறது?''

''நான் பார்த்து நாலு நாட்களாச்சு. சுமாராயிருக்கிறது என்று கடிதம் எழுதியிருந்தாள்.''

''சரி, சாயங்காலம் அவசியம்வருகிறேன்.''

''அம்மாவைப் பார்க்கத்தானே?''

''இல்லை, உன்னையும்கூடத்தான்!''

டாக்ஸி டிரைவர்கள் அவசரப்படுத்தவும் நண்பர்கள் அதிக நேரம் நின்று பேச முடியாமல் போய் விட்டது.

அன்று மாலை சிவராமனின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் மரகதம். அந்தக் குடும்பத்தோடு மிக நெருங்கிப் பழகி வந்தவர் டாக்டர் சிவராமன். சீமைக்குப் போய்த் திரும்பி வந்தபோது மரகதத்தின் தந்தை போய் ஐந்தாண்டுகள் கழிந்து விட்டன என்று தெரிய வந்தது. மரகதத்தின் அண்ணா ஒருவர் பல வருட காலமாகப் பம்பாயில் உத்தியோகம். எப்போதாவது ஒரு நாள் சென்னைக்கு வந்தால் அம்மாவையும் தங்கையையும் பார்த்து விட்டுப் போவார். மரகதம் நல்ல செல்வாக்கான உத்தியோகத்தில் இருப்பதால் தன்னையும் தாயாரையும் கவனித்துக் கொண்டு நிம்மதியாகக் காலம் போக்கினாள்.

இரவு எட்டரை மணியிருக்கும், வாசலில் கார் சத்தம் கேட்டது.

டாக்டர் சிவராமன்தான் என்பது மரகதத்துக்கு நன்றாகத் தெரியும். சற்று நேரத்தில் சிவராமனே நேரில் வந்து விட்டார்.

''அரைமணி நேரம் பிந்திப் போகிறதா உங்கள் கடிகாரம்?'' என்று கேட்டாள் மரகதம்.

''ஆமாம், எட்டு மணிக்கு வருகிறேன் என்றுதான் சொன்னேன். கொஞ்சம் தாமதமாகி விட்டது.''

''அம்மா கோயிலுக்குப் போயிருக்கிறாள். நீங்கள் வரப் போவதாகச் சொல்லியிருந்தேன். சீக்கிரம் வந்து விடுவாள்.''

கூடத்திலிருந்த சோபாவில் உட்கார்ந்தார் டாக்டர். மரகதம் ஊஞ்சலில் போய் உட்கார்ந்து, குறையில் வைத்திருந்த மல்லிகைச் சரத்தை எடுத்துத் தொடுக்க ஆரம்பித்தாள். சிறிது நேரம் இருவருக்குமிடையே மௌனம் நிலவியது.

''மரகதம்! ஒரு நல்ல செய்தி சொல்லட்டுமா?'' என்று பேச்சைத் தொடங்கினார் சிவராமன்.

ஆச்சரியத்தோடு தலைநிமிர்ந்த மரகதம் 'என்ன' என்ற பாவனையில் டாக்டரின் முகத்தைப் பார்த்தாள்.

''ராமச்சந்திரன் இன்று டெலிபோனில் பேசினார். மதுரை நாட்டிய சம்மேளனத்தில் பரத கலையின் புராதன வடிவத்தைப் பற்றி என்னைப் பேசும்படி ஏற்பாடாகியிருக்கிறதாம்.''

''பூ! போயும் போயும் சொந்தப் பிரதாபம்தானா? ஏதோ நல்ல செய்தி என்றவுடன்.........''

''அதுதான் கேளேன். அந்த விரிவுரைக்கு விளக்க நடனம் செய்ய உன் பெயர் அறிவிக்கப்பட்டிருக்கிறது.''

மரகதம் அப்போதுதான் உணர்வு பெற்றவள் போல் சட்டென்று நிமிர்ந்து பார்த்தாள். ''என் பெயரையா? யாரைக் கேட்டுச் செய்தார்கள்? எனக்கு ஒரு வார்த்தை சொல்லவில்லை! நான் போக முடியாது.''

''உன்னைக் கேட்கவில்லைதான். உனக்காக நானே சரி என்று சொல்லி விட்டேன். நீ அவசியம் ஆடத்தான் வேண்டும்.''

''என்ன, வரவர என் காரியங்களையெல்லாம் நீங்களே நிர்வகிக்க ஆரம்பித்து விட்டீர்களா ? இனிமேல் நான் கொஞ்சம் கண்டிப்பாக இருக்க வேண்டியதுதான்'' என்று மரகதம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவள் தாய் வந்தாள்.

''யாரோடு கண்டிப்பாயிருக்கப் போகிறாய்?'' என்று கேட்டாள் மரகதத்தின் தாய்.

''மதுரையில் நாட்டிய சம்மேளனம் நடக்கப் போகிறதாம். அதிலே டாக்டர் பரத நாட்டியத்தைப் பற்றிப் பேசப் போகிறாராம்.........''

''ரொம்ப நல்ல ஏற்பாடு. இம்மாதிரி ஒரு சந்தர்ப்பம் டாக்டருக்குக் கிடைக்க வேண்டுமென்று நான் பல தடவை சொல்லி

யிருக்கிறேன். அவர் கலைத் திறமையைக் காண்பிக்க நல்ல சமயம்.''

''அவர் பேச்சின் போது விளக்கம் செய்வதற்காக நான் ஆட வேண்டுமாம்.''

''அதற்கென்ன? ஆடிக் காண்பிக்கிறது தானே?'' என்று சாதாரணமாகச் சொன்னாள் மரகதத்தின் தாய்.

மரகதத்துக்கு ஆச்சரியமாக இருந்தது. ''என்னம்மா, இது? வேடிக்கையாயிருக்கிறது. நான் மேடையைக் கைவிட்டு எத்தனை வருஷமாச்சு? சின்னஞ் சிறிசுகளெல்லாம் ஆடிக் கொண்டிருக்கும் மேடையில் என்னைப் போய் இந்த வயசில் ஆடச் சொல்கிறாய் ?''

''போடி, பைத்தியமே! வயசு வயசு என்று சொல்லித்தானே கல்யாணத்தையும் தள்ளிப் போட்டுக் கொண்டு வருகிறாய். இந்த முட்டாள்தனமான எண்ணம் எப்படித்தான் உன் மண்டையில் ஏற்பட்டதோ!''

''கல்லூரி வாத்தியாரம்மாக்களெல்லாம் இந்தக் காலத்திலே அப்படித்தானம்மா'' என்று டாக்டர் குறுக்கிட்டுச் சொல்லிவிட்டு, ''ஏன் மரகதம்? அந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்ள முடியாது என்று சொல்லி விடட்டுமா?'' என்று கேட்டார்.

''எல்லாம் உங்கள் தீர்மானமாயிருக்கும் போது நான் என்ன சொல்வது?'' என்றாள் மரகதம்.

''சும்மா இடக்காக ஏதும் பேசாமல் சொன்னதைச் செய்யப் பழகிக் கொள்'' என்று தாய் புத்திமதி சொன்னாள்.

சிறிது நேரம் அங்கே மரகதத்தின் தாயாரின் உடல் நலம் பற்றி விசாரித்து, வைத்திய ஆலோசனைகள் சொன்ன பின்னர் டாக்டர் சிவராமன் விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்தார். மரகதமும் கூடவே நடந்து வந்தாள். சிவராமன் தனது காரின் கதவைத் திறந்து ஆசனத்தில் உட்கார்ந்ததுடன் மரகதம் கதவை மூடி விட்டுக் கொண்டே, ''புதுக் கார் பிரமாதமாக இருக்கிறது'' என்றாள்.

சிவராமன் அவளைக் கூர்ந்து பார்த்தார். அந்தக் குறும்புக்காரியின் முகத்தில் தவழ்ந்த அமைதியான அழகு அவரை ஒரு கணம் உலுக்கியது. தம்மையும் அறியாது சிவராமன், ''கார் நன்றாகத்தான் இருக்கிறது. உன்னைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு ஓட்டினால் இன்னும் அழகாயிருக்குமே !'' என்று சொன்னார்.

எதிர்பார்த்திராத இந்தச் சொற்களைக் கேட்டதும் மரகதம் திகைத்துப் போனாள். டாக்டர் சிவராமனிடமிருந்தா இந்த வார்த்தைகள்? சிறிது நேரம் அப்படியே ஸ்தம்பித்து நின்றவள், ''உங்களை நான் ஒரு மகாபுருஷர் என்றல்லவோ கருதி வைத்திருக்கிறேன்! அந்தப் படியிலிருந்து நழுவப் பார்க்கிறீர்களே'' என்றாள். சொல்லி விட்டு மறுகணம், ஏன்தான் அப்படிச் சொன்னோம் என்று திண்டாடினாள்.

டாக்டர் சிவராமன் சமாளித்துக் கொண்டு, ''அத்தனை பெருமை எனக்கு வேண்டாம். நான் ஒரு சாதாரண மனிதன்தான். உன் அபிப்பிராயத்தில் நான் எப்படியிருக்க

வேண்டுமென்று நீ விரும்புகிறாயோ, அதே ஸ்தானத்தில் வைத்துக் கொண்டிரு. எனக்கு ஆட்சேபணையில்லை. உன் பொருட்டாக நானும் முயன்று பார்க்கிறேன்.....'' என்று சொல்லிவிட்டு, சட்டென்று காரை இயக்கி ஓட்டிக் கொண்டு மறு வார்த்தை பேசாமல் வேகமாய்ப் போய் விட்டார்.

ஒரு சிறிது நேரமாவது சிவராமனுடன் தனியாகப் பேசலாம் என்று காரிடம் வந்த மரகதம், எதிர்பாராமல் நிகழ்ந்த பொருளற்ற பேச்சையும் அதன் பலனையும் பார்த்துப் பொறுக்கொணாத ஏமாற்றத்தோடு கண் கலங்க வீடு திரும்பினாள். டாக்டர் சிவராமனின் அபார கலை ஞானத்தைப் பாராட்டி, அவரது ஒப்பற்ற பண்பை

## பரிசு

மூன்றும் ஜார்ஜ் மன்னர் ஒரு நாள் மாறுடையில் தமது நாட்டைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டார். கோதுமை வயல் வெளிக்கு அவர் வந்தபோது, அங்கே ஒரே ஒரு பெண் மட்டும் வேலை செய்து கொண்டிருந்தாள். மற்ற யாரையுமே அங்கு காணும். அரசர் வியப்புற்று, அவளிடம் அது பற்றிக் கேட்கலானார். மாறுடையில் இருந்த அவரை அவள் கண்டு கொள்ளவில்லை.

''மற்றவர்களெல்லாம் வேலை செய்யாமல் எங்கே போய்விட்டார்கள்? நீ மட்டும் வேலை செய்கிறாயே ?''

''அரசர் பவனி வருவதைப் பார்க்கப் போயிருக்கிறார்கள்...''

''நீமட்டும் ஏன் போகவில்லை?''



''அந்த முட்டாள்களைப்போல நான் வேடிக்கை பார்க்கப் போனால் கூலி கிடைக்குமா? வேலை செய்தால்தானே என் குழந்தைகளைக் காப்பாற்ற முடியும்? வேலைதான் எனக்கு முக்கியம். வேடிக்கை அல்ல!''

உடனே மாறுடையில் இருந்த அரசர், அவளிடம் ஒரு தங்க நாணயத்தைக் கொடுத்துச் சொன்னார்: ''அவர்கள் அரசரைப் பார்க்கப் போனார்கள். ஆனால் அரசர் உன்னைப் பார்க்க வந்தார் என்று அவர்களிடம் சொல். நான் இங்கு வந்ததற்கு ஆதாரமாக எல்லோருக்கும் என் உருவம் பதித்த இந்தத் தங்க நாணயத்தைக் காட்டு. தொழில் மேல் எல்லா மக்களுக்கும் உன்னைப் போல் அக்கறை இருந்தால்தான் நாடு முன்னேறி வளம் பெறும்!''

அரசர் போவதையே பார்த்தபடி நின்றாள் அந்தக் குடியானப் பெண். அவள் கண்களில் பரவச நீர் முத்துக்கள் தேங்கி நின்றன.

ஆதாரம்: பாமிலி டைஜஸ்ட்
தகவல்: பி. ஏ. தாஸ்

யும் போற்றி ஒரு தெய்வம்போல் மதித்திருந்தாள் அவள். அவள் இருதயத்தில் கட்டி வைத்திருந்த கோவிலில் இன்ன தன்மை தான் என்று விவரிக்க முடியாத ஒரு ஸ்தானம் அது. பக்தியா பாசமா என்று அவள் ஆராய்ந்து பார்த்தது கிடையாது. அதனாலே தான் எதிர்பாராது திடீரென்று சிவராமன் அப்படிச் சொன்னதைக் கேட்டதும் மரகதம் அடித்தாற்போல் பதில் சொல்லி விட்டு மறு கணம் வேதனையுற்றாள்.

நாட்டிய சம்மேளனமும் வந்தது. திருச்சியிலிருந்து அட்வகேட் சீனுவும் ஐ. ஏ. எஸ். ராமச்சந்திரனும் மற்றும் சில நண்பர்களும் இரண்டு நாட்கள் முன்னதாக ஒரு கோஷ்டியாகவே புறப்பட்டபோது டாக்டர் சிவராமன் சேர்ந்து கொள்ள முடியவில்லை. 'கிளினிக்'கையும் தமது நோயாளிகளையும் விட்டு விட்டு அதிக நாள் வெளியே போக முடியாதாகையால் தமது நிகழ்ச்சியன்று மாத்திரம் தாம் நேரே காரில் போய்விட்டுத் திரும்பலாம் என்று சொல்லி விட்டார். மரகதத்துக்கு டாக்டருடன் போகவேண்டு மென்று உள்ளூற ஆசையிருந்த போதிலும், அது நன்றாயிராது என்ற காரணத்தாலும், மற்றைய பிரதிநிதிகளுடன் போக வேண்டிய நிர்ப்பந்தம் இருந்ததாலும் சீனு கோஷ்டியுடன் சேர்ந்து கொண்டாள்.

நாட்டிய சம்மேளனம் மிகவும் தடபுடலாக ஆரம்பித்தது. தமிழ் நாட்டினரின் ஒப்பற்ற விருந்தோம்பும் பண்பு மற்றைய ராஜ்யங்களிலிருந்து வந்த கலைக் குழுவினரைப் பிரமிக்கச் செய்தது. அஸ்ஸாம், வங்காளம், மத்திய பிரதேசம், ராஜஸ்தான், காசி முதலிய இடங்களிலிருந்து வந்த கலைஞர்களின் நிகழ்ச்சிகள் முடிந்த பின்னர் தென் பிராந்தியங்களைச் சேர்ந்த கலைஞர்கள் தத்தம் நிகழ்ச்சிகளை ஆடிக் காண்பித்தனர். கடைசியாகப் பரதநாட்டிய அரங்கின்போது டாக்டர் சிவராமனின் பெயர் அறிவிக்கப்பட்டது.

ஏற்கனவே சம்மேளனத்தில் சிவராமனைப் பற்றிய செய்திகளெல்லாம் வாய்ச் சொல் விளம்பரமாக எல்லோரது ஆவலையும் தூண்டி வைத்திருந்தது. புதுமையாக ஒரு பெரிய கலை விமர்சகர் — மேல்நாட்டில் பல வருடங்களாக வாழ்ந்த ஒருவர் — பரதநாட்டிய அரங்கில் தலைமை வகிக்கப் போகிறார் என்றும் முன் ஒருபோது தமிழ்நாட்டின் பல மேடைகளிலே கீர்த்தியுடன் நாட்டியமாடியுள்ள மரகதவல்லி இன்று அவர் உரைக்கு விளக்க நடனம் செய்யப் போகிறாள் என்றும், கேள்விப்பட்ட ரசிகர்கள் உற்சாகத்தோடு காத்திருந்தனர். டாக்டர் சிவராமன் தலைமையில் பரதநாட்டியக் குழுவினர் சிலர் நடனமாடியபின், நாட்டிய ஆசிரியர்களும் கலை விமர்சகர்களும் கருத்தரங்கு நடத்தினர். தலைவர் சிவராமன், 'பரத கலையின் புராதன வடிவங்கள்' என்ற பொருளில் ஒரு பேருரை நிகழ்த்திவிட்டு, தம் உரையில் குறிப்பிட்ட முக்கிய அம்சங்களுக்கெல்லாம் பேராசிரியை மரகதவல்லி நடனத்தின் மூலமும் அபிநயத்தின் மூலமும் விளக்கம் செய்வார் என்று கூறி அமர்ந்தார்.

மரகதவல்லி மேடைக்கு வந்ததும் சம்மேளன மண்டபத்தில் ஒரு புதிய ஒளி படர்ந்தது. பண்பட்ட பக்குவம் நிறைந்த அந்தக் கலையரசி அற்புதமான நிருத்த நிலைகளையும், கரண வகைகளையும், முத்திரைகளையும் பிடித்துக் காட்டிப் புராதன நாட்டியக் கலையின் சிறப்புக்களையெல்லாம் விளக்கியபோது, தமிழ் நாட்டின் கோயில்களிலெல்லாம் காணப்படும் சிற்பங்களும் சித்திரங்களும் உயிர் பெற்று வந்து அந்த மதுரை மண்டபத்தில் அணிவகுத்து நின்றது போன்று ரசிகர்கள் யாவரும் மெய்ம்மறந்திருந்தனர். டாக்டர் சிவராமன் பெருமிதம் அடைந்தார். அட்வகேட் சீனு நன்றி தெரிவித்துப் பேசியபோது, டாக்டர் சிவராமனும் மரகதவல்லியும் சம்மேளனம் பூர்த்தியாவதற்கு முத்தாய்ப்பு வைத்த பெருங் கலைஞர்கள் என்று சொல்லி, "இந்த இருவரும் இனி மேலும் பல மேடைகளை அலங்கரிப்பார்கள் என நம்புகிறேன்" என்று சொல்லி முடித்தார். ஐ. ஏ. எஸ். ராமச்சந்திரன் இன்னும் ஒரு படி மேலே சென்று, "டாக்டர் சிவராமனும் பேராசிரியை மரகதவல்லியும் நமது கலை வானத்திலே உதித்திருக்கும் புதிய ஜோடி நட்சத்திரங்கள்" என்றதும், மண்டபத்தில் கர கோஷம் முழங்கியது. இதற்கிடையில், கூட்டத்திலிருந்த எவரோ ஒரு ரசிகர் மேடைக்கு வந்து சிவராமனுக்கும் மரகதத்துக்கும் இரண்டு ரோஜாப்பூ மாலைகளை அணிந்துவிட்டுப் போனார். இந்த நிகழ்ச்சிகளெல்லாம் மரகதவல்லிக்கு ஒரே குழப்பமாயிருந்தது.

சம்மேளன நிகழ்ச்சிகள் முற்றுப் பெற்றுச் சீனுவும் ராமச்சந்திரனும் மண்டபத்தை விட்டு வெளிவரும் போது இரவு பத்துமணியாகி விட்டது. யாரோ சில ரசிகர்களுடன் டாக்டர் சிவராமன் மாத்திரம் பேசிக் கொண்டிருப்பதை அவர்கள் கவனித்தார்கள். மரகதவல்லி தனியாக ஒரு பக்கம் நின்று கொண்டிருந்தாள். ராமச்சந்திரன் உடனே போய், "என்னம்மா, மிகவும் களைத்துப் போயிருப்பீர்கள். விடுதிக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு ரெஸ்ட் எடுத்துக் கொள்ளலாமே?" என்றார். சீனுவும் அங்கு வந்து சேரவே மூவரும் டாக்டர் நின்ற இடத்தை அணுகினர். சிவராமன், தாம் உடனே புறப்பட்டு ஊருக்குப் போய்விட வேண்டுமென்று பிடிவாதமாயிருந்தார். பின்னர், ராமச்சந்திரனின் வற்புறுத்தலின் பேரில் நண்பர்களுடன் இரவு தங்கிவிட்டு மறுநாட் காலையில் புறப்படச் சம்மதித்தார்.

நண்பர்கள் நால்வரும் அவர்கள் தங்கியிருந்த விடுதியில் உணவருந்தி விட்டு நிலா வெளிச்சத்திலே தோட்டத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அன்று மாலை சம்மேளன நிகழ்ச்சிகள்தாம் பேச்சு முழுதும் நிறைந்திருந்தது. அட்வகேட் சீனுவுக்கு ஒரே திருப்தி. தமிழ் நாட்டவர்கள் பிரமாதமாகப் பண்ணிவிட்டார்கள் என்று குதித்தார். ராமச்சந்திரனுக்கு இது ஒரு தனிப்பட்ட வெற்றி. உத்தியோக ரீதியாகப் பார்க்கும் போது வருங்காலம் அனுகூலமா

யிருக்கும் என்பது அவருக்குத் தெரியும். டாக்டர் சிவராமன் விசேஷமாக ஒன்றும் நடக்காதது போல் நிதானமாகவே பேசிக் கொண்டிருந்தார். ஆனால் மரகதம் மாத்திரம் இந்தச் சம்பாஷணைகளில் எதிர்பாராத விதமாக ஒதுங்கியிருக்கக் காணப்பட்டாள். வழக்கத்தில் அவள் தாராளமாகவே பேசக் கூடியவள். ஆனால் இப்போது பெரும்பாலும் மௌனம் சாதிப்பது அபூர்வமாகத் தெரிந்தது. ராமச்சந்திரன் அதைக் கவனித்து விட்டுச் சுட்டிக்காட்டவும் செய்தார். டாக்டர் சிவராமன் ஒன்றையும் கவனிக்காதவராக எப்போதும் போல் சரளமாகத்தான் நண்பர்களுடன் நடந்து கொண்டார்.

வெகுநேரமாகப் பேசிக் கொண்டிருந்து விட்டு நண்பர்கள் எழுந்திருக்கையில் டாக்டர், ''நாளைக் காலை காப்பி சாப்பிட்டதும் நான் காரில் புறப்பட விருக்கிறேன். எல்லாருக்கும் சொல்லிக் கொள்ளச் சமயமிருக்காது'' என்றார். ''காரில் இடமிருந்தால் நான்கூட வரலாம் என்று நினைக்கிறேன்'' என்று கொஞ்சம் தயக்கத்தோடு சொன்னாள் மரகதம்.

''ஆமா டாக்டர், அழைத்துக் கொண்டு போங்களேன்? நாங்கள் பின்னால்தான் வர வேண்டியிருக்கும். இங்கே கமிட்டி விஷயங்களையெல்லாம் முடித்துக் கொண்டுதான் புறப்படலாம்'' என்று ராமச்சந்திரனும் ஆமோதித்தார்.

''காரில் என்னைத் தவிர வேறு யாரும் இல்லை. நீ வருவதானால் தாராளமாக வரலாம். கொஞ்சம் சீக்கிரமாகவே கிளம்பினால் நல்லது'' என்று சொல்லிக் கொண்டே டாக்டர், சீனுவுடன் சேர்ந்து விடுதியை நோக்கி நடந்தார். மரகதம் எதையோ எதிர்பார்த்தவள் போல அங்கேயே நின்றவள், சிவராமன் திரும்பிப் பார்க்காமல் செல்வதைப் பார்த்து விட்டு மௌனமாகத் தனது அறையை நோக்கிப் போனாள்.

அன்றிரவு அவள் தூங்கவேயில்லை. ஊரிலே தனது வீட்டு வாசலில் அன்று நடந்த நிகழ்ச்சியையும், பின்னர் சம்மேளனத்தில் சிவராமன் தூர விலகி நின்று கொண்டதையும் இப்போது அன்னியர் போல் நடந்துகொண்டதையும் நினைத்து நினைத்து மரகதத்துக்கு அழ வேண்டும் போலிருந்தது. ''இவ்வளவு கல்லா அவர் நெஞ்சம்? நான்தான் என்ன குற்றம் செய்து விட்டேனாம்? ஓடி ஓடி வீட்டுக்கு வருவார். உட்கார்ந்து மணிக் கணக்காகப் பேசுவார். இப்போது என்ன வந்து விட்டது? ஒருவேளை திரும்பி வந்து எப்போதும் போல் 'குட்நைட்' என்று சொல்லிவிட்டுப் போவாரோ?'' என்று அவள் பேதை உள்ளம் கனவு கண்டது. அதற்காகவே அறையின் கதவைத் திறந்து வைத்து விளக்கை அணைக்காமல் வெகு நேரம் வரை உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். வெளி வராந்தாவில் ஆள் நடமாட்டம் இருக்கும்போதெல்லாம் சிவராமன்தானோ என்று ஏங்குவாள். ஆனால் அவள் எதிர்பார்த்தது போல் ஒன்றும் நிகழவில்லை. முடிவில் அவளும் தூங்கிவிட்டாள்.

அதிகாலையிலேயே சிவராமன் வண்டியைத் தயார் செய்து வைத்து விட்டு மரகதம் தங்கியிருந்த அறைக்கு வந்தார். அவர் வரும்போது ஆயத்தமாயில்லாவிட்டால் கோபித்துக் கொள்வார் என்பதை மரகதம் நன்குணர்வாள். டாக்டரைக் கண்டதும் மறு பேச்சுப் பேசாமல் கைப்பெட்டியை எடுத்துக்கொண்டு வெளியே வந்து காரை நோக்கி நடந்தாள். சிவராமன் அவளுக்கு முன்னே நடந்து போய்க் காரின் பின் பக்கத்துக் கதவைத் திறந்து வைத்து மரியாதையோடு நின்றார். மரகதம் தலையை நிமிர்த்தாமலே திறந்திருந்த கதவைத் தன் கைப்பட மூடி விட்டு, முன் பக்கத்து அறையைத் திறந்து இடது பக்க ஆசனத்தில் அமர்ந்து கதவை இழுத்து மூடினாள். சிவராமனுக்கு ஆச்சரியமாக இருந்தது. சில சமயங்களில் தன் மனம் போன போக்கில் சுவாதீனமாக நடந்து கொள்ளும் பெண் என்பது தெரிந்தாலும் இப்போது மரகதம் நடந்து கொண்ட மாதிரி அசாதாரணமாகத் தோன்றியது. பின்னால் ஏதோ நடக்கப் போகிறது. ஆனால் அது தன்னை எப்படியான சிக்கலுக்குள் மாட்டி விடக் கூடுமோ என்று கிலியடைந்தார். இருந்த போதிலும், நிலைமையைச் சமாளித்துக்கொண்டு சிவராமன் வண்டியில் ஏறி, உட்கார்ந்து ஓட்ட ஆரம்பித்தார்.

காலை வேளையில் அதிகப் போக்குவரத்து இல்லாத நெடுஞ்சாலையில் வண்டி கட்டுப்பாடான வேகத்தில் போய்க் கொண்டிருந்தது. ஊரைத் தாண்டிப் பரந்த வெளிப்புறத்தில் கார் போய்க் கொண்டிருக்கையில் மரகதம் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டு, ''இருந்தாலும் இவ்வளவு பிடிவாதம் வேண்டியதில்லை.'' என்று பேச்சை ஆரம்பித்தாள்.

''யார் பிடிவாதம் பிடித்தார்கள்? நான் எப்போதும் போல்தான் இருக்கிறேன்.''

''நேற்றிரவு என்னவெல்லாமோ பேச வேண்டும் போல் இருந்தது. கொஞ்ச நேரம் உட்கார்ந்து பேசுவீர்களாக்கும் என்று எதிர்பார்த்திருந்தேன். நீங்கள் வேண்டுமென்றே திரும்பிப் பார்க்காமல் உங்கள் நண்பர்களுடன் போகவில்லையா?''

''உன்னுடைய லட்சியத்துக்கு மதிப்புக் கொடுக்கத்தான் போனேன்.''

''என்ன லட்சியமாம்?''

''நிலா முற்றத்தில்-நாலு பேர்கள் பார்க்க உன்னோடு நான் பேசிக் கொண்டிருந்தால்?''

மரகதத்தின் வாயடைத்துப்போய்விட்டது. மௌனமாய் உட்கார்ந்து கொண்டிருந்தாள். சிவராமனும் அதற்கு மேல் பேசாமல் வண்டியை நிதானமாக ஓட்டிக் கொண்டு போனார். கால் மணி நேரமாகவே இருவருக்கு மிடையில் பேச்சில்லை. ஒரு கிராமத்தின் நடுவே ஒடுக்கமான வீதி வழியாகப் போய்க் கொண்டிருக்கையில் ரயில்வே கேட்

ஒன்று தென்பட்டது. அந்தக் கேட்டைத் தாண்டி விடலாமென்று நினைத்துக்கொண்டு சிவராமன் கொஞ்சம் வேகமாகவே வண்டியை ஓட்டினார். ஆனால் அவர் எண்ணத்தைப் புரிந்து கொண்டுதானோ என்னவோ கேட் காவல்காரன் திடீரெனக் கேட்டை இழுத்து ரஸ்தாவைத் தடுத்து மூடிவிட்டான். நல்ல வேளையாக அங்கு நிறுத்தப் பட்டிருந்த ஒரு கட்டை வண்டியில் மோதிக் கொள்ளாமல் சிவராமன் சட்டென்று பிரேக் போட்டுக் காரை நிறுத்திக் கொண்டார். அந்த அதிர்ச்சியில் மரகதம் சிறிது கலங்கிப் போன போதிலும் சமாளித்துக் கொண்டு சிவராமனின் முகத்தைப் பார்த்தாள். அதே சமயம் சிவராமனும் - மரகதமும் முன்புறம் தாக்குண்டு கண்ணாடியில் மோதிக் கொள்ளாமல் இருக்கத் தனது இடது கையால் அவள் தோளைப் பற்றித் தடுத்துக் கொண்டார். இருவரும் தம்மை மறந்து சிரித்தனர். மரகதம் தலையைக் குனிந்தவாறு, ''நீங்கள் உண்மையாகவே மகா புருஷர்தான் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன்'' என்றாள்.

சிவராமன் மரகதத்தின் தோள் மீதிருந்த கையை நழுவ விட்டு அவள் கையைப் பற்றிக் கொண்டே, ''அந்த அபிப்பிராயத்தை நீ மாற்றிக் கொண்டு விட்டாய் என்றல்லவோ நினைத்திருந்தேன்'' என்றார்.

''இல்லை. நேற்று மாலை தாங்கள் நடந்து கொண்ட மாதிரியைப் பார்த்த பிறகு எனது அபிப்பிராயம் உறுதிப்பட்டு விட்டது. சீனுவும் ராமச்சந்திரனும் போன பிறகு உங்களோடு தனிமையில் பேசிக்கொண்டிருக்கலாம் என்று எதிர்பார்த்தேன். நீங்களோ 'கம்' என்று இருந்து விட்டு அவர்களோடு போய்விட்டீர்கள். இப்போது தாங்கள் அதற்குச் சொன்ன காரணத்தைக் கேட்ட பின்னர் தாங்கள் ஒரு மகாபுருஷர் தான் என்ற நம்பிக்கை பலமாகிறது'' என்று சொல்லிச் சிரித்தாள்.

சிவராமன் அன்போடு அவள் கையை எடுத்து காரின் ஸ்டியரிங் மீது வைத்துக் கொண்டு விரல்களை அகல விரித்து உள்ளங் கையைப் பார்த்தார். ''என்ன அதிசயமாகப் பார்க்கிறீர்கள்?'' என்று மரகதம் செல்லமாகக் கேட்டாள். ஆனால், அந்தப் பிடியிருந்து அவள் விலகிக் கொள்ளவில்லை. சிவராமன் சொன்னார்: ''மரகதம்! முன்பு ஒரு தடவை ரயிலில் வரும்போது ரேகை சாஸ்திரம் பார்த்தது ஞாபகம் இருக்கிறதல்லவா? அப்போது உன் கையைக் காண்பிக்க மறுத்து விட்டாய். இப்போது பார்த்துச் சொல்லட்டுமா....?''

'' தாராளமாய்ச் சொல்லுங்களேன் '' என்று சொன்னவள், திடீரென்று எதிரே ரயில் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டுக் கையைச் சட்டென்று பிடுங்கிக் கொண்டே, ''வேண்டாம் போங்கள். நடுத் தெருவில் நாலு பேர் பார்க்க வேணுமா என்ன? வாங்க நேரே ஊருக்குப் போய் வீட்டிலே உட்கார்ந்து சொல்லலாம். அம்மாவும் கூட இருப்பார்'' என்று சொல்லிச் சிரித்தாள்.

''உன் திருட்டுத்தனமே அலாதி'' என்று சொல்லிக் கொண்டே டாக்டர் சிவராமன் மோட்டாரை 'ஸ்டார்ட்' செய்து ரயில்வே கேட் திறக்கப்பட்டதும் வண்டியை வேகமாய் ஓட்டினார்.

# லட்சியக் கனவு

## உங்கள் அனுபவம் என்ன?

கனவு காணாத மனிதர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். கனவு காண்பவர்கள் எத்தனையோ இனிய கனவுகளைக் கண்டு மகிழ்ந்திருப்பார்கள். ஈடேறாத இலட்சியங்களே கனவாகப் பரிணமிக்கின்றன என்று கூறும் மனத்தத்துவ நிபுணர்களும் உண்டு. ஆனால் அவர்களது இக் கூற்றைப் பொய்யாக்கிக் கொண்டு எத்தனையோ கனவுகள் இலட்சியங்களாக நிறைவேறியிருக்கலாம். அத்தகைய இலட்சியக் கனவுகள் நீங்கள் கண்டிருக்கிறீர்களா? 'கல்கி' பத்திரிகையில் ஒரு பக்கத்துக்குள் அடங்குமாறு சுவைபட உங்கள் இலட்சியக் கனவுகளைத் தீட்டியனுப்புங்கள். பரிசுபெறும் கட்டுரைகள் பிப்ரவரி மாதம் 20ந் தேதி இதழில் இடம்பெறும். முடிவு தேதி 6-2-66.

உறையின் மேல் ''லட்சியக் கனவு'' என்று குறிப்பிடவும். இது விஷயமாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்கில்லை. பிரசுரமாகாத கட்டுரைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் தங்கள் விலாசமிட்ட, தபால் தலையுடன் கூடிய ஓர் உறையை உடன் அனுப்ப வேண்டும்.



PURNIMA



# ஏன் இந்தக் கொடுமை?

சுவாதி

“இப்படிக் கொட்டம் அடித்தால், பூச்சாண்டியிடம் பிடித்துக் கொடுத்து விடுவேன்....!''

இப்படிப் பூச்சாண்டி காட்டும் பெற்றோர்கள் எத்தனையோ பேர்.

''பிள்ளை பிடிக்கிறவன் வந்திருக்கிறானம்!''

இப்படிக் கூறிக் குழந்தைகளை அச்சுறுத்துவதாக எண்ணிப் பிறகு தாங்களே கிலி கொண்டு அஞ்சிச் சாகும் பெற்றோர்களும் பலர் உண்டு.

காரணம் என்ன?

குழந்தைகளைக் கடத்திச் செல்லும் இந்தக் காரியம் ஒரு தொழிலாக வளம் பெற்றிருப்பதுதான்.

'இதுவும் ஒரு தொழிலா ? இப்படியும் நடக்குமா?' என்று வியப்பவர்களுக்கு, மகாராஷ்டிரத்தின் உள்துறை உபமந்திரி கொடுத்திருக்கும் புள்ளி விவரம், 'இப்படி நடந்திருக்கிறது. இப்படியும் நடப்பதுண்டு!' என்பதை நிரூபிக்கிறது. அது மட்டுமா? ஆண்டுக்கு ஆண்டு உணவு உற்பத்தி போல் இல்லாமல் இந்தத் தொழில் வளர்ந்திருக்கிறது என்பதையும் எடுத்துக் காட்டுகிறது.

பம்பாய்ப் போலீஸாரின் கணக்குப்படி, 1963ம் ஆண்டு 2296 குழந்தைகள் காணமற் போயிருக்கிறார்கள். 1964ம் ஆண்டோ காணமற் போன குழந்தைகளின் தொகை 2552ஆக வளர்ந்திருக்கிறது. 1965ம் ஆண்டின் ஆரம்ப ஐந்து மாதங்களுக்குள்ளேயே இந்த எண்ணிக்கை 1772 ஆகியிருக்கிறது என்று கணக்கிட்டவர்கள் இந்த ரீதியில் குழந்தைகள் காணமற் போனால் 1965ம் ஆண்டின் இறுதிக்குள் இந்த எண்ணிக்கை 4250 ஆக உயர்ந்து விடும் என்றும் அநுமானித்தார்கள். அதாவது சராசரி நாளைக்குப் பன்னிரண்டு குழந்தைகள் என்றாகிவிடும். இது இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் இன்றும் தீராத வழக்காக இருக்கும் மொத்தக் கணக்கு ஆகும். இதையே நாம் காணமற் போன குழந்தைகளின் எண்ணிக்கையாகக் கொள்வோம்.

இதில் பம்பாய் நகரத்தில் மட்டும், 1964ம் ஆண்டு 336 குழந்தைகள் காணமற் போயிருக்கின்றன. அவற்றில் கண்டுபிடிக்கப்பட்டவை 80 ஆகும். அகில இந்தியாவிலும் காணமற் போய்க் கண்டுபிடிக்கப்பட்ட குழந்தைகள் 24 சதவிகிதத்துக்கு மேல் இல்லை. ஓர் உண்மையை ஒப்புக் கொண்டே இந்தக் கணக்குத் தரப்படுகிறது. காணமற் போன தங்கள் குழந்தைகள் கிடைத்தபின் போலீஸாருக்குத் தகவல் தெரிவிக்காத பெற்றோர்கள் சிலரும் இதில் இருக்கலாம்.

குழந்தைகள் காணமற் போனால், பெற்றோர்கள் படும் துயரைக் கூற முடியாது. இத்தகைய துயரம் யாருக்கும் வரவேண்டாம். ஆனால் அநுபவப்பட்டவர்கள்தான் இப்பெருந் துயரத்தை உணர முடியும். ஆயுளுக்கும் இந்த வேதனை அவர்களை விட்டு அகலுவதில்லை. தங்களுக்குப் பிறந்த குழந்தைகள் நோய் நொடி வந்து இறந்து விட்டன என்றாலும் அவர்கள் ஒருவாறு மனத்தைத் தேற்றிக் கொள்ளுவார்கள். நாம் கொடுத்து வைத்தது இவ்வளவுதான் என்று ஆறுதல் பெறுவார்கள். உயிரோடு தங்கள் குழந்தையைப் பறி கொடுத்தவர்களுக்கு இந்த ஆறுதல் ஏது? தங்கள் குழந்தைகள் எங்கே, எப்படிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றனவோ என்ற கவலையே அவர்களைக் கரையானாக அரித்துத் தீர்த்து விடும்.

இன்றைய இந்தியப் பாதுகாப்பு மந்திரியும் அன்றைய மகாராஷ்டிர முதன்மந்திரியுமான ஸ்ரீ சாவன் சில ஆண்டுகளுக்கு முன், குழந்தைக் கடத்தல் விஷயமாகக் கூறும் பொழுது குறிப்பிட்டார்: 'இத்தகைய குற்றங்கள் இழைக்கப்படுவதற்குப் பல காரணங்கள் உண்டு. நகைகளைக் களவாடுவதற்காக இருக்கலாம். பலவந்தத் திருமணங்கள் புரிவதற்காக இருக்கலாம். குழந்தைகளைத் திருடி விற்பதாயிருக்கலாம். பிச்சை எடுப்பதற்குக் கருவியாக உபயோகித்துக் கொள்வதற்காக இருக்கலாம். தீய ஒழுக்கங்களுக்குப் பயன்படுத்துவதற்காக இருக்கலாம். அல்லது விரோதமும் காரணமாயிருக்கலாம். பொதுவாகக் களவாடப்படும் குழந்தைகள் பன்னிரண்டு அல்லது அதற்குக் குறைவான வயதுள்ளவர்களாகவே இருக்கிறார்கள்.'

நாடோடிப் பரதேசிகள் குழந்தைகளைக் கடத்திச் செல்கிறார்கள் என்னும் பீதி நாட்டுப்புறங்களிலும் நகரப்புறங்களிலும் பரவும் பொழுது போலீஸார் அந்தப் பீதியைக் களைவதற்காக அறிக்கைகள் விடுகின்ற

ளர். பல வதந்திகள் ஆதாரமற்றவை என்று உணர்த்துகின்றனர்.

சில ஆண்டுகளுக்கு முன் நடந்த ஒரு நிகழ்ச்சி. பூனாவில் உள்ள குருடர் விடுதிக்கு இரண்டு சாமியார்கள் வந்தார்கள். ஒரு பையனைத் தங்களிடம் ஒப்படைக்குமாறு கேட்டார்கள். பார்வையற்ற அந்தப் பையன் கோல்ஹாப்பூர் போலீஸாரால், ஊர் சுற்றித் திரிந்து கொண்டிருந்தான் என்பதற்காக அவ்விடுதிக்கு அனுப்பப்பட்டவன். அச்சாமியார்கள் அந்தப் பையனைத் தங்கள் சீடன் என்று பறைசாற்றினர். அதிகாரிகள் அந்தப் பையனைச் சாமியார்களுக்கு எதிரே கொண்டு வந்து நிறுத்தினர். அவன் ஒரு சாமியாரின் உடலைத் தொட்டான். உடல் குலுங்க அவன் கூறிய விருத்தாந்தம் அருகில் இருந்தோரைக் குலைநடுங்க வைத்தது.

1952ம் ஆண்டு பண்டரிபுரத் திருவிழாவின் பொழுது தன்னைக் களவாடிச் சென்று கண்களைக் குருடாக்கித் தங்களுக்காகப் பிச்சை யெடுக்கும்படி துன்புறுத்திய சாமியார் இவர்தான் என்று அவன் சாதித்தான். அதன் பேரில் அச்சாமியார்கள் சிறைப்படுத்தப்பட்டனர்.

இதே போலத்தான் ராய்ப்பூர் போலீஸார், மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு களவாடிக் கூட்டத்தினரிடமிருந்து மூன்று பத்து வயதுப் பாலகர்களை மீட்டார்கள். பெற்றோர்களின் கொடுமை தாளாமல், வீட்டை விட்டு ஓடினவர்கள் அந்தப் பையன்கள். தங்களுக்குப் பிச்சை எடுக்கக் கற்றுத் தந்ததையும் வருமானம் நாளொன்றுக்கு ஐந்து ரூபாய்க்குக் குறைந்துவிட்டால் தங்கள் எசமானர்கள் எப்படி யெல்லாம் கொடுமைப்படுத்தினார்கள் என்பதையும், அவர்கள் கதை கதையாகக் கூறினார்கள். 1957ல் மகாராஷ்டிர ராஜ்யத்தில் மட்டிலுமே குழந்தைகளைக் களவாடிய குற்றத்துக்காக 377 பேர் பிடிக்கப்பட்டிருக்கிறார்கள்.

செல்வத்துள் சிறந்த செல்வம் மக்கட் செல்வமாகவும் மதிக்கப் பெறுகிறது அல்லவா? மழலை இல்லாதவர்கள் பிள்ளைப்பேற்றுக்காக ஏங்கித் தவம் கிடப்பார்கள். நம் வீட்டிலும் ஒரு குழந்தை விளையாடாதா என்றே ஆசைப்படுவார்கள். இதற்கு ஒரு திருஷ்டாந்தக் கதைகூட உண்டே; குழந்தையற்ற ஒருத்தி இன்னொருத்தியின் குழந்தையைக்கூடக் களவாடித் தன்னுடையது என்று சாதித்தாள். குழந்தையின் உண்மையான தாயார் யார் என்று கண்டுபிடிக்க நீதிபதி குழந்தையை இரண்டு துண்டாக்க வேண்டுமென்று உத்தரவிட்டு, அதன்மூலம் உண்மையான தாய் யார் என்று கண்டுபிடித்து நீதி வழங்கினார் என்று!

இத்தகையதொரு காரணத்துக்காகவும் பிறந்த குழந்தைகள் திருட்டுப் போவதுண்டு. பிறந்த குழந்தைகளைத் திருடிச் சென்று குழந்தையில்லாத் தம்பதிகளுக்குக் குழந்தைகளை விற்பதும் ஒரு தொழிலாகி விட்டது.

1963ம் ஆண்டு புதுடில்லி ஆஸ்பத்திரிகளில், முக்கியமாகப் பிரசவ ஆஸ்பத்திரிகளில் பார்வையாளர்களைக் கடுமையாகக் கண்காணிக்க ஏற்பாடு செய்தார்கள். பிறந்த குழந்தையைக் குளிப்பாட்டி முடித்ததும் முதுகு கைகால் ஆகியவற்றில் குறியிடும் பழக்கத்தைக் கொண்டார்கள்.

இந்தக் களவாடல் குழந்தைகளோடு மட்டும் நின்றது என்று கூற முடியாது. வயது வந்தவர்களும், குறிப்பாகப் பெண்களும் களவாடிக் கடத்திச் செல்லப்பட்டதுண்டு. பெரும்பாலும் பிள்ளைப் பிராயத்தினரே களவாடிக் கூட்டத்தினரின் மயக்குப் பேச்சுக்கு இரையாகியுள்ளனர். அதுவும் தாய் தந்தையரின் கடுமைக்கும் கொடுமைக்கும் ஆளாகி மன நோய் கண்ட குழந்தைகளே அதிகம்.

சில ஆண்டுகளுக்கு முன் தென்னிந்தியச் சிறுவன் ஒருவன் எவ்வித நோக்கமுமின்றி ஊர் சுற்றிக் கொண்டிருந்தான் என்பதற்காகப் புதுடில்லியில் கைது செய்யப்பட்டான். ஐந்து ஆண்டுகளுக்கு முன் தாய் தந்தையரின் நிழலை விட்டு நீங்கியதாகக் கூறினான். அலாரம் கடிகாரத்தை உடைத்து விட்டானாம். அப்பாவுக்குத் தெரிந்தால் என்ன தண்டனை கிடைக்குமோ என்ற பயம். வீட்டுக்குப் போகவே நடுங்கினான். எனவே, கால் போன போக்கில் ரயில்வே ஸ்டேஷனை அடைந்தான். அங்கே அவனைச் சந்தித்த ஒரு புது மனிதன் தன்னோடு பம்பாய்க்கு வந்தால் திரையுலகில் சேர்த்து விடுவதாக வாக்களித்தான். அவனோடு சென்ற சில மாதங்களுக்கெல்லாம் பையனுக்குப் புத்தி வந்தது. தன் சொந்த ஊருக்குத் திரும்பி வந்தான். தன் வீடு இருக்கும் தெருவை அணுகியபொழுது மீண்டும் அவனைப் பயம் பற்றிக் கொண்டது. வீட்டுக்குச் சென்றால் தனக்கு எத்தகைய வரவேற்புக் கிடைக்குமோ என்று துணுக்குற்றான். திரும்பவும் தன் ஊர் சுற்றிப் பிழைப்புக்கே திரும்பினான். உதவாக்கரைக் கும்பலின் கைப்பொம்மையாகித் திரிந்தான்.

பெற்றோர்கள் தங்கள் கோபத்தை அடக்கிக்கொள்வார்களானால், இதுபோன்ற எத்தனையோ துயரச் சம்பவங்கள் நிகழாமல் நிற்கக் கூடும். இன்னுமொரு முக்கியமான நடவடிக்கையும் மேற்கொள்ளப்பட வேண்டும். குழந்தைப் பிச்சைக்காரர்களைக் கூடிய வரை கடுமையான வகையில் தடை செய்ய வேண்டும். கொடுமைகள் புரியும் கூட்டத்தினரின் வருவாய்க்குக் குழந்தைகள் ஒரு கருவியாகாமல் இருக்க அது உதவும். அடுத்தபடியாகத் தேர்த் திருவிழாக்களிலும், சந்தைக் கூட்டங்களிலும் நாடோடிப் பரதேசிகளைக் கண்டிப்பாகக் கண்காணிக்க வேண்டும். இவையெல்லாம் குழந்தைக் கடத்தல் குறைய ஓரளவு உதவும்.

பாகிஸ்தானத்துப் பத்திரிகையாளரான திரு சிராஜுத்தீன் ஹுஸேன் என்பவர், இந்திய உபகண்டத்தில் நடைபெறும் 'குழந்தைக் கடத்தல்' விஷயத்தில் அக்கறை காட்டினார். கிழக்குப் பாகிஸ்தானில் நாளுக்கு நாள் பெருகும் குழந்தைக் கடத்தலைக் கண்டு கவலை கொண்டு, தாம் ஒருவராகவே தனி

முயற்சி எடுத்துத் தமது பத்திரிகையான 'இத்தஃபாக்'கில் பிரகடனப்படுத்தினர்.

திரு ஹான்ஸெனின் முயற்சியைப் பாராட்டியது அகில தேசிய பிரஸ் இன்ஸ்டிட்யூட். ஹான்ஸெனின் வற்புறுத்தலின் பேரில் 1961ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் உயர்தர அதிகாரிகளின் மகாநாடு ஒன்று அங்குள்ள ராணுவச் சட்ட அதிகாரியின் தலைமையில் கூடியது. குழந்தைகள் காணாமற் போவதற்குக் கடத்தல் கூட்டத்தார் மட்டும் காரணமாயிருக்க முடியாது என்பதுபோல அதிகாரிகள் பொதுப் படையாக மறுத்தார்கள்.

இந்தியப் போலீசாரும் பெரும்பாலும் இதே கதையைத்தான் கூறுகிறார்கள் என்பதையும் இங்கே குறிப்பிட வேண்டும்.

டாக்காவில் மாயமாக மறையும் குழந்தைகள் பற்றி மிஸ்டர் ஹான்ஸென் சளையாமல் மேற்கொண்ட முயற்சி, விளம்பரம் ஆகியவற்றின் காரணமாக வாசகர்களிடமிருந்து ஏராளமான கடிதங்கள் குவியலாயின. தங்கள் குழந்தைகள் காணாமற் போனது குறித்துப் போலீசில் புகார் செய்வதற்கு முன்பாகப் பெற்றோர்கள் இந்தப் பத்திரிகை அலுவலகத்தையே முற்றுகையிடலாயினர். தாங்கள் பழி வாங்கப்பட்டால் என்ன செய்வது என்று இதுகாறும் பயந்துகொண்டு தங்களுக்குத் தெரிந்ததைச் சொல்லாமல் இருந்தவர்கள் கூட இப்பொழுது தைரியமாகத் திரு ஹான்ஸெனை அணுகித் தாங்கள் அறிந்ததை, ஈவு இரக்கமின்றிக் குழந்தைகளைக் கடத்திச் செல்லும் கூட்டத்தினர் எப்படி ஒன்றிச் செயல்படுகிறார்கள் என்பதைக் கூறினார்கள்.

இந்தச் சந்தர்ப்பச் சாட்சியங்களை ஆதாரமாகக் கொண்டு திரு ஹான்ஸென் அதிகாரிகளை அணுகினார். போலீஸார் அதன்பேரில் டாக்காவிலிருந்து எண்பது மைல் தொலைவில் இருந்த பழங்குடிக் கிராமமொன்றை முற்றுகையிட்டார்கள். குழந்தைகளைக் கடத்திச் செல்லும் ஒரு கும்பலுக்கு அது மறைவிடமாக இருக்கிறது என்பதைக் கண்டு பிடித்தார்கள்.

ஏறக்குறைய அந்தக் கிராமம் முழுவதுமே — கிட்டத்தட்ட நானூறு பேர் — இந்தக் குற்றத்தில் ஈடுபட்டிருந்தார்கள்.

அந்தக் கிராமத்திலே பிறவி அடிமையென வளர்க்கப்பட்டார்கள் பாவர்கள். ஏழெட்டிலிருந்து பன்னிரண்டு வயது வரை இருக்கும், அவர்கள் ஜேப்படிக்காரர்களாகவும் பிச்சைக்காரர்களாகவும், திருடர்களாகவும், ஈன ஒழுக்கமுள்ளவர்களாகவும் பழக்கப்பட்டிருந்தார்கள். இருநூறு முதல் ஆயிரம் வரை ரூபாய் வாங்கிக் கொண்டு இது போன்ற குற்றங்களில் ஈடுபடும் மற்றவர்களுக்கு இவர்கள் விற்கப்பட்டு வந்தார்கள். பிச்சைக்காரச் சந்தையிலே அதிக விலை போக வேண்டும் என்பதற்காக இந்தக் களவாடிக் கூட்டத்தினர் வேண்டுமென்றே சில குழந்தைகளின் கைகளையும் கால்களையும் முடமாக்கிப் போட்டிருப்பதையும் போலீசார் கண்டறிந்தார்கள்.

'எனக்கும் என் மனைவிக்கும் தகராறு வந்தால் என் வார்த்தைதான் கடைசியாக இருக்கும்!'



'அப்படியா? கணவன் — மனைவிச் சண்டையில் இது வரை கேள்விப்படாத அதிசயமாயிருக்கிறதே! எப்பொழுதுமே பெண்களின் வார்த்தைதானே மேலோங்கியிருக்கும்?'

'கிடையவே கிடையாது. என் வீட்டில் என் பேச்சுதான் பைனல்! 'சரி, விட்டுவிடு. நமக்குள் எதற்குச் சண்டை?' என்று நான் முத்தாய்ப்பு வைத்து விடுவேன்!'

இந்தக் கிராமத்தில் கிடைத்த தடையங்களுக்குப் பிறகு பாகிஸ்தானத்து அதிகாரிகள் மற்றக் களவாடிக் கூட்டத்தினரையும் கண்டுபிடிப்பதற்குத் தீவிர முயற்சியில் இறங்கினார்கள். 1962ம் ஆண்டு அக்டோபர் மாதத்துக்கும் டிசம்பர் மாதத்துக்கும் இடையே கிழக்குப் பாகிஸ்தானின் பல பகுதிகளிலிருந்து 64 குழந்தைகள் கண்டு பிடிக்கப்பட்டார்கள். அவர்களில் எத்தனையோ பேர்கள் நான்கு ஆண்டுகளுக்கு முன்பே காணாமற் போனவர்கள்.

போலீசார் இருமுறை மேமன் சிங் மாவட்டத்தில் 'தேட்டை' இட்டபொழுது 49 பையன்கள் கிடைத்தார்கள். ஒரு சந்தர்ப்பத்தில் ஸ்தலத்திலேயே உள்ள போலீசாரால், காணாமற்போன ஒரு பையனைக் கண்டு பிடிக்க முடியாமற் போய்விட்டது. பாகிஸ்தானத்துத் துப்பறியும் பிரிவு பெருத்த போலீஸ் படையின் உதவியோடு அந்தப் பகுதியிலேயே பயங்கரப் பிரதேசம் என்று கூறப்படும் இடத்திலிருந்து அந்தப் பையனை மீட்டு வந்தது. ஆனால் திரும்பும்போது போலீஸ் படையும் மீட்கப்பட்ட பையனும் பயங்கர ஆயுதந்தாங்கிய கும்பல் ஒன்றின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டி வந்தது. எப்படியோ மயிரிழையில் தப்பி வெற்றியுடன் அவர்கள் திரும்பினார்கள்.

திரு ஹான்ஸெனின் இடைவிடா முயற்சியால் நானூறு குற்றவாளிகளைக் கொண்ட கிராமம் மட்டுமென்ன, எத்தனையோ தீராத வழக்குகளும் தீர்ந்தன.

இந்த நிகழ்ச்சியைக் கொண்டு, 'நம் இந்தியாவிலும் இதுபோன்ற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். இந்தியப் போலீஸார் தீவிர நடவடிக்கை எடுத்துச் சிறப்புப் பணி புரிய வேண்டும்' என்று யாருமே நினைக்கலாம். குழந்தைக் கடத்தல் என்பது மன்னிக்க முடியாத குற்றம். பேரிழிவான செயல். இந்தியக் குற்றச் சட்டம் குழந்தைகளைக் கடத்திச் செல்லும் இத்தகைய குற்றவாளிகளுக்குக் கடுமையான தண்டனை விதிக்கிறது. தீவிரமாக அமுல் செய்து இந்தக் குற்றம் நடைபெறாமல் தடுப்பதே இப்பொழுது நாட்டின் முன் நிற்கும் பெரும் பணியாகும்.





"எனக்கென்று வந்து வாய்த்திருக்கிறாயே பிள்ளை! தலைவிதி!" என்று தலையில் அடித்துக் கொண்டு ராஜலட்சுமி அம்மாள் உள்ளே போய் விட்டாள்.

பக்கத்து வீட்டுக் கொல்லைப்புறத்திலிருந்து எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த நிர்மலாவின் முகம், ஊர்க் கோடியிலிருக்கும் காளியம்மன் கோயில் சிலையைப் பிரதிபலித்தது. சற்று முன் ஆசை தீரப் பார்த்துக்கொண்டிருந்த மட்ஸ்வாளின் வெண்பனி போன்ற தூய பருத்த உடலும், நீண்டு அழகுற வளைந்திருந்த கழுத்தும், பவளம் போன்ற அலகும் கண்ணை உறுத்தின. அதன் மெத்தென்றிருக்கும் கழுத்தை ஒரு முறையாவது தடவிக் கொடுத்து விட வேண்டும் என்று ஆசைப்பட்டவள், அந்தக் கழுத்தை அப்படியே திருகிப் போட்டு விட்டால் என்ன வென்று ஆத்திரம் மேலோங்க எண்ணினாள்.

ஆனந்தின் கொம்மாளம் சகிக்க முடியாத தாகவே, சினம் ததும்பும் பார்வை யொன்றை வீசி விட்டு விருட்டென்று உள்ளே ஓடிவிட்டாள்.

ஃ ஃ ஃ

அன்று இரவு....

மாடியில் படுத்திருந்த நிர்மலாவுக்கு விழிப்பு வந்து விட்டது. கீச் கீச்சென்று ஒரே கூச்சல்! சடசடவென்று சிறகுகளை அடித்துக் கொள்ளும் பேரொலி! ஒரே ரகளை! பக்கத்து வீட்டில் ஆனந்தனின் அறையில் விளக்கு எரிவது சாளரத்தின் வழியாகத் தெரிந்தது.

தூக்கம் கலைந்துவிட்ட எரிச்சல் கண்களை உறுத்த விடுவிடென்று சன்னல் பக்கம் போனாள் நிர்மலா.

"இதோ பாருங்கள்!"

பதில் இல்லே.



# பறவைகள் பலவிதம்

'ஈயார்வி'

**தா**யும் மகனுமாய்ப் புறக்கடையில் நின்று கொண்டிருந்தார்கள்.

''ஏண்டா ஆனந்த்! நம்ம பக்கத்து வீட்டு நிர்மலாவுக்கு என்னடா குறைச்சல்? ரதிமாதிரி இருக்கிறுள். வருகிற தை மாதத்திலாவது...''

''இதோ பாரம்மா! இதுதான் 'மட்ஸ்வான்' என்கிற அன்னம். இதன் அழகுக்கு உன் நிர்மலா ஈடாக முடியுமா?'' ஆடாமல் அசையாமல் வெள்ளை வெளேரென்று தண்ணீரில் மிதந்து வரும் அன்னத்தைச் சுட்டிக் காட்டினுன் ஆனந்த். கையிலிருந்த கிளி யொன்று கீச் கீச்சென்று ஒலி யெழுப்பியது.

ராஜலட்சுமி அம்மாளுக்கு ஆத்திரம் பொங்கித் தணிந்தது. ''அப்போ அந்த அன்னத்துக்கே ஒரு தாலியைப் பண்ணிக் கட்டிப் போடு!'' என்று வெடுக்கென்று கேட்டாள்.

''கோபப்படாதே அம்மா! அந்தக் கரிச்சான் குருவி நிர்மலாவை...''

''டேய்! உன் கண் என்ன அவிந்தா போய் விட்டது? செக்கச் சிவந்து ரோஜாப்பூ மாதிரி இருக்கிறுள்... அவளைப் போய்...''

''கரிச்சான் குருவி அட்டைக் கரியாக இருக்கிறதென்று கோபம் வருகிறதாம்மா? அதன் குணம் என்ன தெரியுமா? காலை நேரத்திலே இனிமையாகப் பாடும். அம்பு போல் விர் விர் ரென்று பறக்கும். அபாரத் துணிச்சல்! தன்னைவிடப் பலமுள்ள பறவையினங்களைக்கூடத் துரத்தித் துரத்திக் கொத்தும்! உன் நிர்மலாவும் இந்த ரகம் தான்!'' என்று கூறிச் சிரித்தான் ஆனந்த்.

''நல்ல பிள்ளையப்பா நீ! சின்னஞ்சிறு பெண்; குறும்புக்காரி. அதற்கென்று இப்படியா கிண்டல் பண்ணுவது...'' ராஜலட்சுமி அம்மாள் பேசுவது அவன் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. [கேணியருகே உள்ள சிறிய ஷவர்பாத் குழாயைத் திருகி விட்டு விட்டு, பூப்போல் உதிரும் நீர்த் துளிகளில் கையிலிருந்த கிளியைக் குளிப்பாட்ட ஆரம்பித்து விட்டான்.

''பாரம்மா! பாரம்மா! இப்படிக் குளிப்பதில் கிளிகளுக்கு என்ன குஷி தெரியுமா?'' சின்னப் பிள்ளை போல் எக்காளமிட்டுக் கொண்டு அந்தக் கிளியைக் கொஞ்சத் தொடங்கி விட்டான் ஆனந்த்.

''ஐயா, பறவை ஆராய்ச்சிக்காரரே!'' நிழலாடியது போல் தெரிந்தது. கலைந்த கிராப்புடன், கையில் உருண்டை வடிவத்தில் ஒரு குருவியைத் தூக்கிக் கொண்டு சன்னலின் வழியாக எட்டிப் பார்த்தாள் ஆனந்த்.

''உங்களைத்தான்!''

''என்ன? என்ன?''

''இந்த ராத்திரி நேரத்திலாவது உங்கள் அருமைப் பறவைகளைக் கொஞ்சாதிருக்கக் கூடாதா?''

''கொஞ்சலா? சேச்சே! க்வாய்ல்! க்வாய்ல்! அதாவது காடைக் குருவி. பைட்டிங் போர்ட்! ஒன்றுக்கொன்று பிரமாதமான சண்டை!''

''சண்டையா? இங்கே என் மண்டையே உடைந்துவிடும்போ லிருக்கிறது. இந்தக் குருவிக் கூண்டுகளைப் பக்கத்திலேயே மாட்டி வைத்துக் கொள்ள வேண்டுமா? கொல்லைப் புறத்தில் கொண்டு போய் மாட்டி வையுங்களேன்...!''

''ஐயோ! என் கண்மணிகளைப் பூனைக்கு இரை கொடுக்கவா? நான் மாட்டேன். நீ வேண்டுமானல் இதோ போய்ப் படுத்துக் கொள்ளேன்!'' ஆனந்தின் தலை மறைந்து விட்டது.

நிர்மலாவுக்கு ஆத்திரத்தில் உதடுகள் துடித்தன. ஓடிப்போய்த் தொப்பென்று கட்டிலில் சாய்ந்தாள். ''அந்தப் பறவைப் பிசாசுகள் அவ்வளவு உயர்ந்த

தாகப் போய் விட்டனவா?" பொறாமையால் நெஞ்சம் குமுறியது. நெடு நேரம் வரை தூக்கமே இல்லை. புடவை சலசலக்கச் சாளரத்தின் வழியாக வீசிய இளங்காற்று அவளை அமைதிப்படுத்தும் திறனிழந்து விட்டது.

ஃ ஃ ஃ

பொழுது புலர்ந்து வெகு நேரமாகி விட்டிருந்தது. இரவில் தூக்கத்தைக் கெடுத்துக்கொண்டதால், கதிரவனின் ஒளிக் கதிர்கள் சுள்ளென்று சாளரத்தின் வழியாகப் பாய்ந்தும் நிர்மலா எழுந்திருக்கவில்லை. அங்கும் இங்குமாய் அலைபாயும் அரை குறை நினைவுகளுடன், தூக்கம் கலையாத கிறக்கத்தில் அவள் படுத்துக் கிடந்தாள்.

மணி எட்டு!

தடதடவென்று யாரோ மாடிப் படி ஏறி ஓடி வரும் ஓசை இமைகளை விரித்தது. முறையே நூற்றறுபது. இருநூறு பவுண்டுள்ள அம்மாவோ அப்பாவோ இப்படியா ஓடிவர முடியும்? நிர்மலா எழுந்து உட்கார்ந்து கண்களைக் கசக்கிக் கொண்டாள்.

மேலே ஓடிவந்த ஆனந்த் பரபரப்புடன் நாற்புறமும் விழிகளைச் சுழற்றினான்.. "வாருங்கள்!" என்று எழுந்து கொண்டாள் நிர்மலா. "யாரைப் பார்க்கிறீர்கள்? அம்மாவையா? அப்பாவையா? அம்மா அடுப்படியில் இருப்பாங்க. அப்பா வாசலில் பேப்பர் படித்துக் கொண்டிருப்பாரே இந்த நேரத்துக்கு!"

பேசாமல் தலையை ஆட்டிவிட்டு ஆனந்த் சுற்றிலும் நோட்டம் விட்டான். ஓடி வந்த இரைப்பு அடங்கவில்லை.

"என்னைப் பார்க்க வந்தீர்களா? இங்கே யாரும் இல்லை!"

"உள்ளான்!.... உள்ளான்! இங்கே ஓடி வந்து விட்டது. பார்த்தாயா நிர்மலா?" இண்டு இடுக்கெல்லாம் புகுந்து வெளிவந்தான் ஆனந்த். நிர்மலாவுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்து. "உள்ளானுமில்லை, கிள்ளானுமில்லை இங்கே!"

"பொய் சொல்லாதே! சன்னல் வழியாய் இங்கேதானே ஓடி வந்தது..." என்ற ஆனந்த் மேசையின் மீதிருந்த கைப்பையைக் குடைந்தான்.

"அதென்ன, கைப் பையை யெல்லாம் ஆராய்கிறீர்கள்?"

"திறந்து கிடக்கிறதே. வந்து புகுந்திருந்தால்? அது சின்னக் கோழிக் குஞ்சை விடச் சின்னதாகத்தானே இருக்கும்..." என்று நிலைப் பேழையில் அடுக்கி வைத்திருந்த புடவை, ஜாக்கெட்டுகளை யெல்லாம் எடுத்து வீசி அமர்க்களப் பண்ணினான் ஆனந்த்.

"இதோ பாருங்க! அங்கேயெல்லாம் போயிருக்காது. அதை இதை எடுத்துப் போட்டு அலங்கோலப்படுத்தாதீர்கள்?"

திரும்பி நோக்கிய ஆனந்தின் முகத்தில் மகிழ்ச்சிக் களை பரவியது. ஒளி மின்னும் கண்களில் குறும்பு தோன்றச் சிரித்துக் கொண்டே, "ஓ! மை டார்லிங்!" என்று கையை நீட்டிக் கொண்டு நிர்மலாவை நோக்கி ஓடி வந்தான்.

நிர்மலாவுக்கு மின்சாரம் பாய்ந்தது மாதிரி விறுவிறுத்தது. வரும் வேகத்தில் கட்டிக் கிட்டிப் பிடித்து விடுவானோ என்று திகைப்புடன் விலகிக் கொண்டாள். அருகே ஓடிவந்த ஆனந்த் அப்போதுதான் வந்து ஓசைப்படாமல் நிர்மலாவின் தோளில் தொத்திக் கொண்டிருந்த அந்த உள்ளான் குருவியைப் பற்றி இழுத்தான். அந்தக் குருவியோ நிர்மலாவின் ஜாக்கெட்டை விரல்களால் இறுகப் பிடித்துக் கொண்டு வர மறுத்தது.

"ஐயய்யோ! இந்தச் சனியன் என்மேலா வந்து தொற்றிக் கொண்டது! சீக்கிரம் எடுங்கள்!" நிர்மலா முகத்தைச் சுளித்தாள். "உஸ்...உஸ்...!"

"என் கண்ணல்ல! தங்கமல்ல! வந்து விடு!" நிர்மலாவின் தோளைக் கூசாமல் தொட்டுக் குருவியைப் பற்றி இழுத்தான். ஆனந்த். அந்த எமக் குஞ்சு தன் ஊசி விரல்களால் ஜாக்கெட்டைக் கோத்துப் பிடித்திருந்தது. ஆனந்த் 'பலமாக இழுத்தான்.

"டர்ர்ர்ர்......"

உள்ளங்கை அகலத்துக்கு ஜாக்கெட், தோள் பட்டையில் கிழிந்து தொங்கவும் பளிச்சிட்ட தங்க நிற மேனியைச் சட்டென்று துணியை இழுத்து மறைத்துக் கொண்டாள். நிர்மலா. "அடப் பாவிக் குருவியே! நீ நாசமாய்ப் போக!... புத்தம் புது ஜாக்கெட்டை இப்படி....." ஆத்திரத்தில் குமுறிக் கொண்டு வந்த சொற்கள் அடைபட்டு விட்டன.

அப்போதுதான் படியேறி முடித்திருந்த நிர்மலாவின் அப்பா, "என்ன தம்பி அது?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே வந்தார்.

"இதுவா மாமா! இதுதான் உள்ளான் என்பது. தோட்டத்தில் வந்தெல்லாம் கூத்தடிக்குமே... இத்தனை சின்னதாக இருக்கிறதே என்று பார்க்காதீர்கள். ரஷ்யா, சைபீரியா, ஐரோப்பா முதலிய நாடுகளிலிருந்தெல்லாம் அது பறந்து வருகிறது தெரியுமா?" என்று தன் பறவை ஞானத்தைக் காட்டிக் கொண்டு ஆனந்த் கீழே இறங்கிப் போய் விட்டான்.

ஆத்திரம் படிப்படியாக வளர்ந்து நிர்மலாவைப் பொறுமை இழக்கச் செய்து விட்டது. "என்ன ஆண்பிள்ளை இவர்! பொழுது விடிந்து பொழுது போனால் இனி, குருவி, காக்காய், ஆந்தை, கோட்டான், சாவுக் குருவி என்று இந்த எழவையெல்லாம் கட்டிக் கொண்டு அழவேண்டுமா? சேச்சே! இருக்கட்டும். எத்தனை நாளைக்கு இந்தக் கூத்து நடக்கிறது என்று பார்த்துவிடுகிறேன்..." என்று கறுவிக் கொண்டாள்.

ஃ ஃ ஃ

அன்று மாலை படபடப்புடன் புறக்கடையில் நின்று கொண்டிருந்த நிர்மலாவிடம்.

# பகல் இரவு பாராமல்

மாடல் 5-A 46
6 டியூப் 4-பாண்ட்
ஏஸி செட்
பலித்த குரல் கட்டுப்பாடு
ரு. 350
உற்பத்திவரி ரூ. 40.
வரி தனி



மாடல் BZ - 480
(Portable Set)
9-டிரான்ஸிஸ்டர் 4-பாண்ட்
நுட்பமான ஒலியமைவுகள்
ரு. 375
உற்பத்திவரி ரூ. 40.
வரி தனி





மாடல் BXS-338
(Portable Set)
8-டிரான்ஸிஸ்டர் 2-பாண்ட்
குரல் கட்டுப்பாடு
ரு. 225
உற்பத்திவரி ரூ. 20
வரி தனி



மாடல்-7A 57
2 குரல் கட்டுப்பாடுகள்
5.பாண்ட் 7-டியூப்
3 ஒலிபெருக்கி ஹைபிடிலிட்டி
ரு. 575 ஏஸி
உற்பத்திவரி ரூ. 93.34
வரி தனி

## ஷார்ப் ரேடியோ உங்கள் வாழ்க்கைக்கு இன்ப மூட்டுகிறது

சக்திவாய்ந்த, நம்பகமான ஷார்ப் ரேடியோக்கள் எல்லா குடும்பத்தினராலும் விரும்பி வாங்கப்படுகிறது. ஒவ்வொரு ரேடியோ அபிமானியும் பகுத்துணர்ந்து விரும்பி வாங்குவதாகும்.

மிதமான விலையில், கவர்ச்சியான தோற்றமும் உள்ளவைகளாக இருப்பதால், அவைகள் அழகுக்கும், அதோடு திறமையாக இயங்குவதற்கும், வெகுவாகவே விரும்பி வாங்கப் படுகின்றன.

தரம்மிக்க பொருள்களைத் தயாரிப்பதில் உலகப் புகழ்பெற்ற ஜப்பானிய நாட்டு ஹயகாவா எலக்டிரிக் கம்பெனியாரின் தொழில் கூட்டுறவினால் ஷார்ப் ரேடியோக்கள் செய்யப்படுகின்றன என்பதைக் கவனியுங்கள்.




இந்தியன் பிளாஸ்டிக்ஸ் லிட், லோட்டஸ் ஹவுஸ், பம்பாய்-1

ajanta JR-465

அவன் அம்மா பரக்கப் பரக்க ஓடி வந்தாள். ''அடியே, நிர்மலா...! அந்தப் பிள்ளை ஆனந்துக்கு என்னமாய்க் கிழி, ரத்தக் காயம் பட்டு.... ஐயோ, ஓடிப்போய்ப் பாரேன்!'' என்று பதறினாள்.

''கிழியா, ரத்தமா? ஐயோ!'' நிர்மலா விழுந்தடித்துக் கொண்டு பக்கத்து வீட்டுக்கு ஓடுகிறாள்.

கிழே தைலம் பட்ட கையைக் கழுவிக் கொண்டிருந்த ராஜலட்சுமி அம்மாளை அவள் கவனித்ததாகத் தெரியவில்லை. இரண்டிரண்டாய்ப் படிகளைத் தாண்டி மேலே ஓடுகிறாள். மாடி அறையில்தான் ஆனந்தைப் படுக்கப் போட்டிருந்தார்கள். இடக் கையில் வெள்ளைத் துணியால் பெரிய கட்டு! அதையும் மீறிக் கொண்டு ஊறி நிற்கும் இரத்தக் கறை. மார்பில் பிறுண்டியதைப் போல வரி வரியாய்க் கிறல்கள். இரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

நிர்மலாவின் கண்களில் நீர் ததும்பி விட்டது. பக்கத்தில் அமர்ந்து, சிவந்திருந்த பகுதியில் விரல்களால் நீவிவிட்டாள். ஸ்பரிசம் பட்டதும் மூடியிருந்த கண்களை மலர்த்தினான் ஆனந்த். ''நிர்... நிர்மல்!...நீயா?''

நிர்மலாவுக்கு அழுகை பீறிக்கொண்டு வந்தது. ''நிர்மலாதான். இந்தப் பாவிதான் என்றால்தானே...''

''உன்னால் ஒன்றுமில்லை. என்னால்தானே நிர்மலா... இந்த மூர்க்கக் குணம் படைத்த 'மக்கா' ஜாதிக் கிளிகளை வாங்கி வளர்த்தது என் தப்புத்தானே? எப்படியோ பூனையொன்று அறைக்குள் நுழைந்து விட்டது. போயும் போயும் அது மக்கா கிளி இருந்த கூண்டை அடித்துத் திறந்ததும், கொலை விழுவது போல் காட்டுக் கத்தலாய் அந்தக் கிளி கத்தியது. ஓசை கேட்டு கூண்டுக் கருகில் ஓடிவந்தேன். பூனை விழுந்தடித்துக் கொண்டு மேலே விழுந்து பிறுண்டித் தள்ளி விட்டு ஓடிவிட்டது. கூண்டை விட்டு வந்து விட்ட அந்த ராட்சசக் கிளியோ சடசடவென்று இறக்கைகளை அடித்துக் கொண்டு, பாய்ந்து பாய்ந்து கையைக் கொத்திக் குதறிவிட்டுப் பறந்து விட்டது. அப்பப்பா! நல்ல தண்டனைதான்!... நீ ஏன் அழுகிறாய், நிர்மலா?'' ஆதரவுடன் வலக்கையை உயர்த்தி அவள் கண்களை ஆனந்த் துடைத்து விட்டான்.

நிர்மலா விசித்து விசித்து அழத் தொடங்கி விட்டாள். ''இந்தப் பாவி... நான்...நான்தான்... சொன்னால் மன்னிப்பீர்களா?... நான்தான் பொறாமையில் அந்தக் கிளிகளைத் தொலைத்துக் கட்டக் கோடி விட்டுப் பூனையைக் கொண்டு வந்து ஏணி வைத்து ஏற்றி உங்கள் சன்னல் வழியாக விட்டுவிட்ட பாவி என்றால்... என்றால்... உங்களுக்கு..'' கண்ணீர் விட்டவாறே ஆனந்தின் கையை வருடுகிறாள் நிர்மலா.

''அதற்கா அழுகிறாய்? நீ செய்த காரியம் தானே நமக்குள் இந்த நெருக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது. அந்த 'மக்கா' சனியன்



மில் சொந்தக்காரரின் பெண் (பெருமையாக): எங்க பங்களாவிலே காப்பிக் கொட்டை வறுக்க ஒரு மெஷின், அரைக்க ஒரு மெஷின். இட்லிக்கு மாவரைக்க ஒரு மெஷின், தோசை வார்க்க மெஷின்...

தோழி: ''அது சரி, அங்கே நிற்பது உன் கணவர்தானே?''

''ஆமாம்! எனக்குப் புடவை, ஜாக்கெட் வாங்கித் தரும் மெஷின்!''

மெக்காவுக்கே போய்த் தொலையட்டும். அழாதே நிர்மலா! என் இதயக் கூண்டில் உன்னைத்தான் அடைத்து வைத்திருந்தேன் என்பது உனக்குப் புரியாதா? உன்னைச் சீண்டி வேடிக்கை பார்க்க நினைத்ததும் நீ தவறாகப் புரிந்து கொண்டாய். சரி, போகட்டும்!... நிர்மல்!... நிர்மலா! என்னை அத்தான் என்று ஒரு முறை கூப்பிடேன்...ம்!''

''அத்தான்! அத்தான்!''

திடுக்கிட்ட நிர்மலா மருட்சியுடன் கண்களைச் சுழற்றினாள். யாரது அவளுக்குப் போட்டி?

மூலைக் கூண்டிலிருந்து 'நெல்டார்' எனப்படும் வெள்ளைக் கிளியொன்று தன் மஞ்சள் கொண்டையை ஆட்டிக் கொண்டு 'அத்தான்! அத்தான்!' என்று கிறீச்சிட்டது.

குபீரென்று சிரித்தாள் நிர்மலா!

''பார்த்தாயா? கிளிகூட... ம்... அத்தான் என்று கூப்பிடு!'' காதருகில் ஆனந்த் கிசுகிசுத்தான்.

''அத்....தான்!'' என்ற வண்ணம் அவன் நெஞ்சில் அடைக்கலமாகி விட்டாள் நிர்மலா. ''அத்தான்! இந்தக் கிளியையும் வளர்க்க மாட்டீர்களா?''

''தை மாதம் வரட்டும் நிர்மல்!'' என்ற ஆனந்த். ''நிர்மல்! நீ கிளியல்ல. கிளி பெரும்பாலும் ஏமாற்றும் குணமுள்ளது. நயவஞ்சகமானது; நீ கூட்டுப் புறா! என் காதல் புறா!'' என்று ஆசையுடன் அவள் கூந்தலை வருடினான்.

அவளுடைய
நல்வாழ்வு
உங்கள் பொறுப்பு-
காத்துப் பேணுவது
உங்கள் கடமை

ஒவ்வொரு தந்தையின்
கனவையும் நனவாக்க
தக்கவழியில்
உறுதி தருகின்றது
ஆயுள் இன்சூரன்ஸ்.
மகன் உயர் கல்வி பெற்று
வாழ்வில் உயர,
மகள் மணந்து மகிழ்வுடனிருக்க-
தனதருமை மக்கள் தாம்
விரும்பும் நற்பணியிலமர்ந்து
நல்வாழ்வு பெற,முதுமையில்
தானும் தன் துணைவியும்
முழு மகிழ்வுடனிருக்க



ஆயுள் இன்சூரன்ஸ் போல
ஆதரவு தருவது எதுவுமே இல்லை



அனலாகக் கொதித்த அவன் நெற்றியை அவளுடைய தளிர் விரல்கள் இலேசாக வருடிக் கொடுத்தன. தலைவலி இருந்த இடம் தெரியாமல் பறந்துவிட்டது என்று கதைகளில் படிக்கிறோம். அப்படி ஒரு மனைவியோ காதலியோ இல்லாத துரதிர்ஷ்டசாலிகளுக்குத் தலைவலியை இதமாகப் பிடித்துவிடக்கூடிய கருவி கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது! இது மேற்கு ஜெர்மனி கண்காட்சி ஒன்றில் இடம் பெற்றிருந்தது. இக் கருவியைப் பயன்படுத்தினால் இதமாக இருப்பதுடன் மண்டை வலுவாகவும் ஆகுமாம்! இனி தலைவலி மருந்துகளுக்குப் பிடித்தது தலைவலி என்று சொல்லலாம்தானே! — யூ. பி. எஸ்.





## விண்ணப்பம் என்னவென்றால்....?

''முனிசிபல் கமிஷனர் அவர்களுக்கு, ஏழாவது வார்டு, வரசித்தி விநாயகர் கோயில் தெரு, 37ம் நம்பர் வீட்டில் இருக்கும் தம்புசாமி தாழ்மையாகச் செய்து கொள்ளும் விண்ணப்பமாவது:

இப்பவும் நேற்றுக் காலை முதல் எங்கள் வீட்டுக் குழாயில் தண்ணீர் கொட்டியபடி இருக்கிறது. என்ன முயன்றும் குழாயை மூடவோ, தண்ணீர் கொட்டுவதை நிறுத்தவோ முடியவில்லை.... வீடு முழுவதும் தண்ணீரில் மிதக்கிறது. எனவே, உடனடியாக ஆட்களை அனுப்பிக் குழாயை ரிப்பேர் செய்யும்படி வே....ண்....டு....''

''களுக்... களுக்.... களுக்...

''பிளப்... பிளப்!...''



## என்ன செய்வது?

அவன் அழுக்குச் சட்டையும், தாடி மண்டிய முகத்தையும் வைத்துக் கொண்டு அந்தத் தொடர் வண்டியில் ஏறிக்கொண்டான். சக பிரயாணிகளுக்குத் தொந்தரவில்லாதபோதுதான் புகை பிடிக்க வேண்டும் என்ற வேண்டுகோள் எழுதப்பட்டிருப்பதை அவன் பொருட்படுத்தவில்லை. புகை பிடித்தான். தன் கர்த்தபக் குரலில் காது கிழியப் பாடவும் செய்தான். கூடப் பயணம் செய்பவரான அந்தப் பெரிய மனிதர் அவனைக் கண்டித்தார். அடங்காமற் போகவே 'நான் யார் தெரியுமா?' என்று கூறி விசிட்டிங் கார்டை எடுத்துக் காட்டினார். அவன் அதை அலட்சியமாக வாங்கிப் பார்த்துவிட்டுச் சட்டைப் பையில் வைத்துக்கொண்டான், அப்புறமும் அவன் கொட்டம் அடங்குவதாகக் காணோம்.

நிலையத்தில் வண்டி நின்றதும் அந்தப் பெரிய மனிதர் கார்டிடம் புகார் செய்தார். அவர் அவனை விசாரிக்க வந்தபோது தாம் வைத்திருந்த விசிட்டிங் கார்டை எடுத்துக் காட்டினான். கார்டு விலகிக்கொண்டார். அப்புறம் தனியிடத்தில் போய் அந்தப் பெரிய மனிதரிடம் சொன்னார்: 'நானென்ன சார் செய்வது? அவர் இந்த நாட்டின் இரயில்வே மந்திரியாக இருக்கிறாரே!'

- இரா. சண்முகம்



# காதல் இல்லையேல் காதல்






**காட்சி 34 — நாதன் வீடு**

(நாதன் வெளியே புறப்படத் தயாராகிக் கொண்டிருக்கிறார். சுரேஷ் உள்ளே வருகிறான்.)

சுரே: நமஸ்காரம் சார்!

நாதன்: நமஸ்காரம்!... அட! நீயா?... வாப்பா! என்ன சுரேஷ் இவ்வளவு தூரம்?

சுரே: நிர்மலாவைப் பார்க்கணும் சார்!

நாத: கூப்பிடறேனே (உரக்க) நிர்மலா!

நிர்மலா (ஓடி வந்து): ஹலோ சுரேஷ்! இது இன்னு! நீ எப்போ வந்தே?

நாத: உன்னைப் பார்க்கத்தாம்மா வந்திருக்கான்.

நிர்: வாட் ஈஸ் தி மேட்டர் சுரேஷ்? ஏன் ஒரு மாதிரியா இருக்கே?

சுரே: ஒண்ணுமில்லே நிர்மலா. எப்படியெல்லாமோ கஷ்டப்பட்டு என் பிரெண்டு நாகராஜன் கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணைப் பார்த்தேன். இப்போ ஒரே தகராறுப் போயிடுத்து.

நிர்: ஏன் சாஸ்திரிகள் யாரும் கிடைக்கலியா? இந்த பாம்பேலேயே இதுதான் தொந்தரவு!

சுரே: உன்கிட்டே போய்ச் சொல்ல வந்தேனே, என்னுடைய மூளையைச் செருப்பாலே அடிக்கணும்.

நிர்: அது அப்புறம் பார்த்துக்கலாம். கல்யாணம் ஏன் தகராறு பண்ணுது?

சுரே: கல்யாணம் தகராறு பண்ணலே... சபேசன்தான் தகராறு பண்றார்.

நாத: சபேசனு? ஏன் ...அவன் ரொம்ப நல்லவனுச்சே தம்பி!

நிர்: நல்லவனு இருந்தா தகராறு பண்ண மாட்டாங்களா?

நாத: கண்டிப்பா பண்ண மாட்டாங்க.

நிர்: நீங்க தகராறு பண்ணுவீங்களா?

நாத: எதுக்கு?

நிர்: எனக்கு ரொம்ப வெட்கமா இருக்குது!

நாத: எனக்குத் தெரியும் நிர்மலா. இதோ பார் சுரேஷ்! நான் எதையும் பிளெய்ன்னு பேசற ஆள். கேக்கறதுக்குப் பதில் சொல்லு. என் மகளைக் கல்யாணம் பண்ணிக்க உனக்குச் சம்மதமா?

சுரே: இது என்ன சார் கேள்வி? எனக்குப் பூர்ண சம்மதம்.

நாத: ஆனு ஒரே ஒரு கண்டிஷன்.

நிர்: என்னப்பா கண்டிஷன்?

நாத: நீ ஏன் பதறுகிறே? சுரேஷ்! நீதான் என் பிஸினஸை மேற்கொண்டு கவனிக்கணும். அதுக்கு ஒத்துக்கிறியா?

நிர்: சரின்னு சொல்லு சுரேஷ்.

சுரே: சரி ஸார்.

நாத: வெரி குட்... இப்ப இந்தக் கல்யாணம் ஸெட்டில்ட்! உன்னைப் பத்தி நான் எல்லாம் உங்க ஆபீஸிலே விசாரிச்சுட்டேன், சுரேஷ்! அதுக்கப்புறம்தான் தைரியமா உன்னைக் கேட்டேன்.

சுரே: ஓ!

நாத: உங்கப்பா, அம்மா...

சுரே: மெட்ராஸ் பக்கத்திலே ஒரு கிராமத்துலே இருக்காங்க. அவுங்களுக்கு ஏற்கனவே இந்த விஷயத்தைப் பத்தி எழுதி, 'பர்மிஷன்' வாங்கிட்டேன்.

நாத: பலே! இனிமே இன்விடேஷன் கார்டுதான் அனுப்புவியா? நானே போய் அவங்களைப் பார்க்கிறேன்.

நிர்: தாங்க்ஸ் அப்பா!

சுரே: நிர்மலா... நான் வந்த காரியத்தை மறந்துட்டேனே! அந்த ஆயிரத்தைந்நூறு ரூபாய் பணம் உங்கிட்ட இருக்கே அதைத் தரியா?

நிர்: எது, உண்டி கலெக்ஷன், அன்று நீ கொடுத்த பணம்?

சுரே: யெஸ். அதுதான்.

நிர்: இதோ போய்க் கொண்ட் வரேன்.

(உள்ளே போகிறாள்.)

நாக: ஏம்பா! உன் பிரண்ட் கல்யாணத்துலே சபேசன் என்ன தகராறு பண்றான்?

சுரே: ஒண்ணும் இல்லே ஸார்... என் ஃபிரெண்ட் மாலதியைக் கல்யாணம் பண்ணிக்க இரண்டு மாசத்திலே எப்படியாவது பத்தாயிரம் ரூபா சம்பாதிக்கணும்னு மாலதி பித்தப்பா கனகசபை கண்டிஷன் போட்டார். அதுக்கு நானும் நாகராஜனும் ஒரு திட்டம் போட்டோம். அதுலே சபேசனைக் கொஞ்சம் ஏமாத்த வேண்டியதாப் போச்சு... இப்ப என் ஃபிரெண்ட் சாகலே, உயிரோடு இருக்கான்னு நிரூபிக்கவே சபேசன் உதவி வேண்டியிருக்கு. அவரோ முறைக்கிறார்! என்ன பண்றதுன்னு தெரியலே.

நாக: எனக்கொண்ணும் புரியலே! ஒருத்தன் சாகலேன்னு நிரூபிக்கிறதுலே என்ன கஷ்டம்? நேரே கொண்டு போய் நிறுத்தினால் தெரியாதா? இப்ப, நான் சாகலேன்னு எப்படி நிரூபிக்கிறது? நான் நேரே வந்து நிக்கணும். அவ்வளவுதானே?

சுரே: ஆனா நீங்க உங்க தம்பியாயிருந்தா?

நாக: நான் எப்படி என் தம்பியா இருக்க முடியும்?

சுரே: என் ஃபிரெண்ட் நாகராஜன், இப்ப அவனுக்கே தம்பியாகத்தான் இருக்கான்.

நாக: வாட்! அதெப்படி அது? ஆல்ரைட்! இது ஏதோ பெரிய கன்ப்யூஷன்! நான் வேணுமானால் சபேசன் கிட்டப் போய்ச் சொல்லிப் பார்க்கட்டுமா?

சுரே: ப்ளீஸ்! செய்யுங்க ஸார்! அதுக்காகத்தான் ஸார் நான் இங்கே வந்தேன்.

நாக: வெரி குட்... நீ சபேசன் வீட்டுக்குப் போ. நான் உன்னை அங்கே வந்து பார்க்கிறேன். இப்ப கொஞ்சம் நம்ப கம்பெனி வரையில் போயிட்டு வந்து விடுகிறேன். (போகிறார்.)

நிர் (உள்ளிருந்து வந்து): இந்தா சுரேஷ், இந்தக் கவர்லே நீ கொடுத்த பணம் கரெக்டா இருக்கு!

சுரே: தாங்க்ஸ் நிர்மலா... நான் வரட்டுமா?

நிர்: இன்னிக்குத்தான் நம்ம கல்யாணம் நிச்சயமாயிருக்கு. நீ இப்படி 'உம்'னு இருக்கியே!

சுரே: இன்னும் நாகராஜன் கல்யாணம் நிச்சயம் ஆகலியே. அவன் கல்யாணப் பந்தல்லேதான் நம்ம கல்யாணமும் நடக்கணும் நிர்மலா.

நிர்: ஏன் செலவு மிச்சம்னு பார்க்கிறியா?

சுரே (சிரித்து): நான் வரேன். போய் நாகராஜனைப் பார்க்கணும்.

நிர்: டா...டா, சீரியோ!...

## காட்சி 35 — சுரேஷ் அறை

சுரே: நாகு... சபேசன் வீட்டுக்குப் போகலாம் வரியா?

நாக: இனிமேல் அங்கே போய் என்னடா செய்யறது?



சுரே: இந்த மாதிரி தைரியத்தை இழந்துட்டா ஒரு காரியத்தையும் சாதிக்க முடியாது.

நாக: இத்தனை நாள் தைரியமா இருந்து எதைடா சாதித்தோம்?

சுரே: ஏன்? கனகசபை சொன்னபடி இரண்டே மாசத்துலே பத்தாயிரம் ரூபாயை நீ சம்பாதிச்சுட்டியே?

நாக: இப்ப அந்தப் பணத்தை வெச்சுக்கிட்டு என்ன பண்ணறது? சுரேஷ்! இந்தப் பணமே எனக்கு வேண்டாண்டா.... மாலதி நான் சாகலேன்னு தெரிஞ்சுக்கிட்டா அதுவே எனக்குப் போதும்!

சுரே: அதைத்தான் எப்படிச் செய்யறதுன்னு புரியலே. நீ மாலதி கிட்டக் கொடுத்த கவரிலேயும் வெறும் காகிதமாப் போச்சு. என் லெட்டரையும் இந்தச் சபேசன் கிழிச்சுப் போட்டுட்டார். இப்ப என்ன செய்யறது?

நாக: 'என்ன செய்யறது'ன்னு நீயே கேக்கற நிலைமைக்கு வந்தாச்சா? டேய் சுரேஷ்! என்னைக் கைவிட்டுடாதேடா!



சுரே: நாகு! உன் கல்யாணம் நடந்தாத்தாண்டா என் கல்யாணம். கவலைப்படாதே.

நாக: இப்ப எனக்கே நான் ஸெத்துப் போயிட்டேனு, உயிரோட இருக்கேனு என்கிற சந்தேகம் வந்துடுத்து. இதைவிட நான் ஒரு வழியா இறந்து போயிருந்தாலே தேவலே!

சுரே: சே... சே... அப்படியெல்லாம் பேசாதே. உன் கல்யாணத்தோட தான் என் கல்யாணமும் நடக்கணும்.

நாக: மாலதி இனிமேல் என்னை எப்படிடா கல்யாணம் பண்ணிக்கச் சம்மதிப்பா?

சுரே: நாகு! இப்ப என் கல்யாணமும் உன்னை நம்பி இருக்கு. எனக்கு ஒரு ஐடியா தோன்றுகிறது!

நாகு: என்ன?

சுரே: நீ மாலதியை மறந்துவிட்டு வேறே யாரை யாவது கல்யாணம் பண்ணிடு. நானும் என் கல்யாணத்தை முடிச்சுப்பேன்.

நாக: என்னடா விளையாடறியா?

சுரே: பின்னே என்னடா! அப்போ பிடிச்ச மூக்காலே அழறே! மேலே நடக்க வேண்டியதைக் கவனிப்போம்.

நாக: என்ன செய்யணும் சொல்லு. செய்வோம்.

சுரே: இன்னிக்கு ராத்திரி துணிஞ்சு ஒரு வேலை செய்ய வேண்டியது.

நாக: என்ன? நேரே சபேசன் கால்லே விழுந்து மன்னிப்புக் கேட்க வேண்டியது. அவர் நடந்ததையெல்லாம் 'க்ளீனா'ச் சொல்லி மாலதிக்கு எக்ஸ்பிளெயின் பண்ணிடுவார்! அதுதானே?

சுரே: மடையன்! வடிகட்டின மடையன்! அவர் தான் ஒரேயடியா முறைச்சுக்கிட்டு இருக்காரேடா?

நாக: உன் பிளான்தான் என்ன? சொல்லு.

சுரே: கவனமாகக் கேள். இன்னிக்கு ராத்திரி மணி பன்னிரண்டு.

நாக: டேய்! மணி பன்னிரண்டுன்னு அது இன்னிக்கு ராத்திரியா, நாளைக் காலையா?

சுரே: உஸ்ஸ்..நம்ம ரிஸ்ட் வாட்ச்லே மணி பன்னிரண்டு!... டங்...டங்...டங்...

நாக: என்னடா அது?

சுரே: மணி அடிக்கிறது.

நாக: ரிஸ்ட் வாட்சிலே எப்படி மணி அடிக்கும்?

சுரே: இது ரயில்வே ஸ்டேஷன்லே அடிக்கிறது. நம்ம காதிலே விழும். டங்...டங்...

நாக: பன்னிரண்டு தடவை அடிக்கப் போறியா?

சுரே: ஏன்?

நாக: இல்லே, ரயில்வே ஸ்டேஷன் கடிகாரம் பன்னிரண்டு மணிக்குப் பதினாறு தடவை அடிக்கும்.

சுரே: ஷட் அப்! மணி பன்னிரண்டு...!

நாக: எப்படிடா? நீ ஆரம்பிக்கச்சே மணி பன்னிரண்டுன்னு இப்பக் குறைஞ்சது பன்னிரண்டரை ஆகியிருக்குமே! நீ டங் டங் சொல்றதுக்கே அரை மணி ஆகியிருக்குமே!

சுரே: ஸ்ஸ்... நம்ம சபேசன் வீட்டிலேயே ஒளிஞ்சுக்கிட்டு இருந்து சரியா பன்னிரண்டு மணிக்கு அவர் ரூமுக்குப் போக வேண்டியது. அவரை ரெண்டு பேருமா கையிலே கத்தி வெச்சுக்கிட்டுப் பயமுறுத்த வேண்டியது.

(பக்கத்திலிருக்கும் மேஜையிலிருந்து கத்தியைக் கையில் எடுத்துக் கொள்கிறான்.)

நாக: அய்யய்யோ!

சுரே: அப்படின்னு அவர் கத்துவார்.

நாக: இல்லேடா நான் கத்துவேன்!

சுரே: கேள் மேலே!... உடனே நான் அவரை மிரட்டுவேன். "மிஸ்டர் சபேசன்... ஏன் என் லெட்டரைக் கிழிச்சுப்போட்டீங்க?"

(சுரேஷ் தன்னை மறந்து கத்தியை நாகுவின் கழுத்துக்கு நேரே பிடிக்கிறான்.)

நாக (பயந்து): இனிமே இல்லே.

சுரே: எல்லா உண்மையையும் அப்படியே மாலதிகிட்டச் சொல்லணும். தெரிஞ்சுதா?

நாக (நடுங்கி): தெரியுது தெரியுது...

சுரே: ஏதாவது ஏடாகூடம் பண்ணினீங்க — ஒரே இழுப்பு — சதக்! சதக்!

நாக (அலறி) ஆ...ஊ!....

சுரே: இதே மாதிரிதான் அவர் நடுங்குவார். அவரே மாலதிகிட்ட எல்லா உண்மையையும் கக்கிடுவார்.

நாக: நீ அவரை மிரட்டறப்போ நானும் பக்கத்துலே இருக்கணுமா?

சுரே: கண்டிப்பா இருக்கணும்.

நாக: அப்புறம் அவர் உண்மையைக் கக்கறதையும் நான் பார்க்க முடியாது, மாலதியையும் கல்யாணம் பண்ணிக்க முடியாது.

சுரே: ஏண்டா?

நாக: நீ மிரட்டற மிரட்டல்லே நான் முதல்லே செத்துப்பூடுவேன்! சுரேஷ்! இதென்னடா பைத்தியக்கார யோசனை?

சுரே: இதை விட்டா எனக்கு வேறே வழி தோணலே.

நாக: இது நடக்கும்னு நீ நினைக்கிறியா?

சுரே: நடக்குமா நடக்காதான்னு யோசிக்கிற நிலைமையிலேயா நாம இருக்கோம்? நடக்குமோ, நடக்காதோ செஞ்சு பார்த்துட வேண்டியது. அப்புறம் கடவுள் விட்ட வழி.

நாக: நிஜத் திருடங்கன்னு நினைச்சுக்கிட்டு நம்மை அடிச்சுப் போட்டுட்டாங்கன்னு என்னடா செய்யறது?

சுரே: கடவுள் விட்ட வழி!

நாக: நாம ஜெயிலுக்கே போனாலும் போக வேண்டியதுதான்!

சுரே: கடவுள் விட்ட வழி!

நாக: கடவுள் விட்ட வழியிலே நீ போ. நான் இங்கேயே இருக்கேன்.

சுரே: நீ இங்கேயே இருந்தா ...பாக ராஜனாகவே இருக்க வேண்டியதுதான். நாக ராஜனா மாற ஒரே ஒரு வழி...

நாக: கடவுள் விட்ட வழிதானா? உம்! சுரேஷ், உன்னை மாதிரி உயிர்த் தோழனைப் பார்க்க முடியாதுடா! என்னை முதல்லே சாகடிக்கச் சித்தப்பிரமை பிடிக்க வெச்சே. நாற்காலியிலே கட்டிப் போட்டே. இப்போ ஜெயிலுக்கு அனுப்பப் பிளான் போடறே உம்... உன் இஷ்டம்.

சுரே: ஏண்டா கவலைப்படறே... நீ மாட்டிக்கிட்டு ஜெயிலுக்குப் போனா நானும் உன் கூடத் தானேடா வரப் போறேன்!

நாக: அங்கேயும் என்னை விட மாட்டியா?

(தொடரும்)




காலையிலே ஐந்துமணி, கண்மலரும் வேளையிலே
உலகமெலாம் துடித்தழவே ஒருசேதி காதில்விழப்
படுத்திருந்த குழந்தைகளைப் பரபரப்பாய் நானெழுப்பித்
துயர்ச்செய்தி சொன்னதுமே, துடிதுடித்தே அவர்அழுதார்
கண்மலர்ந்த பிள்ளைகளின் கண்கள்குள மாயிடவே,
என்செய்வார்? சிலையானார்; இடிவிழுந்த நிலையானார்
இருள்விலகும் நேரமதில் இச்செய்தி வந்ததனால்,
இருள்மீண்டும் சூழ்ந்ததுவே, இவ்வுலகில் எங்கணுமே!

நேசக்கரம் நீட்டி, நெஞ்சகத்தே அன்பூட்டி,
பாகிஸ்தான் தலைவரது பகையெண்ணம் தனையோட்டி.
சோவியத்துப் பிரதமரின் துணைகூட்டித் தாஷ்கண்டில்
ஒப்பந்தம் ஒன்றதனை உருவாக்கிக் கையெழுத்துப்
போட்டதனைக் கேட்டோமே; பூரித்துப் போனோமே
சாந்திக்கு வித்திட்ட சாஸ்திரியார் வெற்றிதனை
வானொலியில் கேட்டோமே; மகிழ்ச்சிமிகக் கொண்டோமே

மண்அதிர அணிஅணியாய் மக்களெலாம் நடைநடக்க,
விண்அதிரும் வாழ்த்தொலிகள் மேதினியில் எதிரொலிக்க
மாலைகளும் செண்டுகளும் மலைமலையாய்க் குவிந்திருக்க
வெற்றியுடன் திரும்பிடுவார் வீரரென நினைத்தோமே
வெற்றுடல்தான் வந்ததய்யோ!வேதனையைத் தந்ததய்யோ

கங்கைக் கரைதனிலே காசிப் பதியருகே
சின்னஞ் சிறுஊரில் சிறுகுழந்தை யாயுதித்தார்
பாரினிலே வந்துதித்துப் பதினெட்டே மாதங்கள்
ஆயினவாம்; அதற்குள்ளே அருமைமிகு தந்தையினைப்
பறிகொடுத்தார் லால்பகதூர், பாரதமும் அவ்வாறே
பிரதமராய் சாஸ்திரியைப் பெற்றபெரும் பேறதனைப்
பதினெட்டே மாதத்தில் பறிகொடுக்க நேர்ந்ததுவே !

அக்டோபர் இரண்டினிலே அவதரித்தார் காந்திமகான்
அத்தேதி தனிலுதித்தார் அருமைமிகும் லால்பகதூர்
பிறப்பினிலே மட்டுமன்று; பேச்சினிலும் செயல்தனிலும்
சிறப்பாகக் காந்திவழி சென்றபெரும் தலைவரவர்
இறப்பினிலும் ஒருபொருத்தம், எல்லாரும் வியக்கின்றார்
பாரதத்தார் போற்றுகின்ற பகுளபஞ் சமியன்றே
அமரவாழ் வெய்தியதும் அதிசயமாம்! அதிசயமே!!



நேருவெனும் மாமணியை இழந்தபோது
'நேர்மையுடன் பாரதத்தை நடத்திச்செல்ல
யாருளரோ?'' என்றுமனம் கலங்கிநின்றோம்
அச்சமயம் நம்அச்சம் போக்கவந்தார்
பாரதத்து மக்களுளம் கவர்ந்தமேலோர்
பகலிரவும் பாராதே உழைத்துழைத்துப்
பாரினிலே தம்வாழ்வைச் சுருக்கிக்கொண்ட
பண்பாளர் சாஸ்திரியை இழந்தோமன்றோ ?

நேற்றுவரை சோதரராய் இருந்தமக்கள்
நிலப்பிளவு செய்து கொண்டு போனபின்பும்,
வேற்றார்போல் நம்மீது வெறுப்புக்கொள்ள
வித்திட்டார், அந்நாட்டுத் தலைவரெல்லாம்.
காற்றுள்ள சமயத்தே தூற்றிக்கொள்ளக்
கயவர்களும் சேர்ந்தே தூபமிட்டார்.
மாற்றார்போல் நம்மீது படையெடுத்தார்,
மண்ணாசை மிகுதியினால், நீதிகொன்றார்.

''அங்குலமும் பிறர்நிலத்தில் விரும்பமாட்டோம்.
அமைதிக்குத் தீங்கெதுவும் இழைக்கமாட்டோம்.
எங்களது சுதந்திரத்தைப் பறிக்கவந்தால்,
எதிரிகளை முறியடிக்கத் தயங்கமாட்டோம்.''

சிங்கமெனச் சாஸ்திரியார் முழக்கம் கேட்டுத்
தேசத்தார் அனைவருமே வீறுகொண்டார்.
பொங்கியெழும் எதிரிகளின் படைகள்தம்மைப்
புறங்காட்டி ஓடிடவே செய்தாரன்றோ ?

நேர்மையுடன் சிக்கல்பல தீர்த்ததாலே
நேருவுக்கு வலக்கரமாய்த் திகழலானார்.
மூர்த்திமிகச் சிறிதெனவே நினைத்தபேரும்
மூக்கின்மேல் விரல்வைத்தே வியக்கலானார்.
கீர்த்திமிகப் பெரிதெனவே காட்டிவிட்டார்.
கிட்டாத மிகப்பெரிய பதவியெல்லாம்
ஏற்பதுவும் துறப்பதுவும் எளிதாய்க்கொண்டார்.
இவரைப்போல் அரசியலில் எவரும்உண்டோ !

ஏர்முனையும் போர்முனையும் இந்நாட்டின்
இருகண்கள் என்பதனை உணரச்செய்தார்.
யார்தயவும் இல்லாமல் பஞ்சம்தீர்க்க
இயற்கைவளம் சிறக்கவழி செய்வோமென்றார்.
போர்க்களத்தே உயிர்கொடுத்தும் அன்னைநாட்டின்
பொன்னான சுதந்திரத்தைக் காப்போமென்றார்.
கூர்மதியும் சிறப்புமிகு குணங்கள்தாமும்
கொண்டபெரும் தலைவரைநாம் இழந்தோமன்றோ?

உள்ளத்தில் உண்மையொளி திகழக்கண்டோம்.
உறுதியுடன் செயலாற்றும் திறத்தைக்கண்டோம்.
கள்ளமிலா மலர்முகத்தில் ஒளியைக்கண்டோம்.
காந்திமகான் எளிமைதனை வாழ்வில்கண்டோம்.
பல்வகையும் பாரதத்தின் பெருமைதன்னைப்
பார்முழுதும் நிலைநாட்டக் கண்டோம்,கண்டோம்.
நல்லமனம் கொண்டபெரும் தலைவர்தம்மை
நாமினிமேல் காண்பதுவும் எந்நாளோ ?

— அழ. வள்ளியப்பா





# காலச் சக்கரம்

ஜ.ராஜேந்திரன்

## அத்தியாயம் 20

## வரவேற்பு அறை

உள் துறை மந்திரி தீனதயாளுவின் இல்லத்தின் வாசலில் காரிலிருந்து இறங்கிய உஷாவை வரவேற்கத் தயாராக வந்து நின்ற மகேசுவரி, உஷா அவளது அந்தஸ்து பற்றித் தங்கப்பனிடம் கூறியிருந்ததற்கு ஏற்பத் தகதகவென்றுதான் ஒளிர்ந்து கொண்டிருந்தாள். ஏராளமான ஜரிகை நூலிழைகளால் நெய்யப்பட்ட மிக உயர்ந்த டிஷ்யூ சேலை உடுத்தியிருந்தாள் அவள். கரங்களிலும் காதுகளிலும் கழுத்திலுமாக நவநாகரிக மோஸ்தரில் பல வைர நகைகள் பளபளத்து வராந்தாவின் மெர்குரி விளக்கு வெளிச்சத்தில் 'டால்' வீசின. தலையில் நரை தெரியாதவாறு அவள் சாயம் பூசி யிருப்பதைப் புரிந்து கொண்டு அருவருப்பை வெளிக் காண்பிக்காதிருக்க முயன்றான் தங்கப்பன்.

காரை விட்டு இறங்கிய உஷாவை, ''என்ன உஷா? ஏன் இத்தனை சீக்கிரமா திரும்பிட்டே? உடம்புக்கு என்ன?'' என்று மிகுந்த கலவரத்தைத் தருவித்துக் கொண்டு கேட்டு அவள், உஷாவின் நெற்றியையும் கன்னத்தையும் சுடுகிறதா என்பதுபோல் தொட்டுப் பார்த்தாள். அவளுடைய அலங்காரத்தைப் போலவே அவளது இந்தப் பரிவும் பாசமும் அளவுக்கு மீறியதாகத் தென்பட்டது தங்கப்பனுக்கு. தனக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டான்.

மகேசுவரியின் கரத்தை உதறித் தன்னாதரவாக அப்புறப்படுத்தினாள் உஷா. ''பார்ட்டி ஒரே போர்! தங்கப்பன் வந்திருக்கிறான் பார்! சாவகாசமா அவனிடம் நம்ம ஊர்க் கதையெல்லாம் பேசிக்கிட்டிருக்கலாமேன்னு அழைச்சுக்கிட்டு வந்துட்டேன்.''

அப்போதுதான் கீழ்ப்படியில் நின்று கொண்டிருந்த அவனைத் திரும்பி நோக்கிய மகேசுவரி, முக பாவத்திலேயே வெறுப்பைக் கொட்டத் தவறவில்லை. ''தங்கப்பனா? ஆள் அடையாளமே தெரியலையே? டிப்டாப்பா ஆளு அடியோடே மாறிட்டியே?'' என்றாள்.

''நீங்களும்தான் ரொம்பவும் மாறிட்டீங்க!'' என்றான் தங்கப்பன்.

''ஆமாம், ஆமாம்'' என்றாள் உஷா. ''அத்தையை முன்னைப் போல் சாமான்யமா நினைக்காதே. எட்டு கம்பெனிகளில் டைரக்டர் பதவி, மூன்றிலே 'சேர்மன் ஆப் தி போர்டு ஆப் டைரக்டர்ஸ்'! ஏதாவது ஒன்று இரண்டு என்றிருந்தால் அவற்றின் பெயர்களைக் குறிப்பிட்டு அத்தையை இன்னார் என்று உனக்குச் சரியானபடி அறிமுகம் செய்து வைக்கலாம்; ஆனால் அத்தைக்கே எல்லாக் கம்பெனிகளின் பெயர்களும் ஞாபகம் இருக்காது! இல்லையா, அத்தை?''

''உனக்கு எப்போதும் விளையாட்டுத்தான் உஷா'' என்றாள் மகேசுவரி, அவளைக் கோபிப்பதற்குத் திராணியற்றவளாக.

உஷா தான் முதுகில் போர்த்திக் கொண்டது போல் அணிந்தும் அணியாமலும் இருந்த ஸ்வெட்டரை எடுத்து அத்தையின் கழுத்தைச் சுற்றி அங்கவஸ்திரம் போல் வளைத்து

இழுத்து அதன் இரண்டு கைகளையும் முன்புறம் சேர்த்து முடிச்சுப் போட்டாள். ''அத்தை! தங்கப்பன் இன்று இரவு இங்கே தான் சாப்பிடப் போகிறான். ஏற்பாடுகளைக் கவனிக்கிறாயா?'' என்று கேட்டு விட்டு உள்ளே நுழைந்தாள்.

அவள் தன்னை 'வாயேன்' என்றுகூட அழைக்காததால் வாசலிலேயே சற்றுத் தயங்கி நின்ற தங்கப்பனைச் சுட்டெரித்து விடுவது போல் பார்த்தாள் மகேசுவரி. எனினும், உஷா அவளிடம், 'எங்களுடன் சேர்ந்திருக்க வேண்டாம் நீ; சமையலறைக்குப் போய்க் காரியங்களைப் பார்' என்பதைச் சூசகமாகச் சொன்ன பிறகு அவளுக்கு மேலும் அங்கு தாமதிக்கத் தைரியம் இல்லை. 'விருட்'டென்று திரும்பி உள்ளே நடந்தாள்.

தங்கப்பன் ஷூக்களை வாசலிலேயே கழற்றிப் போட்டு விட்டுக் காலுறைகளுடன் மட்டுமே வீட்டினுள் சென்றான். வலது பக்கமாக உஷா போயிருந்ததால் அவனும் அவளைப் பின்பற்றியே நாலடி எடுத்து வைத்தான். அங்கே விசாலமான வரவேற்பு அறை அவனைப் பிரமிக்க வைத்து விட்டது. வெளிநாடுகளுக்கு. நீள அகலங்கள் அதிகமாயிருந்தாலும் ஒரு நெருக்கமான அந்நியோன்யமான பாவத்தை அங்கு அமர்கிறவர்களிடையே உருவாக்க விரும்பியது போல் மேல் கூரை மிகத் தாழ்வாக அமைக்கப் பட்டிருந்தது. அதன் அலங்காரமான மடிப்புகளுக்கிடையில் விளக்குகள் மறைந்திருந்து மங்கலான ஒளி மட்டும் சிந்தின. தரையில் மூலைக்கு மூலை எட்டுகிற மாதிரியாக மிக உயர்ந்த ரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. அதன் மீது காலை வைத்ததும் பாதம் அதில் அழுந்திப் பாதிக்கு மேல் மறைந்து விடுகிற மென்மையை உணர்ந்தான் தங்கப்பன். இங்கு மங்குமாகப் பரவலாகக் கிடந்த ஸோபாக்கள் நவநாகரிக மோஸ்தரில் விளங்கின. உட்காருபவர் மீது அப்படியே கவிந்து கொண்டு விடுவதுபோல் அத்தனை ஆழமாக அமைந்திருந்தன. மிக உயர்ந்த தோலினாலான அந்த ஆசனங்கள் பளபளப்பாகத் திகழ்ந்ததுடன் அவற்றின் மீது அமர்ந்தால் ஒரு மேகத்தின் மீது மிதப்பது போன்ற உணர்வைக் கொடுக்கும் என்பதைத் தோற்றத்தாலேயே அறிவித்தன. ஒவ்வொன்றிலும் கருப்பு வெல்வெட் உறையுடன் கூடிய சிறு தலையணைகள். மிக நுணுக்கமான வேலைப்பாடுகளுடன் கூடிய கனமான திரைகள் அறையின் நாலாபுறமும் தொங்கி ஜன்னல்களையும் கதவு நிலைகளையும் மறைத்தன. அதிகப்படியான ஆட்கள் வந்து விட்டால் அமர்வதற்காக ஆங்காங்கே சில 'குஷன்'கள் கிடந்தன. அறைக்கு அழகு கூட்ட விலையுயர்ந்த மேனாட்டுப் பீங்கான் பொருள்களும் ஓவியங்களும் தமிழகத்துப் பஞ்சலோகப் படிமங்களும் அளவாக இங்கொன்று அங்கொன்று என்பதுபோல் இருந்தன. வெய்யில் காலத்தில் அறையைக் குளிர்விக்கும் சாதனங்கள் இரண்டு இருந்தன. அவை இப்போது இயங்கவில்லை. மாறாக அறையை உஷ்ணப்படுத்துவதற்கென்று முன் காலத்தில் கரியை எரிக்கக் கட்டப்பட்ட இடத்தில் இப்போது மின்சார அனல் மானி ஒன்று சிவந்து ஒளிர்ந்து வெப்பக் கதிர் அலைகளை அனுப்பிக் கொண்டிருந்தது.

அறையின் மையத்தில் புலித்தோல் ஒன்று விரிக்கப்பட்டிருந்தது. அதன் தலை மட்டும் உயிர் பெற்றிருப்பது போல் 'ஆ'வென்று வாயைப் பிளந்திருக்க அதன் கண்ணாடிக் கண்கள் தங்கப்பனை நோக்கிப் பயங்கரமாக விழித்தன.

அதற்குப் பின்னால் சற்றுத் தொலைவில் ஒரு சோபாவில் சரிந்து உட்கார்ந்து கால்களை முன்புறம் தரையில்



நீட்டிக் கொண்டிருந்தாள் உஷா. கரத்திலிருந்த கோப்பையை அவனெதிரே ஒரு விநாடி உயர்த்திப் பிடித்து விட்டு அதை உதட்டருகே கொண்டு போனாள். அதே சமயத்தில் ''ஐ டிரிங் டு யுவர் ஹெல்த்!'' என்று கூறியபடியே சேலை மேலேறி வழியக் கால்களைத் தூக்கிப் பக்கத்திலிருந்த ஸ்டூல் மீது போட்டாள். அப்போது அந்த வேகத்தில் குதிகால் உயர்ந்திருந்த ஒரு 'ஸ்லிப்பர்' கழன்று அறையின் ஒரு மூலையில் போய் விழுந்தது. மற்றொன்று கீழே விழுவோமா வேண்டாமா என்பது போல் அவள் பாதத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. குண்டு மல்லிகை அரும்புகளைத் தொடுத்தது போல் அழகாக இருந்த கால் விரல்களைச் சுகமாக நெளித்தாள் உஷா.

''என்னுடைய ஆரோக்கியத்துக்கு ஒரு குறையுமில்லை. உன் உடம்புதான் கெட்டுப் போகும், ஜாக்கிரதை!'' என்றான் தங்கப்பன்.

''அட்வைஸ் வேண்டாம்! அபிடைஸர் வேண்டும்!'' என்று இடக் கரத்தை முஷ்டியாக்கி உயர்த்திக் குலுக்கிக் கோஷம் எழுப்பினாள் உஷா. அண்ணாந்து நோக்கி உரக்கச் சிரித்தவள் சிரம் தாழ்த்தியதும் சட்டென்று நகைப்பதை நிறுத்திவிட்டு, ''எப்போது பார்த்தாலும் என்னைப் பரிதாபமாகப் பார்ப்பதை நிறுத்த மாட்டாயா? கொஞ்சம் கூடச் சேர்ந்து சிரித்தால் என்னவாகி விடும்?'' என்று இரைந்தாள்.

தங்கப்பன் அவளுக்காகப் புன்முறுவல் பூத்தான். அதுவும் சோகப் புன்னகையாகத்தான் விகசித்ததோ என்னமோ, உஷா வெறுப்பு மிகக் கையிலிருந்த கோப்பையை அறையின் ஒரு மூலையை நோக்கி வீசி எறிந்தாள்.

மகேசுவரி இந்தச் சத்தத்தைக் கேட்டுக் கலவரமடைந்திருக்க வேண்டும்; அல்லது அவர்களைத் தனியே விட்டு வைக்க விரும்பாதவளாயிருந்திருக்க வேண்டும். அறைக்குள்ளே அவள் தலை மட்டும் எட்டிப் பார்த்தது. ''ராமன் என்ன சமையல் செய்யப் போகிறான் என்பதைச் சொல்லி விட்டுப் போக வந்தேன்'' என்றாள்.

அவளைக் கண்டதும் புது உற்சாகம் பிறந்து விட்டது உஷாவுக்கு. ''உனக்குத் தெரியுமா தங்கப்பா? அத்தைக்குக் குறைந்துகிட்டே வருகிற நம்முடைய ரூபாயின் மதிப்பிலும் நம்பிக்கை கிடையாது. நம்ம நாட்டு பாங்குகளையும் அவள் அதிகமா நம்புகிறதில்லை! அவள் பணமெல்லாம் 'ஸ்டெர்லிங்'காக லண்டனிலும் 'ஸ்விஸ் பிராங்கு'களாக ஸ்விட்ஸர்லாந்திலும் குடியேறி விட்டன!'' என்றாள்.

''அதெப்படி முடியும்? இங்கிருந்து அயல் நாட்டுக்குப் பணம் கொண்டு போகச் சர்க்கார் அனுமதிக்க மாட்டார்களே'' என்றான் தங்கப்பன் வியப்புடன்.

உஷாவுக்குச் சிரிப்புப் பீறிக் கொண்டு வந்தது. ''இந்த 'பிஸினஸ் டாக்டிக்'கெல்லாம் தெரியாத நீ என்ன பெரிய தொழிலதிபன்?'' என்று கேட்டவாறே தங்கப்பனுக்குப் புது விஷயங்களைக் கற்றுக் கொடுக்கிற ஆர்வத்துடன் அவள் உட்கார்ந்திருந்த ஸோபாவுக்கு முன்னால் தரையிலிருந்த புலித் தோல் மீது, மின்சாரக் கணப்பு அடுப்புக்குப் பக்கத்தில் அமர்ந்து முழங்கால்களை மடித்துத் தன் கரங்களால் அவற்றைச் சுற்றி வளைத்துக் கொண்டாள். ''இது ரொம்ப சுவாரஸ்யமாயிருக்கும் கேட்டுக்க'' என்றாள்.

தங்கப்பன் தர்மசங்கடத்தில் ஆழ்ந்தவனாக மகேசுவரி நின்ற பக்கம் திரும்பினான். உஷா ஏதோ தகிடுதத்தங்களை விவரிக்கப் போகிறாளே என்பதால் கூச்சமோ, கவலையோ காட்டாத முகத்தில் அவற்றைத் தங்கப்பனிடம் கூறுகிறாளே என்பதால் ஆத்திரம் மட்டும் பிரதிபலித்தது. விழிகளை உருட்டி அவளை நோக்கி விழித்த அவள், திரைச் சீலையைக் கிழித்து விடுவது போல் இழுத்து மூடினாள். அப்பால் அவள் நடந்து போகும் ஓசை 'திடும் திடு'மென்று கேட்டது.

இதனால் கொஞ்சமும் பாதிக்கப்படாமல் உஷா சொல்லிக் கொண்டு போனாள். அவள் விவரித்ததைக் கேட்கக் கேட்கத் தங்கப்பனுக்கு ஒரு பக்கம் வியப்பும் மறுபக்கம் இத்தகைய அதர்மம் நிலவும் சூழலின் மீது வெறுப்பும் அதனை அழிக்க வேண்டும் என்ற கோபமும் பொங்கின.

'மகேசுவரி மெடிகல்ஸ்' ஸ்தாபனம் பிரிட்டிஷ் கம்பெனி ஒன்று தயாரித்த சாதாரண இருமல் மருந்தை இந்தியாவில் தயாரிக்க முடிவு செய்தது. பிரசித்தி பெற்ற அந்த இருமல் மருந்தின் பெயரை இங்கு பயன்படுத்த அந்தப் பிரிட்டிஷ் கம்பெனிக்கு ராயல்டி முறையில் மகேசுவரி மெடிகல்ஸ் பணம் தர வேண்டும். ஆனால் அரசாங்க விதிகள் இதற்கு இடம் தரவில்லை. இது போன்ற விஞ்ஞான ரீதியான கூட்டுறவு ஏதும் தேவைப்படாத மிகச் சாதாரணமான மருந்துகளுக்காக ராயல்டி முறையில் அந்நியச் செலாவணி பாழாவதை அரசாங்கம் விரும்பவில்லை. இத்தகைய மருந்துகளின் இறக்குமதியும் நிறுத்தப்பட்டுள்ளது. ஆகவே, 'மகேசுவரி மெடிகல்ஸ்' ஒரு திட்டம் வகுத்தது. அதன்படி பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலேயே இங்கு இயங்கிப் பெருமளவுக்கு நஷ்டப்பட்டிருந்த ஓர் ஆங்கிலேயக் கம்பெனியைத் தேடிப் பிடித்தார்கள். இந்த 'பிளாக் அண்ட் ஒயிட்' கம்பெனி அக்காலத்திலேயே ஏராளமாக நஷ்டப்பட்டிருந்ததன் காரணமாக இப்போது ஏதேனும் லாபம் கிடைத்தால் அதனைப் பிரிட்டனுக்குக் கொண்டு போக அனுமதிக்கப்பட்டிருந்தது. இந்தக் கம்பெனி இருமல் மருந்து தயாரிக்கத் தங்களுக்கு ரசாயன ரீதியான ஆலோசனைகள் வழங்குவதாக ஒரு கதை கட்டி 'மகேசுவரி மெடிகல்ஸ்' மருந்தின் விலையில் பதினைந்து சதவீதத்தை இதற்குக் கொடுத்தனர். 'பிளாக் அண்டு ஒயிட்' ஸ்தாபனம் இதனைத் தனது லண்டன் தாய் ஸ்தாபனத்தின் கணக்குக்கு மாற்றியது. அங்கே மூன்று சதவீதத்தை அசல் இருமல் மருந்து தயாரிப்போருக்குத் தந்தது 'பிளாக் அண்ட் ஒயிட்'. மீதமுள்ள பன்னிரண்டு சதவீதத்தை மகேசுவரியும் 'பிளாக் அண்ட் ஒயிட்' ஸ்தாபனத்தினரும்

பகிர்ந்து கொண்டனர். லண்டனிலும் ஸ்விட்சர்லாந்திலும் மகேசுவரியின் கணக்கில் பணம் பாங்குகளில் ஏராளமாய்ச் சேர்ந்தது. அந்தத் தொகை அதே சமயத்தில் வருமான வரிக்கும் தப்பித்துக் கொண்டது! மருந்தின் பெயரைப் பயன்படுத்தும் உரிமையும் மகேசுவரி மெடிகல்ஸுக்கு மூன்று கைமாறி சுற்றி வளைத்துக் கொண்டு வந்து சேர்ந்தது. லண்டன் 'பிளாக் அண்டு ஒயிட்' ஸ்தாபனம் அதனை அசல் உரிமையாளரிடமிருந்து பெற்றுப் பிறகு அதனைச் சேய்க் கம்பெனியாகிய இந்திய 'பிளாக் அண்டு ஒயிட்'டுக்கு மாற்ற, அது 'மகேசுவரி மெடிகல்'ஸுக்கு அவ்வுரிமையைக் கொடுத்தது!

"எப்படி? ரொம்ப சாமர்த்தியமான ஏற்பாடுதானே?" என்று பெருமிதம் பொங்கக் கேட்டவாறு புலித் தலை மீது கரம் பதித்து ஒய்யாரமாகக் கால்களை நீட்டி உடலை நெளித்துப் புரண்டு படுத்தாள் உஷா. புன்னகையில் செம்பவழ இதழ்கள் விரிய வசீகர விழிகளை உயர்த்தி அவனை நோக்கினாள்.

## அத்தியாயம் 21

# உஷாவைப் பற்றிய உண்மை

'அவனுக்கென்னய்யா கோவையிலும், அதன் சுற்றுவட்டாரத்திலும், மூணு மில்லுங்க அவனுக்குச் சொந்தம்' என்றோ, 'மவுண்ட் ரோடில், நாலு கம்பெனிங்களுக்கு அதிபதி' என்றோ, 'அனுவிலாசம் இருக்கு. ஹாய்யா உட்கார்ந்து அனுபவிச்சுக்கிட்டு இருக்கான்' என்றோ கூறிப் பொறாமையையும் வெறுப்பையும் வளர்ப்பது எவ்வளவு சுலபம் என்பது தங்கப்பனுக்குத் தெரிந்துதான் இருந்தது. அந்த நிலைமையை அடைய ஒருவன் உழைத்தது எவ்வளவு; எல்லோராலும் இதைச் சாதித்துவிட முடியுமா; அவற்றை நிர்வகிப்பது எவ்வளவு கடினம்; அவற்றில் நாள்தோறும் எதிர்ப்படும் சிக்கல்களை விடுவிப்பதற்குள் அவன் படும் பாடு என்ன என்பதை யெல்லாம் யாரும் உணர்வதுமில்லை; உணர்த்துவதுமில்லை.

நாம் சைக்கிள் வைத்திருக்கப் பக்கத்து வீட்டுக்காரன் மோட்டார் சைக்கிள் வைத்திருந்தால், நாமும் அது போன்ற மோட்டார் சைக்கிள் வாங்க எவ்விதம் பாடுபடலாம் என்று இன்று யாரும் யோசிப்பதில்லை. 'நான் சைக்கிள் வைத்திருக்கப் பக்கத்து வீட்டுக்காரன் மட்டும் மோட்டார் சைக்கிள் வைத்திருக்கிறானே, அது குறித்து அரசாங்கம் என்ன செய்யப் போகிறது?' என்றுதான் கேட்கிறார்கள். தங்கப்பன் விசனத்துடன் இவ்வாறு பல தடவைகளில் நினைத்துப் பார்த்ததுண்டு.

ஆனால் இன்று அவன் இத்தகைய வேற்றுமைகளை வேண்டுமென்றே மக்களிடையில் வளர்த்து விட்டவர்களே தங்கள் செல்வத்தை மட்டும் அல்லது தங்களது உறவினரின் சொத்துக்களை மட்டும் பெருக்கிக் கொள்ளும் சுலபமான மோசடிகளில் ஈடுபடுவதை நேருக்கு நேராக நிதர்சனமாகக் கண்டான். ஒழுங்காகக் கையெழுத்துக் கூடப் போடத் தெரியாத மகேசுவரி இன்று எட்டு கம்பெனிகளில் டைரக்டர்; மூன்றிலே 'சேர்மென்'! அத்தனை கம்பெனிகளும் வருமான வரி இலாக்காவைப் பொறுத்த வரை நஷ்டத்தில்தான் இயங்குகின்றன என்பதாகவும் உஷா பெருமிதத்துடன் பீற்றிக் கொண்டான்! கணக்கு வழக்குகளைச் சீர்தூக்கிப் பார்க்கவும் குற்றம் குறைகளைக் கண்டுபிடித்துக் கூறவும் எந்த அதிகாரிக்குத் துணிவு வரும், சர்வ வல்லமை பொருந்திய தினதயாளுவின் பெயர், அவர்கள் கணக்குகளைப் பரிசீலிக்கும்போது இடையிடையே பேச்சு வாக்கில் அடிபட்டால்?

'உண்மையில் இன்று நாட்டில் நிலவுவது இரண்டு வர்க்கங்கள்தான்: ஒன்று ஆளும் வர்க்கம்; மற்றொன்று ஆளப்படும் வர்க்கம்!' என்று எண்ணினான் தங்கப்பன். ஜனநாயகத்தில் அதிகாரத்தில் இருப்பவர்கள் மக்களுக்குச் சேவை புரியத் தங்களுக்குக் கொடுத்து வைத்திருக்கிறதே என்று பெருமிதமுறுவதற்குப் பதிலாக மக்களை வருத்துவதிலும் அவர்களைத் தந்திரமாக ஏமாற்றுவதிலுமே பெருமிதம் அடையத் தொடங்கினால் அதைவிட ஆபத்து வேறு என்ன இருக்க முடியும்? இந்தக் கொடிய வியாதி வெகு வேகமாகப் புதுதில்லியில் பரவி வருவதையும் அவனால் தெளிவாகப் பார்க்க முடிந்தது. சினம் பொங்கியது அவன் உள்ளத்தில்.

"என்ன, அப்படியே என்னை விழுங்கி விடுவது போல் விழித்துப் பார்க்கிறாய்?" என்று கேட்டாள் உஷா. தங்கப்பனின் கண்கள் திறந்துதான் இருந்தன. என்றாலும் உஷா பேசிய பிறகுதான் சிந்தனை கலைய, அவை எதிரே இருந்த அழகுத் தோற்றத்தை அறிவுக்குப் புலப்படுத்தின.

புலித் தலை மீது தனது இரு உள்ளங் கைகளையும் ஒன்றன் மீது ஒன்றாகப் பதித்து அவற்றின் மேல் முகவாயையும் ஊன்றிக் குப்புறப் படுத்திருந்த அவளுடைய முழங் கால்கள் மடியப் பாதங்கள் உயரே இருந்தன. சோம்பலுடன் நிதானமாகக் கால்களை உயர்த்திக் கொண்டும் தாழ்த்திக்கொண்டும் இருந்தான் அவள்.

"என்னைப் பார்த்தால் அப்படிப் பிரமை பிடித்தாற் போலாகி விடுகிறதா உனக்கு?" என்றாள். அவள் மேனி சிலிர்ப்பது அவனுக்குத் தெரிந்தது.

உண்மையில் தான் அவளைக் காணவேயில்லை என்றும் நாட்டின் விசனிக்கத்தக்க நிலவரம் குறித்த சிந்தனை ஓட்டத்தைத்





"இதென்ன? யாருடைய உடம்பு நிலை பற்றி அங்கே சார்ட் பண்ணியிருக்கே?"
"எனக்கும் வார்டனுக்கும் அவ்வப்போது நடக்கும் சண்டையின் உச்சக் கட்டத்தைக் குறிக்க வச்சேன்!"

தான் கண்டு கொண்டிருந்ததாகவும் தங்கப்பன் வெளியிடவில்லை.

"பிரமித்துப் போய் விட்டேன் உஷா!" என்றான் அவன். "ஆனால் கவர்ச்சிகரமான உன் அழகைக் கண்டு இல்லை. உன்னை விட்டு ஓடிப் போய்க் கொண்டேயிருக்கிற இன்பத்தைத் துரத்திப் பிடிக்க நீ சளைக்காமல் முயலுவதைப் பார்த்துப் பிரமித்து விழிக்கிறேன்! ஆனாலும் அந்த இன்பம் என்னவோ உன் கைக்கு எட்டாமல் நழுவி ஓடிக் கொண்டேயிருக்கிறது இல்லையா?"

பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்தாள் உஷா. எப்படியெல்லாமோ கிடந்த ஆடைகளைச் சரி செய்து கொண்டாள். "இதோ பார்! மறுபடியும் உன் உபதேச மொழிகளை அள்ளி வீசுவதாயிருந்தால் நீ இப்போதே கிளம்பிப் போய் விடு!"

"போகிறேன், உஷா! ஆனால் கிளம்புவதற்கு முன்னால் இன்று, உன்னைப் பற்றி நான் என்ன நினைக்கிறேன் என்பதை முடிவாகத் தெளிவாகச் சொல்லி விட்டுத்தான் புறப்படப் போகிறேன். என்னைக் காட்டிலும் உன்னை நன்றாகப் புரிந்து கொண்டிருப்பவர்கள் யாருமில்லை. ஏன் நீயே இன்னும் உன்னை முழுமையாக அறிந்து கொள்ளவில்லை. அன்றும், அன்றைவிட, செல்வத்திலும் செல்வாக்கிலும் உயர்ந்துவிட்ட இன்று அதிகமாகவும் மகேசுவரி உன் அப்பாவுக்கும் உனக்கும் நன்றிக் கடன் பட்டவளாகி உன்னைக் கண்டிக்க முடியாதவளாயிருக்கிறாள். உன் அத்தை உனக்கு அபரிமிதமான செல்லம் கொடுத்தும் உன் அழகைச் சிலாகித்துப் புகழ்ந்தும் உன்னை வளர்த்திருப்பதால் உனக்கு உன் பேரிலேயே உன்னையும் அறியாமல் காதல் வளர்ந்து விட்டிருக்கிறது! இந்தக் கொடிய வியாதி காரணமாக நீ எல்லாரும் உன் அழகுக்கு அடிமையாகி, உனக்கு அடிபணிய வேண்டும் என்று நினைக்கிறாய். இன்று மாலை பார்ட்டியில் அந்தப் பிரெஞ்சுக்காரன் நீ அழகாய் இருப்பதாய்ச் சொன்னான். அப்போது நீ உன் அழகால் அவனை மகிழ்விக்க முடிந்ததே என்பதற்காகச் சந்தோஷப்பட்டிருந்தால் அது இயற்கை. ஆனால் அவனை வசீகரிக்கக் கூடிய அளவுக்கு உன்னிடம் கவர்ச்சிகரமான அழகு இருப்பதால் நீ இறுமாப்புடன் பூரித்து அவனது புகழ்ச்சியிலேயே இன்பம் துய்த்தால் எங்கோ கோளாறு இருப்பதாய்த்தான் அர்த்தம். இன்பம் எப்போதுமே பெறுவதில் இல்லை உஷா; கொடுப்பதில்தான் உள்ளது. இது தலைகீழாக மாறினால் நோய்க்கு அறிகுறிதான். இல்லாது போனால் சற்று முன்னால் 'என்ன என்னை விழுங்கி விடுவது போல் பார்க்கிறாய்?' என்றும், 'என்னைக் கண்டாலே பிரமை பிடித்தது போல் ஆகிவிடுகிறதா உனக்கு?' என்றும் கர்வத்துடன் உனக்குக் கேட்கத் தோன்றியிருக்குமா?"

உஷா பெரிதாகச் சிரித்தாள். "எந்தப் புத்தகத்தைப் படித்து விட்டு வந்து இங்கே பாடம் ஒப்பிக்கிறாய்?" என்று கேட்டு விட்டு மீண்டும் அடக்கமாட்டாமல் சிரித்தாள் கேலியாக.

"உன்னை நான் சரியாகத்தான் புரிந்து கொண்டிருக்கிறேனா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள மனோதத்துவ நூல்களின் துணையை நான் ஓரளவுக்கு நாடியது வாஸ்தவம்தான் உஷா! நான் இதை மறுக்கவில்லை. இதே போல், இதே வேகத்தோடு நான் கூறுவதெல்லாம் தவறு என்று நீயும் மறுத்துச் சொல்லிவிடு, பார்க்கலாம்" என்றான் தங்கப்பன்.

"நான் ஏன் மறுக்க வேண்டும்? நீ தொடர்ந்து உளறிக் கொண்டே இரேன்; கேட்கிறேன்! பொழுதுபோக்காக இருக்கும்!" என்ற உஷா உள்ளங் கைகளைப் பின்புறம் தரையில் ஊன்றிச் சாய்ந்தாள். அவனுக்கு ஏதோ சவால் விடுவது போல் இருந்தது. அவள் இவ்விதம் நடந்து கொண்ட தோரணை.

"பாக்கியையும் சொல்கிறேன், உஷா! உன் அழகுக்கும் அதிகாரத்துக்கும் கட்டுப்படாதவர்களுக்குத் தீங்கு இழைத்துக் கொடுமைப்படுத்தி அதிலேயே அலாதியான ஓர் இன்பத்தைக் காண்கிறாய் நீ! அது முன்னிலும் கொடியதான, உன்னைப் பிடித்துள்ள இரண்டாவது வியாதி! இன்று மாலை என் மனத்தைப் புண்படுத்த நினைத்துத்தானே என்னைக் கவனித்தும் கவனியாதது போல் அந்தப் பிரெஞ்சுக்காரன் பக்கமாக முதலில் திரும்பினாய்? அது சின்ன விஷயம். ஆனால் எனக்கும் மாருதிக்கும் நீ எத்தனை பெரிய இடையூறுகளையும் இன்னல்களையும் விளைவித்து மகிழ்ந்திருக்கிறாய்?

"இல்லாதிருந்தும் நான் உன்னை ஆட்கொண்டுள்ள இந்த நோய்களைத்தான் வெறுத்தேனே ஒழிய உன்னை வெறுக்க என்னால் முடியவில்லை. உன் அழகில் மயங்காமலும்

உன் கைப் பாவையாக மாறுமளவும் இருக்க என்னால் முடிந்தது. ஆனால் உனக்காகப் பரிதாபப் படாமல் இருக்க முடியவில்லை. அனுதாபத்துடன் உன் மனைவியாதியைக் குணப்படுத்த என்னாலானதைச் செய்யக் காத்திருந்தேன். சிகிச்சையில் முன்னேற்றம் காண இடம் இருப்பதாயும் தோன்றியது. மாருதியைத் தாக்குவதில் நீ நேரடியாகப் பங்கு பற்றாவிட்டாலும் அதில் உனக்கும் சம்பந்தம் இருக்கும் என்றும் உன்னுடைய தூண்டுதலின் பேரில்தான் அப்படி நடந்திருக்குமென்றும் நினைத்து அவர் வேதனைப்படுவதைக் கண்டு நீ மகிழ்ச்சி அடைவாய் என்று முதலில் எதிர்பார்த்தேன். ஆனால் நான் உன்னை இழுத்துச் சென்று மாருதி பலமான கட்டுக் காயங்களுடன் படுத்துக் கிடக்கும் பரிதாபக் காட்சியைக் காண்பித்த பிறகு நீ ஆஸ்பத்திரி வாசலுக்குத் திரும்ப ஓடிப் போய்க் காரில் உட்கார்ந்தபடி மனம் இளகி அழுவதை மறைவிலிருந்து பார்த்துத் திருப்தியடைந்தேன். உன்னை அழ வைத்து விட்டதால் ஏற்பட்ட திருப்தியல்ல உஷா! உனக்கிருக்கும் மனோ வியாதி குணப்படுத்தவே முடியாத ஒன்றல்ல, உன் இருதயம் முழுவதுமே இரும்பாகி விடவில்லை. ஈரப் பசை உன் நெஞ்சின் ஓர் ஓரத்தில் இருக்கத்தான் செய்கிறது. அதனை நல்ல விதமாகப் பயன் படுத்திக் கொண்டு உன்னை வீட்டுக்கும் சமூகத்துக்கும் உபயோகமுள்ள ஒருத்தியாக உருவாக்க ஒரு வாய்ப்பு இருக்கிறது என்பதையெல்லாம் உணர்ந்ததால் ஏற்பட்ட மகிழ்ச்சி அது. ஆனால் அந்த எண்ணத்தைச் செயலாக்குவதற்கு முன்னால் மீண்டும் தேர்தல் வேலைகள் குறுக்கிட்டு விட்டன. அப்புறம் நீ டில்லியிலும் நான் சத்தியபுரியிலுமாக இருந்து விட்டோம். இப்போதும் உனக்கு உதவ நான் தயார்தான், உஷா! ஆனால் நீதான் பிடிவாதமாக ஒத்துழைக்க மறுக்கிறாய்!''

கோடை மழை போல் அவன் கொட்டித் தீர்த்த வார்த்தைகளில் நனைந்து சற்று நேரம், திறந்த வாய் மூடாதிருந்த உஷா, 'திடு'மென்று தன்னிலை யடைந்தவளாக, ''சீச்சீ! எனக்கு வியாதியுமில்லை, உன் வைத்தியமும் எனக்கு வேண்டாம்!'' என்றாள் மிகுந்த அருவருப்புடன். ''ஏதாவது தாறுமாறாகக் கற்பனை செய்து கொள்ளாதே! அன்று காரில் உட்கார்ந்து நான் அழுதேன் என்றால் அது அடிபட்டுக் கிடந்த மாருதியைக் கண்டு தவித்துப் போனதினாலில்லை; அன்று ஆஸ்பத்திரிக்குள்ளே என் கையைப் பிடித்துக் 'கர கர' வென்று இழுத்துப் போனாய். உன் பிடி இறுகிய இடத்தில் தாள முடியாத வலி; அதனால்தான் அழுதேன்'' என்ற உஷா இப்போதும் அந்த வலியை அனுபவிப்பவள் போல் மெல்ல இடது கரத்தின் மணிக் கட்டைத் தடவிக் கொடுத்துக் கொண்டாள்.



"நான் கல்யாணம் செய்து கொண்டு என் மனைவியை மிகவும் நேசித்து அவள் கேட்டதெல்லாம் வாங்கிக் கொடுத்தேன்! நீ எப்படி ?"

"நானும் கல்யாணம் செய்து கொண்டேன். ஆனால் நேசிப்பதில்லை! நமக்கு அது கட்டுப்படியாகாதப்பா !"

இந்தப் பதிலைக் கேட்டுத் திகைத்தபோதிலும் அதைக் காண்பித்துக் கொள்ளாமல் தொடர்ந்தான் தங்கப்பன்: "உஷா ! நீ கொஞ்சம் யோசிக்க வேண்டும். உஷை என்ற சொல்லைக் காலை, மாலை இரண்டுக்கும் பொதுவாகப் பயன்படுத்துகிறோம். உன் அப்பா சீக்கிரமே ஆங்கிலேயரது ஆட்சி அஸ்தமித்து விடுவதையும் சுதந்திர சர்க்காரின் உதயத்தையும் எதிர்பார்த்து, 'உஷா' என்று உனக்குப் பெயர் சூட்டினார். இன்று உஷா, உதயமாகி வானில் உயர்ந்து நிற்கும் சூரியன். அழகு, பணம், அதிகாரம், அந்தஸ்து எல்லாவற்றிலும் நீ வளர்ந்து உச்ச நிலையை அடைந்து விட்டாய். இது இப்படியே என்றும் நீடிக்கும் என்று நம்புகிறாய். ஆனால் பிற்பகல் என்று ஒன்று உண்டு. மாலை மயங்கி அஸ்தமனமாகும் வேளையும் வரும். எதெதிலெல்லாம் நீ இன்று வளர்ச்சியைக் கண்டு பற்றுதலும் வைத்திருக்கிறாயோ அவையெல்லாம் சாசுவதமற்றவை என்பதை நீ இன்னும் புரிந்து கொள்ளவில்லை; உனக்குப் புரிய வைத்து விட்டால் பிறகு எல்லாம் சரியாகி விடும்."

"அதாவது என்னை ஒரு வேதாந்தியாக்கி விட முயலப் போகிறாய்!" உஷா சிரித்தாள்.

"நான் சொல்ல வேண்டியது இன்னும் கொஞ்சம் மீதி இருக்கிறது, உஷா ! நீயும் உன் அப்பாவும் அத்தையும் நடந்து கொள்கிற விதம், நீங்கள் பின்பற்றுகிற தவறான வழிகள் எதுவுமே உனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் பிடிக்க வில்லை என்பதை வெளிக் காண்பித்துக் கொள்ளவும் உன்னால் முடிய வில்லை. உங்கள் மூவருடைய செயல்களும் உன்னிடம் ஒரு தாழ்வு மனப்பான்மையை உருவாக்கி விட்டிருக்கின்றன. அதன் விளைவாக நீ யாரேனும் பிடிவாதத்துடன் யோக்கியமாக இருந்தால் அவர்களைப் பரிகசிக்கிறாய்; கோபிக்கிறாய், அவர்களுக்குத் தீங்கு இழைக்க முயலுகிறாய். ஒழுக்கத்திலும், நேர்மையிலும், கடமையைச் செவ்வனே செய்து முடிப்பதிலும் உண்டாகிற மன நிறைவும் சந்தோஷமும் உனக்கு எப்படித் தெரியும் ? குதூகலத்தையே அறியாத நீ உற்சாகமாக இருப்பது போல் நடிக்கிறாய். ஆனால் உன்னைவிட ஆழ்ந்த துயரத்தில் அமிழ்ந்து கிடப்பவரைக் காண முடியாது. அந்த வருத்தத்தை உன்னுடன் பகிர்ந்து கொள்ளக் கூட ஆளில்லாமல் ஏகாங்கியாக விளங்குகிறாய் நீ ! உன்னுடைய ஆணவம் அகங்காரம் காரணமாக உன்னைப் புரிந்து கொண்டு மனச் சுமையைக் குறைக்கக்கூடிய நண்பர்களே உனக்கு இல்லாமல் போய்விட்டார்கள். சுற்றிச் சூழ்ந்து முகஸ்துதி செய்யும் நாறு பேர்களுக்கிடையில் இருந்தாலும் தனிமையே உன்னை வாட்டி வதைக்கிறது. உனக்குச் செல்வம் கொடுத்துச் சீராட்டவும் உன் அழகை வியந்து போற்றிக் கர்வத்தை வளர்க்கவும் நீ எண்ணியதையெல்லாம் செய்து முடித்துத் தரவும் ஆட்கள் இருக்கிறார்கள். ஆனால் உன்னிடம் உண்மையான அன்பு செலுத்த யாரும் இல்லை. அன்புக்காக நீ ஏங்குகிறாய். அபரிமிதமான சுகபோக வாழ்க்கைக்கான எல்லா வசதிகளும் உனக்கு இருந்து பயன் என்ன, அன்பு கிடைக்காத போது? இந்த ஏக்கத்தையெல்லாம் உள்ளத்துக்குள்ளேயே புதைத்து வைத்துக் கொள்வதில் உன் மனம் எத்தனை சிரமப்பட்டுச் சோர்வடைந்து விட்டிருக்கிறது என்பதையும் என்னால் உணர முடிகிறது உஷா !"

தங்கப்பனுக்கு இதைக் கூறும்போது நாத் தழு தழுத்தது. "சொல்லு! உன்னைப் பிடித்திருக்கும் வியாதிகளுக்கு அடிப்படைக் காரணம் இவைதானே? எந்தவிதமான உயர் நோக்கமோ, லட்சியமோ இன்றி உன் வாழ்க்கை உளுத்துப் போக அனுமதித்து விடாதே உஷா!" என்றான் அவன்.

விசுக்கென்று உஷா எழுந்து நின்றாள். "என்னென்னமோ மாய்மாலம் பேசி என்னைக் கலங்க அடிக்கப் பார்க்கிறாய், நீ! இன்னும் கொஞ்ச நேரம் உன்னை இங்கே தாமதிக்க விட்டால், இல்லாத வியாதியெல்லாம் எனக்கு இருப்பதாக என்னையே நம்ப வைத்து விடுவாய் நீ! போய்விடு, இங்கிருந்து !" தொண்டை கிழியக் கத்தினாள்.

தங்கப்பன் பெருமூச்சுடன் எழுந்து வராந்தாவுக்குப் போய் அங்கிருந்த பிரம்பு நாற்காலி ஒன்றில் அமர்ந்து ஷூக்களை மாட்டிக் கொண்டு முடித்தான். இடது காலை முடித்துக் கொண்டு வலது காலுக்கு அவன் கரங்கள் மாறியபோது உஷா அவன் பக்கத்தில் வந்து நின்றாள்.

"ரொம்பப் பிகு பண்ணிக் கொள்ளாதே! உனக்காகச் செய்த சாப்பாடெல்லாம் வீணாய்ப் போகும். சாப்பிட்டு விட்டுப் போகலாம்" என்றாள்.

சாப்பிட அழைத்த கனிவையும் கனிவைக் காண்பித்துக் கொள்ள அனுமதிக்காத ஆணவத்தையும் ஒருங்கே உணர்ந்தான் தங்கப்பன். வருத்தம் மிகச் சிரித்துக் கொண்டே எழுந்து வாசல் படிகளில் இறங்கிச் சாலையை நோக்கி நடந்தான். (தொடரும்)

# ஏமாறச் சொன்னது யார்?

## பூவாளூர் சுந்தரராமன்

கூடத்தில் இருந்த பெரிய சுவர்க்கடிகாரம் 'டாங் டாங்' என்று நான்கு மணி அடிப்பதற்கும் வாசுதேவாச்சாரியார் வாசற் பக்கம் வருவதற்கும் சரியாக இருக்கும். மாலை வெய்யில் சற்றே படிந்த வெப்பு சிமெண்ட் பூசி வழவழவென்று இருக்கும் திண்ணையில் மேல் துண்டால் தரையைத் தட்டி விட்டு உட்காருவார். இனி ஆறு மணிக்கு மாலைக் கடன்களைக் கழிக்கப் போகும்வரையில் அந்த இடத்தை விட்டு எழுந்திருக்க மாட்டார். அந்தச் சமயத்தை எதிர்பார்த்தவர்கள் போல் அக்கம் பக்கத்திலும் நாலு பேர்கள் அரட்டை அடிக்க வந்து சேருவார்கள். சிறிது நேரத்துக்குள் அந்தத் திண்ணை காரசாரமாக அரசியல் கொள்கைகளை விவாதிக்கும் பார்லிமெண்ட் சபையாக மாறினாலும் மாறும்; இல்லை, சமயச் சொற்பொழிவு நடக்கும் இருக்கூட்டமாக விளங்கினாலும் விளங்கும்! எல்லாவற்றுக்கும் அன்றையச் செய்தித் தாளில் வந்த செய்திகள் அடிப்படையாக நிற்கும்! எல்லாவற்றிற்கும் ஸ்ரீமான் வாசுதேவாச்சாரியார்தான் தலைமை தாங்குவது வழக்கம்.

வாசுதேவாச்சாரியார் சப் — ஜட்ஜாக இருந்து ஐந்து வருஷங்களுக்குமுன்தான் வேலையிலிருந்து 'ரிடையர்' ஆனார். வாடகைக்குக் குடி இருந்த வீட்டையே சில மாதங்களுக்குப் பிறகு வாங்கிக்கொண்டார். முகத்தில் பெரிய மனிதத் தன்மை பளிச்சிட்டது; நல்ல உயரம்; இலேசான நரை கண்ட வழுக்கைத் தலை; எடுப்பான மூக்கு; ஒளி வீசும் கண்கள்; வைரக் கடுக்கன் 'டால்' வீசும் காதுகள்; சிறிதே சுருக்கம் விழுந்த நெற்றியில் அழகான திருமண். இடுப்பில் தும்பைப் பூப்போன்ற சன்னக் கரையில் வேஷ்டி. கண்ணைப் பறிக்கும் தூய வெள்ளைப் பனியன்; அதன் மேல் ஐந்து முழ உத்தரீயம்! அந்தத் தெருவிலேயே அவருக்கு 'ஸப் ஜட்ஜ் மாமா' என்று எல்லோரும் மரியாதையும் அன்பும் செலுத்தினார்கள். அவருடைய வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்தார்கள். அவருடைய புன்சிரிப்பைத் தெய்வப் பிரசாதமாகக் கருதினார்கள்.

அன்று வெள்ளிக்கிழமை. வழக்கம்போல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு பேச்சுக்கு ஆளைத் தேடிக் கொண்டிருந்தார். அவரைத் தேடிக்கொண்டு வந்ததுபோல் ஹேமா வந்து நின்றாள். அவர் வீட்டுக்கு நாலைந்து வீடுகளுக்கு அப்பால் அவளது வீடு. அழகு கொஞ்சும் முகம்; கண்களில் ஒரு வெட்டும், நடையில் ஒரு துள்ளலும் சேர்ந்து பல பேரைப் பைத்தியமாக்கிக் கொண்டிருந்தாள்! இந்த வருஷம்தான் எஸ். எஸ். எல். ஸி. தேறியிருந்தாள். அவள் தகப்பனார், ராமதுரையால் மேலே படிக்க வைக்க முடியவில்லை. கல்யாணம் செய்துவிட வேண்டும் என்று அலைந்து கொண்டிருந்தார். ஓர் இடமும் சரியாகத் திகையவில்லை.

''வா, ஹேமா! உட்காரு. எங்கே வந்தே?'' என்று வாசுதேவாச்சாரியார் கேட்டார்.

''உங்களைத்தான் தாத்தா பார்க்க வந்தேன்.'' முல்லைப் பல் வரிசை பளபளத்தது.

''நான் என்னம்மா அவ்வளவு கிழவனாகவா ஆய்விட்டேன்?... உம்... இந்தக் 'கிழவனை'த் தேடிக்கொண்டு எங்கே வந்தாய்?''

''உங்களால் ஒரு சின்னக் காரியம் ஆக வேண்டும்.''

அந்த வேண்டுகோளை எவரால் மறுக்க முடியும்?

''காத்துக் கொண்டிருக்கிறேன், அம்மா!''

இருவரும் சிரித்தார்கள். ஹேமாவின் முகம் குங்குமப் பூப்போலச் சிவந்தது.

ஒரு நிமிஷம் தயங்கினாள் ஹேமா.

''சொல்லேனம்மா?''

''உங்க 'ஸன்'தானே எல். ஐ. ஸி.யில் மானேஜராக இருக்கார் தாத்தா?''

''ஆமாம்; உனக்குத்தான் தெரியுமே, ரங்கனை!''

''அதனால்தான் சொல்ல வந்தேன். நான் எல். ஐ. ஸி.யில் பரீட்சை எழுதியிருக்கிறேன். அவரிடத்தில் சொல்லி எனக்கு 'செலக்ஷன்' ஆகச் செய்யணும்!''

''என்ன வேலைக்குப் பரீட்சை எழுதியிருக்கிறாய்?''

''கிளார்க் வேலைக்கு, தாத்தா!''

''நீ ஏம்மா அதற்கெல்லாம் போக வேண்டும்? உங்க அப்பா கல்யாணத்துக்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறாரே!''

அவள் முகத்தில் நாணம் படர, மிகுந்த வெட்கத்துடன், ''அது ஒன்றும் வெற்றி பெறவில்லை தாத்தா!'' என்றாள்.

''ஏனம்மா? உனக்கு என்ன, தங்கச் சிலை போல் இருக்கிறாய்! பார்க்க வந்தவாளுக்குக் கண்களில் ஏதாவது கோளாறு, என்ன?''

''அதை நான் எப்படிச் சொல்வது?''

''அவா என்னதான் சொல்றா?''

''ஊருக்குப் போய்க் கடிதம் போடறோம் என்கிறார்கள். சிலர் கடிதம் போடுவதேயில்லை; போட்டாலும் 'பிளாங்கி'தான்!''

வாசுதேவாச்சாரியார் சிரித்தார்.

''என்ன தாத்தா சிரிக்கிறேள்?'' அவள் கண்களில் கண்ணீர் துளிக்கத் தொடங்கியது.

''உன்னைப் போல இருக்கிறவா, எப்படியம்மா, நாலு பேருக்கு நடுவே ஈடு கொடுத்துக்கொண்டு வேலை செய்ய முடியும்?''

''வேறு என்னதான் செய்வது?''

''என்னால் நம்பவே முடியவில்லை, ஹேமா! உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமானால் எத்தனையோ தவம் செய்திருக்க வேண்டும் என்று நம்பினேன். இன்னும் நம்புகிறேன்... உன் அழகு என்ன, நல்ல குலம், கோத்திரம்; படிப்பு, குணம் எல்லாம் இருக்கு. இதைத் தவிர அவாளுக்கு வேறு என்ன வேண்டுமாம்?''

''ரொக்கம், சீர், சௌத்தி இதெல்லாம்னு அவா முதல்லே எதிர்பார்க்கிறா!''

''ராமதுரை அதைப் பத்தி ஒண்ணுமே பேசவில்லையா?''

''அப்பா, 'எங்களால் முடிந்ததைச் செய்கிறோம்'னுதான் சொல்றா; ஒருத்தருக்கு வெள்ளிக் குடம் வேணுமாம்!''

''ஏன், திருமஞ்சனத்துக்கா?'' பெரியவர் சிரித்தார்.

''இன்னொருத்தருக்கு வீடு வாங்கித் தரணுமாம்... !''

''உம்!... காலம் அப்படி மாறிப் போய் விட்டது! ஆசைக்கு அளவில்லை! சரி, உன் நம்பரை எழுதிக் கொடுத்துவிட்டுப் போ. ரங்கன் வந்ததும் சொல்றேன்.''

ஹேமா நம்பர் எழுதிய காகிதத்தை வாசுதேவாச்சாரியாரிடம் கொடுத்துவிட்டு, ''வரேன், தாத்தா!'' என்று சொல்லிக் கொண்டே மின்னல் வேகத்தில் மறைந்தாள்.

ஃ ஃ ஃ

இருபது நாட்கள் போலக் கழிந்திருக்கும். ஹேமா திரும்பவும் வாசுதேவாச்சாரியாரைப் பார்க்க வந்தாள். கிழவர் சுமுகமாகவே வரவேற்கவில்லை.

''நான் கேட்டது என்ன ஆயிற்று, தாத்தா?''

வாசுதேவாச்சாரியார் அவளை ஏற இறங்கப் பார்த்தார்.

''என்னம்மா சொல்றது?'' —உதட்டைப் பிதுக்கினார்.

ஹேமாவுக்கு அழுகை தொண்டைக்கு மேலே வந்து விட்டது.

''ஏன் தாத்தா?''

''உனக்குக் கணக்கில் போய் விட்டது, ஹேமா!''

''உங்க பிள்ளை கொஞ்சம் மனசு வைக்கக் கூடாதா?''

''அது அவ்வளவு சுலபமில்லை, ஹேமா! பிறகு எவ்வளவோ கேள்விகள் எல்லாம் பிறக்கும்'' என்றார் அவர்.

ஹேமாவின் நம்பிக்கை தான் தூளாக நொறுங்கி விட்டது. மிகவும் நிச்சயமாக நடந்துவிடும் என்று நினைத்துக் கொண்டிருந்த எண்ணத்தில் ஒரேயடியாக மண் விழுந்து விட்டதே என்று அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது.

''அந்தக் கோடி வீட்டு மீனுட்டிக்கு?''

''அவளுக்கு 'செலக்ஷன்' ஆகிவிட்டதம்மா! நீ பிறரிடம் கைகட்டி வேலை செய்ய



ஆண்டவன் இருவுள்ளமில்லை! அவ்வளவு தான், சந்தோஷமாகப் போ!...''

ஹேமா கோபத்துடன் விருட்டென்று ஓடி விட்டாள்.

அடுத்த வாரம் ராமதுரை ஆபீஸிலிருந்து வீட்டுக்குள் நுழைந்ததும் சட்டையைக்கூடக் கழற்றாமல், 'அலமு, அலமு!...' என்று குரல் கொடுத்தார்.

''ஏன் அப்பா?'' என்று வேகமாக ஓடி வந்தாள் ஹேமா.

''அம்மா எங்கே?''

''அம்மன் கோவிலுக்குப் போயிருக்கிறாள், அப்பா. வந்துவிடும் சமயம்தான். நான் உங்களுக்கு டிபன் கொடுக்கிறேன்'' என்று சமையற்கட்டுக்குள் போனாள்.

''வரும் வழியில் சப் ஜட்ஜ் மாமா என்னைக் கூப்பிட்டுப் பேசினார்.''

''என்னவாம்?'' — தன் பரீட்சை விஷயத்தில் தனக்கு அவர் உதவவில்லை என்ற குரோதம் அவள் மனத்தில் இருந்தது.

''உன் ஜாதகத்தைக் கேட்டார்!''

''அப்பா! 'பிளீஸ்' கொடுக்காதேங்கோ!'' என்று உணர்ச்சியுடன் கத்தினாள்.

''என்னடி கத்தறே?'' என்று கேட்டுக் கொண்டே அவள் தாயார் வந்தாள்.

ராமதுரை சிரித்துக் கொண்டே, ''ஆபீஸில் இருந்து வரும்போது வழியில் சப் ஜட்ஜ் மாமா என்னைக் கூப்பிட்டு ஹேமாவின் ஜாதகத்தைக் கொண்டு வந்து தரும்படி சொன்னார். ஹேமா தரக்கூடாது என்று கத்துகிறாள்'' என்றார்.

''பின்னே என்னவாம், அம்மா? அந்தக் கிழவரிடத்தில் எவ்வளவு வேண்டிக்கொண்டேன்! அவர் பின்னாலிடத்தில் ஒரு வார்த்தை சொல்லி என்னை 'செலக்ட்' பண்ணச் செய்யவில்லை! அவருடைய சிநேகம் ஒன்றும் நமக்கு வேண்டியதில்லை!''

''யாருக்குப் பார்க்க வேண்டுமாம் ஜாதகம்? பையன் யாராம்?'' என்று அலமு கேட்டாள்.

''ஏதோ அவருக்குத் தெரிந்த இடமாம்; நல்ல இடம்னுதான் சொன்னார்.''

''அப்பா, அந்தக் கிழவருக்கு நாம் மானமாக வாழ்வது பிடிக்கவில்லை! பிரியமாகப் பேசுகிறாரேன்னு பார்த்தேன்! வஞ்சகர்!''

''சேச்சே! அப்படியெல்லாம் சொல்லாதே! உண்மையிலேயே உனக்குக் கணக்கிலே ரொம்பக் கொஞ்சமாக 'மார்க்' வந்திருக்கும்; அவ



ரால் உனக்கு உதவ முடியாத நிலையில் இருப்பார் ...இல்லாவிட்டால்,...!''

''அப்பா, நீங்க அவரைச் சரியாப் புரிஞ்சு கொள்ளவில்லே!'' என்றான் கோபமாக.

நாலைந்து நாட்களுக்குப்பிறகு ஒரு நாள் மாலை ராமதுரை அலமேலுவிடம் வாசுதேவாச்சாரியார் ஹேமாவின் ஜாதகத்தைத் திரும்பவும் கேட்டதாகச் சொன்னார். அப்போது ஹேமா வீட்டில் இல்லை.

''கல்யாணம் கூடுகிறதோ இல்லையோ, ஜாதகத்தைக் கொடுத்து வையுங்களேன். ஜாதகம் கொடுக்கவில்லே என்ற பொல்லாப்பு எதற்கு வர வேண்டும்?'' என்று அலமு யோசனை கூறினாள்.



''இந்த லவ் லெட்டரை ஒன் பிளஸ் த்ரீ டைப் பண்ணிக் கொண்டா. நிர்மலா, ஜானகி, கமலா, ஷோபாவுக்கு அனுப்பி வைக்கணும்!''

அடுத்த நாள் ராமதுரை ஜாதகத்தை வாசுதேவாச்சாரியாரிடம் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வந்தார்.

மூன்றாம் நாள் ராமதுரை வீட்டுக்குப் பரபரப்புடன் வந்தார். ''அலமு, அலமு! இங்கே வாயேன்!'' என்று கூப்பிட்டார்.

''என்னவாம்?'' என்று வந்தாள் கையில் கரண்டியுடன்.

''ஹேமாவின் ஜாதகம் நன்றாகப் பொருந்தியிருக்காம். நாளைக்குப் பெண்ணைப் பார்க்க வருகிறார்களாம். சப் ஜட்ஜ் மாமா சொன்னார்....''

''.......''

''பையன் மதுரையில் 'ரிசர்வ் பாங்கி'யில் ஆபீசராக இருக்கிறானாம்; எழுநூறு ரூபாய் சம்பளமாம்...''

''அவ்வளவு பெரிய இடத்துக்கு ஏற்றாற்போல் சீர் செனத்தியெல்லாம் நம்மால் செய்ய முடியுமா?'' என்று அலமு தன் கவலையைச் சொன்னாள்.

''அதைப் பற்றிக்கூடக் கேட்டேன். அவரே முந்திக்கொண்டு 'எனக்கு எல்லாம் தெரியுமடா ராமதுரை! அதை நான் பார்த்துக்கிறேன்'னு சொன்னார். இப்ப என்ன செய்யலாம்....?''

''வந்து பார்க்கட்டுமே!'' என்றாள் அலமு.

ஹேமாவுக்கு விஷயம் தெரிந்ததும் அவளுக்கு ஒரே கோபம். ஆர்ப்பாட்டம் செய்தாள்; அழுதாள். 'நான் ஒருகாலும் அந்த வஞ்சகப் பிராமணர் ஏற்பாடு செய்கிற இடத்தை ஒப்புக் கொள்ள மாட்டேன்!'' என்று ஆத்திரத்துடன் கத்தினாள்.

அலமேலு தன்னால் ஆனமட்டும் ஹேமாவுக்குச் சமாதானம் சொல்லிப் பார்த்தாள்.

''ஹேமா! இப்படியெல்லாம் முரண்டு பிடித்தால் என்ன செய்யறதம்மா?'' என்று கண் கலங்கக் கேட்டாள்.

''அம்மா, இதோ பார், நீங்க ரெண்டு பேரும் பார்த்து ஏற்பாடு செய்கிறவர் பிச்சைக்காரனாயிருந்தாலும் சரி, குருடு, நொண்டியாக இருந்தாலும் சரி, மறுபேச்சில்லாமல் ஒத்துக் கொள்ளுகிறேன். ஆனால் அந்தப் பொல்லாத கிழவர் சொல்கிற இடத்தை மட்டும் ஒத்துக் கொள்ள முடியாது, அம்மா!'', என்று நிர்மானமாகச் சொல்லிவிட்டாள். வெறி பிடித்தவள் போலவே கத்தித் தீர்த்தாள் அவள்.

மறுநாள் வாசுதேவாச்சாரியார் பிள்ளை வீட்டாரை அழைத்து வந்தார். கல்யாணம் செய்து கொள்ளப் போகும் பையன் வரவில்லை. அவனுடைய தாயாரும் தமக்கையும் ஹேமாவைப் பார்க்க வந்தார்கள்.

வழக்கமான வரவேற்பு வைபவங்கள் நடந்தன.

ஹேமா பிள்ளையின் தாயாருக்கு நமஸ்காரம் செய்தாள். ஆனால் பக்கத்திலிருந்த வாசுதேவாச்சாரியாருக்கு மட்டும் நமஸ்காரம் செய்யவில்லை. ராமதுரை சாடை காட்டியும் கூட ஹேமா கண்டுகொண்டதாகக் காட்டிக்கொள்ளவில்லை.

பையனின் தாயார் ஹேமாவிடம் பேச்சுக் கொடுத்தாள். ''ஒரு பாட்டுப் பாடேன்!''

''எனக்குப் பாட்டு வராது.'' குரலில் அலட்சியம் தொனித்தது.

அவளுடைய பெற்றோர் இருவருக்கும் தூக்கிவாரிப் போட்டது. ஹேமாவுக்கு ஏழு வயதிலிருந்தே பாட்டுக் கற்றுக் கொடுத்திருந்தார்கள். அவளுக்கும் நல்ல குரல் வாய்த்திருந்தது. ஹேமாவின் போக்கை அவர்களால் அறிந்து கொள்ள முடியவில்லை.

வாசுதேவாச்சாரியாருக்கு மட்டும் ஹேமாவின் மனப்பாங்கு ஓரளவு புரிந்தது. தம்மீது அவள் கொண்டிருக்கும் வெறுப்புதான் அவளை அவ்வாறு செய்யச் சொல்கிறது என்பதை அவர் அறியாமல் இல்லை.

கள்ளச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே ''நீ நன்றாகப் பாடுவாய் என்பது எனக்குத் தெரியும், ஹேமா! ரொம்ப பிகு செய்யாதே!.... ஒரே ஒரு பாட்டு'' என்றார்.

''எனக்குத் தொண்டை கட்டிக்கொண்டிருக்கிறது. பாட முடியாது'' என்று வெடுக்கென்று கூறிவிட்டு உள்ளே போய்விட்டாள்.

எல்லோருடைய முகங்களிலும் அசடு வழிந்தது.

பையனின் தாயாருக்கு என்ன தோன்றிற்றோ, திடீரென்று எழுந்து, ''வாருங்கள் போகலாம். நல்ல சம்பந்தம் பார்க்க வந்தோம்!'' என்று கிளம்பி விட்டாள்.

ராமதுரைக்கும் அலமேலுவுக்கும் ஹேமா இப்படி வேண்டுமென்றே தட்டிக் கழித்து விட்டாளே என்று கோபம் கோபமாக வந்தது.

இரண்டு வாரங்களுக்கும் பிறகு ராமதுரை அலமேலுவிடம் காதோடு ரகசியமாக ஏதோ பேசிவிட்டு, ''அவனை ஒரு வார்த்தை கேட்டு விடு; பிறகு முன்போல் ஏதாவது மானக் கேடாக நடந்து கொண்டால் நான் சும்மா இருக்க மாட்டேன்'' என்று உரக்கக் கூறினார்.

''ஹேமா, கேட்டாயா, அப்பா சொன்னதை...?''

''என்ன அம்மா?''

''அவர் ஆபீஸிலே ஒருத்தர் ஒரு வரனைப் பத்திச் சொல்லியிருக்காராம். பையனுக்கு மனம் ஒப்பிவிட்டால் அவன் பெற்றோர்கள் குறுக்கே நிற்க மாட்டார்களாம். உன்னைப் பார்க்க வருவானாம். வரச் சொல்லலாமா? உன் இஷ்டம் என்ன?''

''என்னம்மா, இப்படிக் கேட்கிறாய்? நீங்க யாரைப் பார்த்துச் செய்துகொள் என்றாலும் நான் தடை சொல்ல மாட்டேன், அம்மா!''

''ஹூம், அன்று சப் ஜட்ஜ் மாமா வந்தபோது....''

''அம்மா, அந்த விஷயத்தை மட்டும் எடுக்காதே.''

''பையன் வந்து ஏதாவது கேட்டால், குதர்க்கமாகப் பேசக்கூடாது. தெரியுமா?''

''இல்லே, அம்மா!''

''பாடச் சொன்னால், பாடணும்!''

''பாடறேனம்மா!'' — ஹேமாவுக்கு அழுகையே வந்து விட்டது.

அலமேலுவுக்குக் கூட வருத்தமாகத்தான் இருந்தது. இவ்வளவு நல்ல சாதுவான பெண்ணை நாம் கோபித்துக் கொள்ளுகிறோமே என்று இதயத்தைப் பிழிந்தெடுத்தது.

அடுத்த வாரம் ஹேமாவைப் பெண்பார்க்கப் பையன் வந்தான். பையன் நல்ல உயரம். சுருள் சுருளாகக் கிராப்பும் நவீனமாக வெகு ஜோராய் இருந்தான். தீர்க்க விழிகள்; முகத்தில் அறிவின் ஒளி. எல்லாருக்குமே பையனைப் பிடித்திருந்தது. அவன் தனியாக வந்திருந்தாலும், எல்லாருடனும் 'கலகல'வென்று பேசினான். இரண்டு மூன்று 'ஜோக்'குகள் அடித்தான். தனக்கு ஹேமாவைப் பிடித்திருக்கிறது என்ற உண்மையை வாய் விட்டுச் சொல்லாமலே யாவரும் அறியும்படி நடந்து கொண்டான்.

ஹேமாவுக்கும் அவனைப் பிடித்திருந்தது.

எல்லாரும் எதிர்பார்த்தபடியே அந்தப் பையன் பெற்றோரிடமிருந்து சம்மதம் தெரிவித்துக் கடிதம் வந்தது. ராமதுரையும் அலமுவும் கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் பரபரப்புடன் செய்வதில் முனைந்தார்கள்.

எல்லாரையும் விட ஹேமாவுக்குத்தான் மகிழ்ச்சி அதிகமாக இருந்தது. ஆம், தெருவில் இருந்த அவ்வளவு பேருடைய மரியாதைக்கும் அன்புக்கும் பாத்திரரான 'சப் ஜட்ஜ் மாமா'வின் முகத்தில் அவள் கரி தீற்றப் போகிறாள். தான் உத்தியோகத்தில் அமர்வதைத் தடுத்து எவருக்கோ தன்னைப் பிணைத்து விடவேண்டும் என்ற அவர் 'கெட்ட எண்ண'த்தை முறியடித்துவிட்ட வெற்றிக் களிப்பும், அவர் பார்த்த இடத்தைவிட நல்ல இடமாகத் தனக்குக் குதிர்ந்ததில் ஏற்பட்ட மகிழ்ச்சியும் அவளுக்கு ஆகாயத்தில் பறப்பது போன்ற உணர்ச்சியை ஏற்படுத்தின.

ஃ ஃ ஃ

கல்யாணத்துக்கு முதல்நாள்; அன்று மாலை மாப்பிள்ளை அழைப்புக்கு ஏற்பாடாகியிருந்தது. பிற்பகல் நான்கு மணியிருக்கும். பையன் வீட்டார் இறங்கியிருந்த விடுதியிலிருந்து ஹேமாவைப் பார்க்கக் கூப்பிடுவதாக ஒரு பெண் வந்து அழைத்தாள். ஹேமாவை அழைத்துக் கொண்டு அலமுவே நேரில் அங்கே போனாள். அங்கே ஒரே அமர்க்களமாக இருந்தது. மூலைக்கு மூலை பெண்கள் உட்கார்ந்து கொண்டு தலை வாரிப் பின்னிக் கொண்டும், ஜானவாச ஊர்வலத்துக்கு 'டிரஸ்' செய்துகொண்டும் இருந்தார்கள். சிரிப்பும் கொம்மாளமுமாகக் 'கல்யாணக் களை'யாக இருந்தது. குழந்தைகள் உள்ளுக்கும் வெளிக்குமாக ஓடியாடிக் கொண்டிருந்தார்கள்.

அதோ, அங்கே யார்? அலமுவின் மூச்சு அப்படியே நின்று விட்டது. ஹேமா பக்கத்தில் தாங்கிக்கொள்ள இருந்திராவிட்டால் மயங்கிக் கீழே விழுந்திருப்பாள்! ஆம். அது வாசுதேவாச்சாரியாருடன் பெண் பார்க்க வந்த அதே அம்மாள்தான்.

அந்த அம்மாள் எங்கே இங்கு வந்தாள்? பையனுக்குக் கிட்டிய உறவாக இருப்பாளோ? அல்லது தெரிந்தவளாக இருப்பாளோ?

மூளை ஆராய்ந்து கொண்டிருக்கும்போதே அகலமாகச் சரிகை போட்ட காஞ்சீபுரம் பட்டுப் புடவையை வெகு லாகவமாக அணிந்து கொண்டிருந்த அந்த அம்மாளே எழுந்து வந்து ''வாங்கோ, வாங்கோ! வா, ஹேமா!'' என்று கூப்பிட்டாள்.

அலமேலுவுக்கு அந்த அம்மாளுடன் எப்படி முகம் கொடுத்துப் பேசுவது என்றே தெரியவில்லை. கல்யாணச் சந்தடியில் அந்தப் பழைய சம்பவத்தை எடுத்துக் கூறி விபரீதத்தை உண்டாக்கி விட்டால் என்ன செய்வது?

அதே சமயத்தில் உள்ளே நுழைந்த வாசுதேவாச்சாரியாரைக் கண்டதும், அந்த அம்மாள், ''அப்பா, வா! வா! சம்பந்தியம்மாள்கூட என்னைக் கண்டதும் திக்பிரமை பிடிச்சு நின்னுவிட்டாள்! நாளைக்குக் கல்யாணத்தில் நலங்கிலாவது ஹேமா பாடுவாளா மாட்டாளா, நீயே கேட்டுவிடு! இல்லே, நீ உத்தியோகம் பண்ணி வைக்காத கோபம் இன்னும் இருக்கான்னு கேளு'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள்.

அலமுவுக்கு ஒன்றும் புரியவில்லை. ஹேமாவுக்கோ...?

''என்ன ஹேமா! உன்னைக் கேவலம் ஒரு 'கிளார்க்' வேலையில் அமர்த்துவதில் எனக்கு இஷ்டமில்லை! என் பெண் வயிற்றுப் பேரனுக்கு அந்தரங்கக் காரியதரிசி, காஷியர், மானேஜர் எல்லாமாக இருக்கும் நிரந்தர உத்தியோகத்தைச் செய்து வைக்க வேண்டுமென்று ஆசைப்பட்டேன். அது முடிந்தது... இன்னும் இந்த 'வஞ்சகக் கிழவன்' பேரில் உனக்குக் கோபந்தானா?''

''என்னை மன்னித்துவிடுங்கோ, தாத்தா!'' என்று அடுத்த நிமிடம் வாசுதேவாச்சாரியார் காலில் விழுந்து சேவித்தாள் ஹேமா!

# வட்ட மேஜை

★ சிறையா? திருடர்கள் பள்ளிக்கூடமா?

குற்றவாளிகளைச் சிறைக்கு அனுப்புவதன் மூலநோக்கம், அவர்களைச் சீர்திருத்துவதற்காகத்தான் என்பது அனைவரும் அறிந்த உண்மை. சீர்திருத்தக் கூடங்களாக இருக்க வேண்டிய சிறைச்சாலைகள் உண்மையிலேயே அவ்விதம் இயங்கி வருகின்றனவா என்றால், கிடையாது என்று வருத்தத்துடன் கூற வேண்டியுள்ளது.

முதன் முறையாகக் குற்றம் செய்த ஒருவன் சிறையில் இருக்கும் காலத்தில், அவன் அங்குள்ள மற்றக் குற்றவாளிகளுடன் பழகுவதால் அவனுக்குக் குற்றம் செய்யும் அதே மனப்பான்மை அவனது நெஞ்சிலே நன்றாகப் பதிந்து விடுகிறது. அவன் விடுதலையடைந்தபின்பு அவனது புனர்வாழ்வுக்காக அரசாங்கம் ஏதாவது வழி வகை செய்திருக்கிறதா என்றால், அதுவுமில்லை! ஆனால் விடுதலை செய்யப்பட்டவனின் பெயர் போலீஸ் ஸ்டேஷனில் பதிவு செய்யப்பட்டு மாஜிக் குற்றவாளிகளின் பட்டியலில் இடம் பெறுகிறது. மேலும், விடுதலையாகி வெளியே வந்த குற்றவாளி தனது குடும்பத்திலுள்ளவர்களாலும் 'சிறைக்குப் போனவன்' என்ற அவகேடான பெயருக்கும் அவமானத்துக்கும் உள்ளாகிறான். இத்தகைய காரணங்களால் அவனுக்கு உலகத்தில் வாழ இடம் கிடைக்காமல் போகிறது. பஞ்சையாக, பராரியாக, நாதியற்றவனாக ஆகிவிட்ட அவன் உலகத்தில் எப்படியும் உயிர் வாழ வேண்டும் என்ற நிர்ப்பந்தத்துக்கும் சூழ்நிலைக்கும் உள்ளாகி மீண்டும் ஏதாகிலும் ஒரு குற்றத்தைச் செய்யத் துணிகிறான். ஆனால் சட்டத்தின் கண்களிலிருந்து தப்பி அவன் சில நாட்கள்தான் அவ்விதம் வாழ முடிகிறது. பிறகு ஒரு நாள் அவன் சட்டத்தின் இரும்புப் பிடிக்கு இலக்காகி மீண்டும் சிறைக்கு அனுப்பப்படுகிறான். இவ்வாறு ஒரு முறை சிறை சென்றவனின் வாழ்க்கைச் சக்கரம் மீண்டும் மீண்டும் சிறையிலேயே சுழன்று கொண்டிருக்கிறது.

சிறையிலிருக்கும் எந்த ஒரு சிறைவாசியும் தனது குறைகளை எடுத்துச் சொல்லச் சிறையின் சீர்திருத்த விதிமுறைகள் இடமளிக்கின்றன. ஆனால் சிறையில் நடப்பது முற்றிலும் வேறு! யாராகிலும் ஒரு சிறைவாசி உணவு சம்பந்தமாக உள்ள சீர்கேட்டைப் பற்றி அதிகாரிகளுக்கு எடுத்துச் சொன்னால்கூட அது ஒரு பெரிய குற்றமாகக் கருதப்படுகிறது.

உணவு சம்பந்தமாக உள்ள குறைபாடுகள் எதைப் பற்றியும் புகார் கூறாமலிருக்கும் ஒரு சிறைவாசி மிகவும் நன்னடத்தையுடன் நடப்பவன் என்று சிறை அதிகாரியால் கருதப்படுகிறது! எனவே, சிறைகளில் பழைய குற்றவாளிகளாக இருப்பவர்கள் சிறை அதிகாரிகளிடம் எவ்விதப் புகாரும் கூறமாட்டார்கள். அவர்கள் மீதுதான் அதிகாரிகளுக்கு நம்பிக்கை. அவர்களிடம்தான் அதிகாரிகள் நன்றாகப் பழகுவார்கள்.

இந்தச் சூழ்நிலையில் நுழையும் புதிய குற்றவாளிகள் இருந்துவது எப்படி? குற்றவாளிகளைச் சீர்திருத்துவதற்காக இருக்க வேண்டிய சிறைக் கூடங்கள், திருடர்கள் பள்ளிக்கூடங்களாக இருக்கின்றன! இத்தகைய நிலை நீடித்துக் கொண்டேயிருந்தால் சமுதாயத்தின் நிலை என்ன ஆவது? குற்றவாளிகளைச் சீர்திருத்துவதற்கான சிறந்த மார்க்கம் என்ன?

குற்றவாளிகளைச் சிறையில் வைக்கும் மூல நோக்கமே அவர்கள் சிறிது காலம் சமுதாயத்திலிருந்து பிரிக்கப்பட்டு உழைத்து வேலை செய்து ஊதியம் தேடக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதுதான். குற்றவாளிகள் சிறை வைக்கப்பட்டபின் அவர்களது குடும்பத்திலுள்ள பெற்றோர்கள், மனைவி, குழந்தைகள் ஜீவனத்துக்கு வழியின்றிப் பல துயரங்களை அனுபவிப்பார்கள். சிறைத் தண்டனை அடைந்தவர்கள் சிறையிலிருக்கும் காலத்தில் சிறையில் அவரவர்கள் செய்யும் வேலைக்கு ஏற்றபடி தினசரி 50 நயாபைசா முதல் ரூ. 1-50 வரை அவர்களுக்குக் கூலியை நிர்ணயித்து, மாதம் ஒன்றுக்குக் கிடைக்கும் மொத்தக் கூலியில் பாதியை அவல நிலையிலிருக்கும் அவர்களது குடும்பத்துக்கும், மீதியுள்ள பாதியை அவர்களுக்குக் கூப்பன்களாகக் கொடுத்துச் சிறை விற்பனை நிலையத்தின் (கான்டீன்) மூலம் அவர்கள் தங்களுக்கு விருப்பமான பொருளைப் பெறவும் அரசாங்கம் வழி வகை செய்ய வேண்டும். இத்தகைய சீர்திருத்த முறையினால் சிறையிலுள்ள தொழிற்சாலைகளில் வேலையும் நன்றாக நடக்கும். சிறைவாசிகளுக்கும் ஊக்கமுடன் வேலை செய்ய உற்சாகம் பிறக்கும். அவர்களின் குடும்பங்களுக்கும் ஓரளவு வருமானம் கிடைக்க மார்க்கம் ஏற்படும்.

குற்ற மனப்பான்மையை மாற்ற மனத்தத்துவ நிபுணர்கள் சிறை அதிகாரிகளாக நியமிக்கப்பட வேண்டும். விடுதலையான குற்றவாளிகளை மாஜிக் குற்றவாளிகள் பட்டியலில் போலீஸ் ஸ்டேஷனில் வைத்துக் கண்காணிப்பதில் பயனில்லை; ஆனால் விடுதலையானவர்கள் சிறையில் தேர்ச்சி பெற்ற தொழிலுக்கு ஏற்றபடி அவர்களுக்கு வேலைவாய்ப்பு ஏற்படுத்த அரசாங்கம் வழி செய்ய வேண்டும்.

குற்றவாளிகளாக இருப்பவர்கள் பிறவியிலேயே தோன்றுபவர்கள் அல்ல! ஆனால் குற்றவாளிகள் சமுதாயத்தினால் உண்டாக்கப்படுகிறவர்கள்! இந்தப் பேருண்மையைப் பல வேறு நாடுகளில் உள்ள தலைவர்கள் அனைவரும் ஒப்புக்கொண்டுள்ளனர்.

கர்நூல் ஜி. வெங்கடேசவராலு

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10




LPE Aiyars, S. 97. TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# அறிந்தீர்களா ?
# இதுதான்
# உங்கள்
# பனாமா

தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப் புகையிலைகளின் கலவைப் பல்குக தன்மையான புகையும்—அதுவே உங்கள் பனாமா!

நாடெங்கும் நல்லின்பம் பரப்பும் மக்கள் ரசமாகிய பனாமா ஒத்த இனத்திலே உன்னத விற்பனையுள்ள ரகமாகும்.

நாட்டின் பல பகுதிகளிலே தலைசிறந்த ரகமாகத் திகழுவதும் உங்கள் பனாமா.

இன்று மக்கள் மனங்கவர்ந்துள்ள இருபதடங்கிய உறையினைப் பல்லாண்டுகளுக்கு முன் தோற்றுவித்த ரகமே பனாமாதான்.

பிரத்தியேகத் தயாரிப்பாளர்கள்:
கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்.
பம்பாய்-56

...தில் இத்தகைய
...ஸ்தாபனங்களில் மிகப்பெரியது




இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை

GT. (P) 635-C Greens' Advtg.